III.—GOVERNMENT BILL.

THE MADRAS CULTIVATING TENANTS PROTECTION AND PAYMENT OF FAIR RENT (AMENDMENT) BILL, 1958 (L.A. BILL NO. 1 OF 1958).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg to present the report of the Joint Select Committee on the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958) [a] and move— 9-10 a.m

"That the Bill be dropped."

I may submit that another Bill will have to be prepared in accordance with the recommendations of the Joint Select Committee.

SRI V. K. RAMASWAMI MUDALIYAR : Sir, I went to know from the Hon. Minister whether there is any provision according to which the Bill can be withdrawn at this stage.

MR. SPEAKER : At any stage, the Bill can be withdrawn. The Hon. Minister has just now said that the Government are going to bring in a comprehensive Bill.

THE HON. SRI C. SUBRAMANIAM : It is only in accordance with the recommendations of the Joint Select Committee we are withdrawing the Bill.

MR. SPEAKER : The question is—

"That the Madras Cultivating Tenants Protection and Payment of Fair Rent (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 1 of 1958) be dropped."

The Motion was put and carried and the Bill was dropped.

IV.—BUDGET FOR THE YEAR 1958-59—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958-59.

DEMAND XXII—HARIJAN UPLIFT.

THE HON. SRI P. KAKKAN : Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,33,44,500 under Demand XXII—Harijan Uplift."

MR. SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,33,44,500 under Demand XXII—Harijan Uplift."

Will the hon. Member, Mr. Jagannathan move his cut motion?

[a] Printed as Appendix III on pages 352-354 infra.

[24th March 1958

SRI M. JAGANNATHAN : Sir, I move—

"That the allotment of Rs. 2,33,44,500 under Demand XXII —Harijan Uplift be reduced by Rs. 100."

MR. SPEAKER : மந்திரியவர்களின் மான்யக் கோரிக்கையையும் ஜகன்னாதன் அவர்களின் வெட்டுப் பிரேரேணையும் நான் சபை முன் விவாதத்திற்கு வைக்கிறேன். மந்திரி அவர்களுக்கு பதில் சொல்ல எவ்வளவு மணி நேரம் வேண்டும் ?

THE HON. SRI P. KAKKAN: முக்கால் மணி நேரம்.

MR. SPEAKER : மூன்றரை மணி நேரம் இருக்கிறது. அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் 10 நிமிடம் கொடுக்கிறேன். ஜகன்னாதன் அவர்களுக்கு 15 நிமிடம் கொடுக்கிறேன். கடைசியில் எதிர் கட்சித் தலைவர்கள் இருவர் பேசவேண்டுமென்று ஒப்பந்தம் இருக்கிறது. அதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு எனக்கு பெயர்கள் கொடுக்கவேண்டும். ஏனெனில், காங்கிரஸ் கொரடா இதுவரையில் 12 பெயர்களை கொடுத்திருக்கிறார்கள். நாஷனல் டெமாக்ராட்டிக் காங்கிரஸ் 4 பெயர்களை கொடுத்திருக்கிறார்கள். இதர கட்சிகள் இன்னும் கொடுக்கவில்லை. இன்டிபென்டன்ட் ஒருவர் பெயர் கொடுத்திருக்கிறார். ஆகவே கொரடாக்கள் பெயர்கள் கொடுக்கும் போது கொஞ்சம் யோசித்துக்கொடுக்க வேண்டும். அங்கத்தினர்கள் 10 நிமிஷத்துக்கு மேல் எடுக்கக்கூடாது. இதற்காக அங்கத்தினர்கள் என் மேல் கோபித்துக்கொள்ளக்கூடாது. 10 நிமிஷத்துக்குக் கம்மியாக கொடுத்தால் பேசமுடியாது. ஆகவே, இதையெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லிக்கொண்டு ஜகன்னாதன் அவர்களை பேச அழைக்கிறேன்.

SRI M. JAGANNATHAN : மதிப்பிற்குரிய சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நான் கொண்டுவந்துள்ள இந்த வெட்டுப் பிரேரணையானது, நம்முடைய மாநிலத்தில் இருக்கிற ஹரிஜன மக்களின் பொருளாதார வாழ்க்கையிலும் பின்தங்கிய மக்களின் பொருளாதார வாழ்க்கையிலும், நல்ல பல திட்டங்களைத் தீட்டி அவர்கள் முன்னேற்றம் அடைவதற்கு சர்க்கார் இதுவரையில் தவறிவிட்டார்கள் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான். நம் நாடு சுதந்திரம் பெற்ற அன்று முதல் இன்றுவரை சர்க்கார் ஹரிஜன முன்னேற்றத்திற்காக ஏதோ சில லட்சக்கணக்கான தொகைகளை ஒதுக்கி வைத்து ஹரிஜன முன்னேற்ற வேலைகளை அவர்கள் செய்துகொண்டு வருகிறார்கள். அதை நான் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் அவர்கள் இதுவரை செய்துகொண்டு வந்துள்ள ஹரிஜன முன்னேற்ற வேலைகளினால் ஹரிஜனங்களின் பொருளாதார நிலைமை உயர்ந்திருக்கிறதா என்று பார்ப்போமேயானால், அதைப்பற்றி நாம் சற்று சிந்தித்துப் பார்த்தால் எல்லோரும் வருத்தப்படக்கூடிய நிலையில்தான் இருக்கிறோம். இதுவரையில், அரசாங்கத்தின் கொள்கையானது, அழுகிற பிள்ளைக்கு வாழைப்பழத்தைக் காட்டுவதுபோல்தான் இருக்கிறதே தவிர உண்மையிலே ஹரிஜன மக்களின் அடிப்படையான பிரச்னைகளுக்கு ஒரு நிரந்தரமான பரிகாரம் காண வழிவகைகள் செய்ய சர்க்கார் இதுவரையில் ஒன்றுமே செய்யவில்லை. ஏதோ ஆங்காங்கு சில நூற்றுக்கணக்கான மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் மாத்திரம் கொடுத்துவிட்டால் மட்டும், லட்சக்கணக்கான ஹரிஜன மக்கள், வறுமையாலும், பட்டினியாலும், பஞ்சத்தாலும் வாடி வதங்கித் துன்பப்படுகிற இந்த ஹரிஜன மக்களின் துயரம் கிஞ்சித்தேனும் குறைந்துவிடாது என்பதை சர்க்கார் உணரவேண்டும். ஆகவே, நான் சொல்கிறேன், சர்க்கார் ஹரிஜன மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காக நல்ல பல திட்டங்களைத் தீட்டத் தவறிவிட்டார்கள். அவர்களின் பொருளாதார முன்னேற்றத்தில், அக்கறை காட்டுவதற்கு சர்க்கார் இதுவரையில் முன் வரவில்லை என்பதை சுட்டிக் காட்டத்தான் இந்த வெட்டுப் பிரேரணையை நான் கொண்டுவந்துள்ளேன். இந்த வருட வரவு செலவுத்திட்டத்திலே, சர்க்கார் ஹரிஜன முன்னேற்றத்திற்காக சுமார் 2 கோடி 33 லட்சத்து 45 ஆயிரம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். நாம் அதைப் பற்றி ஓரளவு பெருமை பட வேண்டியதுதான். இப்படி ஒதுக்கப்

24th March 1958] [Sri M. Jagannathan]

படும் தொகை உண்மையிலே ஹரிஜனங்களுக்கும் பின் தங்கிய மக்களுக்கும் பயன்படுகிறதா, காரியாம்சத்திலே, நடைமுறையிலே இந்தப் பணம் அவர்களுக்கு பயன்படுகிறதா, ஹரிஜன மான்யத்தின் பெயரால் ஒதுக்கப் படும் தொகை ஹரிஜன மக்களுக்கு போய் சேருகிறதா, அவர்களின் நன் மைக்காக அது செலவிடப்படுகிறதா என்று பார்த்தால் அவ்விஷயத்தில் நாம் சந்தேக அபிப்பிராயத்தை தெரிவிக்க கடமைப்பட்டிருக்கிறோம். ஆகவே, சர்க்கார் இனிமேலாவது ஹரிஜன மான்யத்திற்காக ஒதுக்கப்படும் தொகையை நல்ல முறையில் செலவு செய்து ஹரிஜனங்களின் நன்மைக்காக அவர்களின் அடிப்படை பிரச்னைகளுக்கு நிரந்தரமான முறையில் ஒரு தீர்வு காண அந்தத் தொகை செலவிடப்படவேண்டும் என்ற கண் ணோட்டத்துடன் நிர்வாகம் செய்து, அத்தொகை நன்கு செலவிடப்பட்டு ஹரிஜன மக்களையும், பின்தங்கிய மக்களையும் கைதூக்கிவிடவேண்டுமென்று நான் இந்த சந்தர்ப்பத்தில் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். ஹரிஜன மக்களின் சிக்கலான பிரச்னைகளை, அவர்களின் ஜீவாதாரமான பிரச்னை களை தீர்த்து வைக்க போதிய அளவு கணிசமான தொகை ஒதுக்கப்படவில்லை என்பதற்கு உதாரணமாக ஓரிரண்டு விஷயங்களை மாத்திரம் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். முதலாவதாக, ஹரிஜன காலனிகள், அதாவது சேரிகளைப் பார்ப்போம். சேரிகளில் ரோடு வசதியில்லாமல் லட்சக்கணக்கான ஹரிஜன மக்கள் பல ஆயிரக்கணக்கான கிராமங்களில் அவஸ்தைப்படுகிறார்கள். இந்த ஹரிஜன சேரிகளில் ரோடு வசதி செய்துகொடுக்க இந்த வரவு செலவுத் திட்டத்தில் தொகை ஒன்றுமே ஒதுக்கப்படவில்லை. 1956–57-ல் அவர்கள் ஏதோ 11,000 ரூபாய் ஒதுக்கி சில வேலைகள் செய்திருக்கிறார்கள் என்று பார்க்கிறேன். ஆனால் 1957–58லும், 1958–59லும், சர்க்கார் ஹரிஜன காலனிகளுக்கு ரோடு வசதி செய்து கொடுக்க ஹரிஜன மான்யத்தில் எந்த விதமான தொகையும் ஒதுக்கப்படவில்லை என்று நான் வருத்தத்துடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அடுத்தபடியாக, ஹரிஜன சேரிகளில் குடி தண்ணீர் வசதி மிகவும் குறைவாக இருக்கிறது. ஆயிரக்கணக்கான சேரி களில் மக்கள் குடிப்பதற்கு தண்ணீர் இல்லாமல் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சுதந்திரம் வந்து இத்தனை வருஷங்கள் ஆகியும் கூட கிராமங்களில் வாழும் ஹரிஜன மக்களுக்கும், பின்தங்கிய சமு தாயத்தை சேர்ந்த மக்களுக்கும் குடிநீர் வசதி கூட செய்து கொடுக்க இந்த சர்க்கார் முன்வரவில்லை என்றால் அதைப்பற்றி நாம் பெருமைப் படுவதற்கில்லை. இந்த வரவு செலவுத்ததிட்டத்தில் இந்த மாநிலத்தில் இருக்கிற அத்தனை சேரிகளில் வாழும் ஹரிஜன மக்களின் சௌகரியத்திற் காக, அவர்களுக்கு குடிநீர் வசதி செய்து கொடுக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் 3,50,000 ரூபாய்தான் ஒதுக்கிருக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது அதைப் பற்றிநான் உண்மையில் வருத்தப்படுகிறேன். ஏனெனில், நம் மாகாணத்தில் எத்தனையோ ஆயிரக்கணக்கான சேரிகள் இருக்கின்றன. அந்தச் சேரிகளில் குடிதண்ணீர் வசதி இல்லாமல் இருப்பது சர்க்காருக்குத் தெரியும். ஆகவே நான் இதை கூறுகின்ற நேரத்தில். . . . . . .

**The Hon. Sri P. KAKKAN:** கனம் அங்கத்தினர் அவர்கள் சேரி சேரி என்று சொல்லுகிறார்கள். இப்பொழுது அந்த பெயர் ஒழிக்கப் பட்டு காலனி என்று அழைக்கப்பட்டு வருகிறது. ஆகையால் காலனி என்று சொல்லுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**Sri M. JAGANNATHAN:** தலைவர் அவர்களே, இம்மாதிரி 9–2 a.m
ஹரிஜனங்கள் இருக்கும் இடங்களின் பெயரை மாத்திரம் மாத்துவதில் ஒரு அர்த்தமும் கிடையாது. உண்மையாகவே அவர்களுடைய இழி நிலையை மாற்றுவதற்கு ஏதாவது சர்க்கார் திட்டம் வகுத்து அவர்களுடைய பொருளாதார நிலைமையை உயர்த்துவதற்கு வழிவகை செய்தால் பெருமைப் படவேண்டுமே தவிர வெறும் பெயரை மாத்திரம் சொல்லளவில் மாற்றுவதனால் ஹரிஜனங்களுக்கு சமூகத்தில் எந்தவிதமான அந்தஸ்தும், கண்ணியமும் வந்துவிடாது என்பதை தாழ்மையுடன் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். குடிதண்ணீர் பிரசனைக்காக இந்த மாகாணம் பூராவுக்கும் மூன்று லட்சத்தி ஐம்பதாயிரம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். இது மிகவும் வருந்தவேண்டிய விஷயமாய் இருக்கிறது. இன்றைக்கு எத்தனையோ

[Sri M. Jagannathan] [24th March 1958

கிராமங்கள் குடிநீர் வசதி இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கின்றன. அம்மாதிரிப்பட்ட ஒன்றிரண்டு கிராமங்களில்கூட தண்ணீர் வசதி செய்து கொடுக்க இவ்வளவு குறைந்தபட்ச ரூபாயை ஒதுக்கினால் கடலில் பெருங்காயம் கரைத்தது போல்தான் இருக்கும். இதனால் ஹரிஜனங்களுடைய குடிநீர் பிரச்னையை தீர்த்துவிட முடியாது. இதன் மூலம் நாம் ஒரு நல்ல பாடம் கற்றுக்கொள்ள முடிகிறது. இந்த சர்க்கார் வெறும் கண்துடைப்பு வேலையாகத்தான் இதை செய்து வருகிறது என்பதை தவிர ஹரிஜனங்களை முன்னேற்றவேண்டும் என்கின்ற நல்ல மனப் பான்மையுடன் நல்ல மனோபாவத்துடன் இந்த வரவு செலவு திட்டத்தில் பணம் ஒதுக்கவில்லை என்று நன்றாக அறிந்து கொள்ளமுடியும். அதே மாதிரி குடிமனை விஷயத்திலும் இந்த வரவு செலவு திட்டத்தில் நான்கு லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். இன்றைக்கு பல்லாயிரக்கணக்கான ஹரிஜன மக்கள் குடியிருக்க இடம் இல்லாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்த பெரியதொரு பிரச்னையை தீர்ப்பதற்கு வெறும் நான்கு லட்ச ரூபாய் இந்த வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கியிருக்கிறோம் என்று சொன்னால் அதைப்பார்த்து நாம் வருத்தப்படவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். இன்றைக்கு எத்தனையோ ஹரிஜன மக்கள் ஆண்டைகளின் நிலத்தில் குடிசைகட்டி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் இருக்கின்றபொழுது இந்த ஏழை ஹரிஜன மக்கள் ஆண்டைகளிடம் வேலை செய்ததற்கு கொஞ்சம் கூலி அதிகமாக கேட்டால், அதற்காக ஏதாவது கிளர்ச்சி செய்தால் ஆண்டைமார்கள் இந்த ஏழை ஹரிஜன மக்களை துன்படுத்தி சட்டிப்பானைகளை எல்லாம் வெளியே எடுத்துப்போட்டு அவர்களை குடிசையிலிருந்து துரத்திவிடுகிறார்கள். இம்மாதிரியான பரிதாபகரமான நிலைமையில் ஹரிஜன மக்கள் இருந்துகொண்டிருக்கிறார்கள். இவ்விதம் ஹரிஜன மக்கள் குந்த குடிசை இல்லாமல் இருக்கும் இந்த இழி நிலையை போக்குவதற்கு சர்க்கார் அவர்களுக்கு குடிமனை வழங்கவேண்டும். ஆனால் இதற்காக ஏதோ 4 லட்சம் ரூபாயை ஒதுக்கிவிட்டு ஹரிஜனங்களுக்கு அதிகமாக ஒதுக்கியிருக்கிறோம் என்று சொன்னால் அது ஒத்துக்கொள்ள முடியாத ஒரு விஷயமாகும். சர்க்காருக்கு உண்மையிலே இவர்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற எண்ணம் இருக்குமேயானால் இன்றைக்கு ஹரிஜனங்களுடைய ஜீவாதாரமான பிரச்னையாக இருக்கிற இந்த குடிமனை பிரச்னையை தீர்ப்பதற்கு இன்னும் அதிகமான பணத்தை ஒதுக்கியிருக்க வேண்டும். குடிநீர் வசதிக்காக 3 லட்சம் ரூபாய் குடிமனை வசதிக்காக 4 லட்சம் ரூபாய், இவ்விதமாக ஒதுக்கியிருக்கிறோம் என்று சொல்லிவிட்டு அதே போல் மற்ற பல துறைகளுக்கும் ஹரிஜனங்களுக்காக இரண்டு கோடி முப்பத்திமூன்று லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் என்று சொன்னால் உண்மையிலேயே இந்த சர்க்கார் ஹரிஜனங்களுடைய பிரச்னைகளை தீர்ப்பதற்கு செலவு செய்வதற்கா அல்லது வேறு ஏதாவது வீண் செலவு செய்து கொள்ளுவதற்கா என்று என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஹரிஜனங்களுடைய வாழ்க்கையை சீரமைக்கவேண்டுமென்றால் அடிப் படையிலேயே வேலை செய்யவேண்டும். ஹரிஜனங்களுடைய ஜீவாதாரமான பிரச்னையாகிய குடிதண்ணீர் பிரச்னை, குடிமனை பிரச்னை இவைகளை தீர்ப்பதற்கு கணிசமான முறையில் பணம் ஒதுக்கவேண்டும். அதல்லாமல் ஹரிஜன முன்னேற்றத்திற்கு நாங்கள் என்னவெல்லாமோ செய்து கொண்டிருக்கிறோம் என்று கூரை மேல் நின்று கூவி பறைசாற்றுவதில் ஒரு பலனும் இல்லை. ஆகவே இந்த சந்தர்ப்பத்தில் எனக்கு கொடுத்திருக்கிற சமயத்தை வீணாக்காமல் மேலும் ஒன்றிரண்டு கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். சர்க்கார் உண்மையிலேயே ஹரிஜனங்களுடைய பொருளாதார நிலையை உயர்த்துவதற்காக வேண்டிய வேலைகளை செய்யவேண்டும். நம்முடைய மாகாணத்தில் பல இடங்களிலும் ஆயிரக்கனக்கான ஏக்கர் தரிசு நிலங்கள் அனுதையாக கிடைக்கின்றன. அந்த நிலங்களை எல்லாம் நிலமில்லாத இந்த அரிஜன மக்களுக்கும், பின்தங்கிய ஏழை மக்களுக்கும் கொடுத்து அதில் சாகுபடி செய்வதற்கு உபயோகிக்கும்படியான நிலைமையை உண்டுபண்ணி கொடுக்கவேண்டும். இம்மாதிரி கொடுக்கப்பட்ட புறம் போக்கு நிலங்களை எல்லாம் உடனடியாக ஜாரி செய்து கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும். இந்த விஷயத்தில் இதற்கு முன்னால் ரெவின்யூ டிபார்ட்மெண்டிலிருந்து 1949-ம் ஆண்டு ஜூன்

24th March 1958] [Sri M. Jagannathan]

மாதத்தில் 1523-ம் நம்பராக ஒரு ஜி.ஓ. பிறப்பித்திருந்தார்கள். அதில் நிலமில்லாத ஏழை ஹரிஜன மக்களுக்கும் பின் தங்கிய மக்களுக்கும் தரிசு நிலங்களை கொடுப்பதற்கு உத்தரவு பிறப்பித்திருந்தார்கள். மேலும் அதில் ஹரிஜனங்களுக்கும், அரசியல் தியாகிகளுக்கும், மாஜி ராணுவத்தினருக்கும் இந்த புறம்போக்கு நிலங்களை கொடுக்கவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதன் பிரகாரம் எத்தனை ஆயிரம் பேர்களுக்கு நிலங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது என்ற ஒரு புள்ளி விவரங்களும் இல்லை. எனக்கு தெரிந்த வரையில் பெருவாரியான முறையில் ஹரிஜனங்களுக்கு நிலங்களை கொடுத்திருப்பதாக தெரியவில்லை. அதன் பின்னால் 1952-ல் பிறப்பித்த உத்தரவை 1957-ம் நவம்பர் கவனிக்கவேண்டும். அதில் என்ன சொல்லியிருக்கிறது என்றால் இனிமேல் ஹரிஜனங்களுக்கு புறம்போக்கு நிலங்களை இலவசமாக கொடுக்கக் கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதுவரை ஏதோ நிலங்களை அதிகமாக கொடுத்து விட்டது போலவும், இனிமேல் கொடுக்கமுடியாது என்றும் கூறுகின்ற முறையில் தான் 7-7-1952-ல் ரெவின்யூ டிப்பார்ட்மெண்ட் பிறப்பித்த 1957 ஜி.ஓ. வில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இனிமேல் ஹரிஜனங்களுக்கு வால்யூபிள் லாண்ட்ஸ்களை எல்லாம் ஒரு குறிப்பிட்ட விலைக்கு (மார்க்கட்டிங் வால்யூ) தான் கொடுக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். எதற்காக இந்த புதிய உத்தரவை பிறப்பித்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. ஏற்கனவே ஏதோ நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலங்களை ஏழை ஹரிஜன மக்களுக்கும், பின்தங்கிய ஏழை மக்களுக்கும் கொடுத்து விட்டதாக எண்ணிக்கொண்டு அவர்கள் அதன் பிறகு இந்த உத்தரவை கொண்டு வந்து இப்பொது கொஞ்சம் கிடைத்துக்கொண்டிருக்கும் நிலங்களையும் தடை செய்கின்ற முறையில் இதைப்போட்டிருக்கிறார்கள். ஆகவே இந்த உத்தரவை உடனடியாக மாற்றுவதற்கு சர்க்கார் முன் வரவேண்டும். இன்றைக்கு பெரும்பாலும் விவசாயத்தை நம்பி வாழ்க்கை நடத்துகின்ற லட்சக்கணக்கான ஏழை மக்களுக்கு தங்களுக்கு என்று ஒரு செண்ட் பூமி கூட இல்லாமல் இருந்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் நிலங்களை எல்லாம் உடனடியாக ஜாரி செய்து கொடுக்கவேண்டும். இதை செய்து கொடுக்க அரசாங்கத்தார் தவறி விட்டார்கள். இதற்கு இரண்டு காரணங் உண்டு. ஒன்று சர்க்காரில் நிர்வாக திறமை யில்லாமல் இருப்பது. இரண்டாவது ஹரிஜனங்களுக்கும் பின்தங்கிய மக்களுக்கும் வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்ற நல்லெண்ணம் இல்லாமல் இருப்பது. இந்த இரண்டு காரணங்கள் தான் இருக்க முடியும் என்று நினைக்கிறேன். ஹரிஜனங்களுக்கு பொருளாதார ரீதியில் முன்னேற்றம் வந்தால் ஒழிய அவர்கள் சமூகத்தில் எந்த உயர்ந்த அந்தஸ்தையும் பெற்றுக்கொள்ள முடியாது. ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு, "**to treat an internal disease externally**" என்று சொல்லுவார்கள். உள்ளேயிருக்கிற வியாதிக்கு மேலே சிகிச்சை செய்வது போல ஹரிஜனங்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்கு வேண்டிய வேலை செய்வதற்கு பதிலாக வேறு ஏதாவது செய்து கொண்டிருப்பது பெரும் தவறு, என்பது மாத்திரமல்ல, அந்த சமூகத்திற்கே துரோகம் செய்வது போல்தான் ஆகும் என்பதை சொல்லவிரும்புகிறேன். மேலும் இன்றைக்கு ஹரிஜனங்கள் அனைவரும் கிராமங்களில் விவசாய கூலிகளாக இருந்து வருகிறார்கள். அவர்களுக்கு ஒரு குறைந்த பட்ச கூலி நிர்ணயம் செய்ய சர்க்கார் முன் வரவேண்டும். இன்றைக்கு நாட்டில் லட்சகணக்கான விவசாயிகள் தங்கள் நெற்றிவேர்வை நிலத்தில் விழ வேலை செய்தும் தங்கள் உழைப்புக்கேற்ற கூலி பெற முடியாமல் தினம் 4 அணா, 5 அணா என்று சம்பாதித்துதான் தங்கள் வாழ்க்கையை நடத்திக்கொண்டுவருகிறார்கள். இதனால் அவர்கள் வறுமையிலும் பஞ்சத்திலும் கால் வயிற்றுக் கஞ்சிக்கு வழியில்லாமல் துன்பப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே சர்க்கார் குறைந்த பட்ச கூலியை **minimum wages for Agricultural labourers** என்பதை ஏற்படுத்துவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். 1959-ம் வருஷ இறுதிக்குள்ளாவது சர்க்கார் ஒரு கமிட்டியை நியமித்து, குறைந்த கூலியை பரிசீலனைசெய்து, விவசாயவேலை செய்கின்றவர்களுக்கும், ஹரிஜனங்களுக்கும், பின் தங்கிய வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கும், குறைந்த பட்ச கூலியை

[Sri M. Jagannathan] [24th March 1958

நிர்ணயித்து அது கிடைக்க வழி வகை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். மத்திய சர்க்கார் இந்த சர்க்காருக்கு அறிவுரைகள் கூறி யிருக்கிருர்கள் என்று அறிகிறேன். ஆனல் இந்த சர்க்கார் இந்த அறிவுரைகளை கேட்காமலேயே இருக்கிருர்கள். வேண்டுமென்றே கால தாமதம் செய்வது வருந்தத்தக்கது.

9-30 a.m. ஹரிஜனங்கள் பொருளாதாரத்தில் முன்னேறுவதற்கு நல்ல முறையில் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். மேலும் படித்த ஒரு சில ஹரிஜனங்களுக்கு சர்க்கார் உத்தியோகம் கிடைக்காமல், ஹரிஜனங்களிடையே வேலையில்லா திண்டாட்டம் ஆரம்பித்து இருக்கிறது. ஆகையால் அவர்கள் சரியானபடி முன்னேற்றம் அடைய வேண்டுமானல், அவர்களுக்கு சர்க்கார் இலாகாக்களில் உத்தியோகம் கிடைக்கவும், வேலையில்லா திண்டாட்டத்தைப் போக்கவும் திட்டம் வகுத்து வழி வகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பொருளாதார துறையில் ஹரிஜனங்கள் முன்னேறும் வகையில் சர்க்கார் அவர்களுக்கு உதவி செய்வதற்குப் பதிலாக அவர்களை ஏமாற்றிக்கொண்டுதான் வருகி ருர்கள் என்று சொல்லவேண்டும். ஒரு சிலரை பல நாள் ஏமாற்றலாம். பலரை ஒரு சில நாள் ஏமாற்றலாம். எல்லோரையும் எல்லா நாளும் ஏமாற்றுவது என்பது முடியாது. ஆகையால் சர்க்கார் ஹரிஜனங்களை பொருளாதாரத் துறையில் கை தூக்கிவிடுவதற்கு நான் கூறிய ஆலோசனை களை நல்ல வழி வகைகளை செய்து கொடுக்கவேண்டும் என்று சொல்லிக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI K. PONNIAN : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் மராமத்து இலாகா மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் ஹரி ஜன மானயத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். பல ஆயிரக்கணக்கான வருஷங்களாக இந்த நாட்டில் தீண்டாமை என் னும் பேய் இருந்து வந்திருக்கிறது. பெரிய பெரிய மகான்கள் அதை போக்குவதற்கு பலமுறைகளை கையாண்டும் அதை ஒழிக்க முடியவில்லை. கடைசியாக நம் நாட்டு பிதா காந்தியடிகள் அதைப் போக்குவதற்கு வழி வகை செய்து கொடுத்தார்கள். காங்கிரஸ் கட்சி அந்த முறைகளை பின்பற்றி வருகின்றபடியால், தாழ்த்தப்பட்ட மக்கள் படிப்படியாக முன் னேறிக்கொண்டு வருகிருர்கள். படிப்புத் துறையை எடுத்துக்கொண்டாலும் உத்தியோகத் துறையை எடுத்துக்கொண்டாலும், விவசாயத் துறையை எடுத்துக்கொண்டாலும், மற்றும் இன்னும் சகல துறைகளிலும் அவர்கள் படிப்படியாக இந்த 10 ஆண்டுகளாக முன்னேறிக்கொண்டு வருகிருர்கள்.

சாதியை ஒழிக்கவேண்டும் என்று பல கட்சிகள் சொல்லுகின்றன. ஆனல் நடைமுறையில் பார்க்கும்போது அவர்கள் ஒருவிதமான நல்ல காரியமும் செய்வது இல்லை. உதாரணமாக, ஒவ்வொரு மாதமும் 30-ந் தேதி ஹரிஜன தினம் என்று கொண்டாடப்படுகிறது. எந்த எந்த கட்சிகள் ஜாதியை ஒழிக்கவேண்டும் என்று சொல்கின்றனவோ அவையெல்லாம் இந்த தினத்தில் பங்கு எடுத்துக்கொள்வதில்லை. காங்கிரஸ் கட்சிமட்டும் தான் இந்த தினத்தில் பங்கு எடுத்துக்கொண்டு சாதி வித்தியாசத்தை ஒழிக்கவேண்டும், என்று பேசியும் செயலாற்றியும் வருகிறது. காங்கிரஸ் கட்சி இப்பொழுது தான் இம்மாதிரி செய்து கொண்டு வருகிறதா என்று பார்த்தால், கடந்த 30 வருஷங்களாக ஹரிஜனங்கள் முன்னேற்றத்திற் காக ஹாஸ்டல்கள் ஏற்படுத்துவது, ஹரிஜன காலனிகளுக்கு சென்று, அவர்களுக்கு வேண்டிய உடைகள் முதலியவைகளை கொடுப்பது போன்ற வேலைகளை காங்கிரஸ் கட்சி செய்துகொண்டு வருகிறது.

தலைவர் அவர்களே, இன்றைக்கு ஹரிஜன முன்னேற்றத்திற்காக கேட்டிருக்கக்கூடிய தொகையான 2,33,44,500 ரூபாய் போதவே போதாது என்று தான் நான் சொல்வேன். குக்கிராமங்களில் சென்று பார்த்தால், அவர்களுடைய நிலைமையைப் பார்த்து நாம் மிகவும் வேதனைப்படவேண்டி யதாக இருக்கிறது. பெரிய பெரிய நகரங்களிலும் Taluk headquarters-லும் ஒரு சிலஹரிஜனங்கள் முன்னேறிக்கொண்டு இருக்கிருர்கள் என்று சொல்லலாமே தவிர குக்கிராமங்களிலிருக்கும் ஹரிஜனங்களி

24th March 1958] [Sri K. Ponnian]

னுடைய நிலைமை முன்னேறியிருப்பதாக சொல்லமுடியாது. ஹரிஜனங்கள் முன்னேற வேண்டுமானால் சர்க்காரும், தனிப்பட்டவர்களும் அவர்களுக்கு தகுந்த வேலை வாய்ப்புகள் செய்துகொடுக்கவேண்டும். அப்படி அவர்களை முன்னேற்றம் அடையச் செய்வதற்கு சில யோசனைகளை சொல்ல விரும்புகிறேன்.

பணக்காரர்கள் ஹரிஜனக் குழந்தைகளை ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள வேண்டும். சாதி மனப்பான்மை அறவே மறந்துவிடுவதற்காக அவர்கள் வேலை செய்வதற்கு தகுந்த ஊக்கம் அளிக்கவேண்டும். அப்படி பெரிய வீடுகளில் அவர்களை வேலைக்கு அமர்த்திக்கொண்டால் சாதிமனப்பான்மை ஒழிந்துவிடும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

விவசாயம் செய்வதற்கு தகுதியாக உள்ள தர்க்காஸ்து நிலங்களை அவர்களுக்கு கொடுக்கவேண்டும். தர்ம ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான நிலங்களை ஹரிஜனங்கள் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்யும்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது ஹரிஜன ஹாஸ்டல்களில் படிக்கும் பையன்களுக்கு கொடுக்ககூடிய பணம் ரொம்பவும் தாமதித்து கொடுக்கப்படுகிறது. ஆகையால் அது சரியான முறையில் பயன்படுத்த முடியாமல் போகிறது. ஆகையால் கொடுக்கும் பணத்தை காலாகாலத்தில் கொடுக்கும்படி ஏற்பாடு செய்ய வேண்டும். சர்க்கார் நடத்தும் ஹரிஜன ஹாஸ்டல்கள் ஒவ்வொரு வருஷமும் 100-க்கு 25 மாணவர்களையாவது அதிகமாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். தனிப்பட்டவர் நடத்தும் ஹாஸ்டல்களிலும், 100-க்கு 15 அல்லது 20 மாணவர்களை வருஷா வருஷம் அதிகமாக சேர்த்துக்கொள்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். அப்படிச் செய்தால் தான் அவர்கள் சீக்கிரம் முன்னுக்கு வர முடியும்.

15 அல்லது 16 கோடி ரூபாய் செலவில் இன்றைக்கு மதுவிலக்கு அமல் செய்யப்படுகிறது என்றால், கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் குடிப்பார்கள் என்றோ அல்லது கனம் அண்ணாத்துரை அவர்கள் குடிப்பார்கள் என்றோ அமல் செய்யப்படவில்லை. ஏழை ஹரிஜனங்கள் முன்னேறவேண்டும் என்பதற்காகவே அது அமல் செய்யப்படுகிறது. யார் இந்த நன்மையை மறந்தாலும், எந்த கட்சி மறந்தாலும், ஹரிஜனங்களாகிய நாங்கள் இந்த உபகாரத்தை மறக்க முடியாது என்பதை நான் பணிவோடு சொல்லிக் கொள்கிறேன்.

ரைஸ் மில்களுக்கும், ஒட்டல்களுக்கும் சர்க்கார் லைசன்ஸ் கொடுக்கிறது. அப்படி லைசன்ஸ் கொடுக்கும்போது இவ்வளவு ஹரிஜனங்களை வேலைக்கு வைத்துக்கொள்ளவேண்டும் என்று ஓர் உத்திரவு போட்டால் ஹரிஜனங்களுக்கு தகுந்த வேலை வாய்ப்புக்கள் கிடைக்கும் என்று சொல்லி என்னுடைய பேச்சை நிறுத்திக்கொள்கிறேன்.

**Sri R. SUBRAMANIAM :** கனம் சபாநாயகர் அவர்களே, 9–40 a.m.
கனம் மந்திரி அவர்கள் கொண்டு வந்திருக்கும் ஹரிஜன மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். சர்க்கார் ஹரிஜன முன்னேற்றத்திற்காக மிகவும் தாராள மனப்பான்மையுடன் தொகையை ஒதுக்கி, வேலைகள் நடந்து கொண்டு வருகின்றன, இன்னும் நடக்கப் போகின்றன என்பதை அவர்கள் இதுவரை செலவழித்துக் கொண்டு வரக்கூடிய தொகைகளிலிருந்து பார்த்தால் நன்கு புலனாகும். இந்த ஹரிஜன இலாகாவானது 1948–49-ல் லேபர் கமிஷனர் வசமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டது. அப்பொழுது இதற்கு செலவழித்த தொகை ரூ. 26·71 லட்சம். அப்பொழுது ஆந்திராவையும் சேர்த்து இந்தத் தொகை செலவழிக்கப்பட்டது. ஆனால் அதற்குப் பிறகு வருஷா வருஷம் ஹரிஜன் முன்னேற்றத்திற்காக பணம் ஒதுக்கி நல்ல முறையில் வேலை நடந்துகொண்டு வருகிறது. 1956–57-ல் 159·26 லட்சம் செலவழித்திருக்கிறார்கள். இதில் ஹரிஜனங்களுக்காக மட்டும் ரூ. 113·93 லட்சம் செலவழிக்கப்பட்டிருக்கிறது. 1957–58-ல் மொத்தமாக செலவழிக்கப்பட்ட

தொகை ரூ. 210·73 லட்சம். ஹரிஜனங்களுக்காக செலவழிக்கப்பட்டது ரூ. 151·7 லட்சம். அதேமாதிரி 1958–59-ல் சென்ற வருஷத்தில் ஒதுக்கியதை விட 40 லட்சம் ரூபாய் அதிகமாக ஒதுக்கி இருக்கிறார்கள். இந்த பட்ஜெட்டைப் பார்த்தால் 233 லட்சத்தில் 166 லட்சம் ஹரிஜனங்களுக்கு செலவழிப்பதற்காகவே ஒதுக்கப்பட்டிருக்கிறது. நண்பர் ஜகன்னாதன் அவர்கள், ஏதோ ஒரு சில லட்ச ரூபாயை ஒதுக்கிவிட்டால் ஹரிஜனங்கள் ஏமாறிவிட மாட்டார்கள் என்று சொன்னார். இது ஒரு கண் துடைப்பாக இருக்கிறது என்றும் சொன்னார்கள். நான் உண்மையிலேயே சொல்லுகிறேன், இந்த மாதிரி வாதங்களை வெளியிலேயும் போய்ச் சொல்லுவதனால்தான் இப்பொழுது கஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. உதாரணமாக, இப்பொழுது மனைக்கட்டுகள் கட்டும் திட்டத்தை எடுத்துக்கொள்ளுவோம். இதை நான் ஓரளவுக்கு ஆதரிக்கவில்லை என்றாலுங்கூட, அது எந்த அளவுக்கு வேலை நடக்கிறது என்பதை மட்டும் சொல்ல ஆசைப்படுகிறேன். முதலாவதாக, இந்த மனைகள் கட்டி கொடுப்பதற்கு ஆரம்பிக்கும்பொழுது "எங்கள் ஊருக்கு கட்டிக் கொடுங்கள், எங்கள் ஊருக்குக் கட்டிக் கொடுங்கள்" என்று தொல்லை கொடுக்கிறார்கள். "சர்க்கார் ரூபாய் 550 கொடுக்கிறார்கள், நாங்கள் ரூபாய் 200 கொடுக்க வேண்டும். இதை நாங்கள் நிச்சயமாக கொடுத்து விடுகிறோம்" என்று முதலில் சொல்லுகிறார்கள். ஆனால் மனைக்கட்டு கட்டும் வேலை ஆரம்பிக்கப்பட்டவுடன், இந்தப் பணத்தைக் கொடுக்க மாட்டேன் என்கிறார்கள். உதாரணமாக, என்னுடைய தொகுதியில் இந்தத் திட்டத்தின் கீழ் 20 வீடுகள் கட்டுவதை 30 வீடுகளாக ஆக்கப்பட்டது. அதற்காக சர்க்கார் ரூபாய் 550 போக, பாக்கி ரூபாய் 200-ஐ அவர்களே போட்டுக் கொள்வது என்று ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால் இந்த ரூபாய் 200-ஐ எங்களால் எப்படிக் கொடுக்க முடியும் என்று சொன்னார்கள். ஆகவே, அந்த 30 பேர்களுக்கும் கடன் சாங்ஷன் செய்யும்படியாக பிளாக் டெவலப்மெண்ட் ஆபீசர் அவர்களிடம் சொல்லி, அவர்களுக்கெல்லாம் இப்பொழுது ரூபாய் 150 கடன் கொடுக்கப்பட்டிருக்கிறது. பாக்கி ரூபாய் 50-ஐக் கொடுப்பதற்குக்கூட இந்த மாதிரி கட்சிக்காரர்கள் அங்கே சென்று என்ன சொல்லுகிறார்கள் என்றால், சர்க்காரிலே தான் செலவழிக்கிறார்களே, எதற்காக நீங்கள் பணம் போட வேண்டும் என்று பிரசாரம் செய்வதனால், உண்மையிலேயே அவர்கள் எந்த மாதம், எந்தத் தேதியில் கொடுக்கவேண்டுமோ, அந்தத் தவணைக்குள்ளாக கொடுக்க முடிவதில்லை.

மார்ச் மாதம் 31-ம் தேதிக்குள் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படவேண்டும். எத்தனையோ இடங்களில் அஸ்திவார மட்டத்திற்குத்தான் வந்திருக்கிறது. மார்ச் 31-ம் தேதிக்குள் கட்டி முடிக்கப்படுமா, முடியாதா என்பது தெரியவில்லை. எப்படித்தான் இதைச் செய்யப் போகிறார்கள் என்று புரியவில்லை.

**The Hon. Sri P. KAKKAN** : மார்ச் மாதம் 31-ம் தேதிக்குள் கட்டி முடிக்க வேண்டுமென்பது தான் நிபந்தனை. ஆனால், ஜூன் மாதம் வரை மீறும் போகலாம் என்று மத்திய சர்க்காரிடம் கேட்டிருக்கிறோம்.

**Sri R. SUBRAMANIAM** : கூரைமேலிருந்து சிலர் கூவுவதாக ஜெகன்னாதன் சொல்லுகிறார். உண்மையாகவே தீண்டாமை மனப்பான்மையை அகற்றவேண்டுமானால், அதற்காக காங்கிரஸ்காரர்கள் மட்டுமல்ல, எல்லாக் கட்சிகாரர்களும் வேலை செய்தால்தான் தீண்டாமையை ஒழிக்க முடியுமே தவிர, ஒருவர் மீது ஒருவர் குறை சொல்லிக் கொண்டிருந்தால் ஒரு பலனும் ஏற்படாது. ஹரிஜனங்களுடைய அறியாமையையும், வறுமையையும் மற்றும் அவர்கள் படும் கஷ்டங்களை யெல்லாம் கட்சி நலனுக்காக பயன் படுத்திக்கொள்ளலாமே தவிர, அதனால் வேறு எந்தவிதமான நன்மையும் ஏற்படாது. ஹரிஜனங்கள் அறியாதவர்கள், படிக்காதவர்கள், வறுமையால் கஷ்டப் படுகிறவர்கள். அவர்களிடத்தில் போய் இம்மாதிரியான பிரசங்கங்களைச் செய்தால் நம்பத்தான் செய்கிறார்கள். எவ்வளவோ இடங்களுக்குப்போய் ஹரிஜனங்களிடம் "நீங்கள் பணம் கொடுக்க வேண்டியதே இல்லை, பூராவையும் சர்க்காரிடத்தில் வாங்கிவிடலாம், நான் மந்திரியைப் பார்க்கிறேன், அதைச் செய்கிறேன், இதைச் செய்கிறேன்"

24th March 1958] [Sri R. Subramaniam]

என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அவர்களும், நாம் என் பணம் கொடுக்கவேண்டும், சர்க்காரே கொடுத்தால் நமக்கு லாபம் தானே என்று நினைக்கிறார்கள்.

சர்க்காரும் பணத்தை தாராளமாக ஒதுக்கி வேலை செய்துகொண்டு வருகிறார்கள். ஹரிஜனங்கள் எந்தெந்த விதத்தில் முன்னேற்றம் அடைய வேண்டுமோ, அதற்காக சட்டங்களை யெல்லாம் நிறைவேற்றியிருக்கிறார்கள். இனிமேல் சட்டம் செய்ய வேண்டியது அதிகமில்லை. பணம் ஓரளவுக்கு ஒதுக்கிக் கொண்டுதான் வருகிறார்கள். நான் சொல்வது என்னவென்றால், " ஆகாறளவிட்டி தாயினுங் கேடில்லை, போகா றகாலக்கடை " என்று திருவள்ளுவர் சொல்லியிருப்பது போல், ஒதுக்கியிருக்கக் கூடிய பணத்தை நல்ல முறையில் செலவழிக்க வேண்டும். ஹரிஜனங்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்களா, இல்லையா என்று பார்ப்பதற்கு, அவர்களில் எத்தனை பேர் பட்டதாரிகள், எத்தனை பேர் படித்திருக்கிறார்கள், எத்தனை பேருக்கு மத்தியான உணவு அளிக்கப்படுகிறது என்பதை அளவுகோலாக வைக்கக்கூடாது. கிராம மக்கள் எந்த அளவுக்குப் பொருளாதாரத் துறை யில் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பதை அளவுகோலாக வைத் துத்தான் மதிப்பிடவேண்டும். இந்த விதத்தில் பார்க்கும்போது எனக்கு நியாயமான குறைகள் என்ன என்று தெரிந்ததை நான் மந்திரி அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர ஆசைப்படுகிறேன். ஆவன செய்யவேண்டு மென்றும் கேட்டுக்கொள்கிறேன். ஏதாவது ஒரு வேலையை எடுத்துக் கொள்வதாய் இருந்தால் எவர்கள் அதிகமாக தொந்தரவு கொடுக்கிறார் களோ, எவர்கள் அதிகமாக வற்புறுத்துகிறார்களோ, எந்த ஊரிலிருந்து அதிக மகசர்கள் வருகின்றனவோ, அந்த வேலைகளைத் தான் கவனிக் கிறார்கள். இந்த முறை மாறவேண்டும். இதற்காக ஒரு சர்வே நடத்தப் படவேண்டும். எவர்கள் ஊரில் போக்கு வரத்து வசதி யிருக்கிறதோ, எவர்கள் ரோடு ஓரங்களில் இருக்கிறார்களோ, அவர்கள் தான் அதிகமாகத் தொந்தரவு கொடுக்கிறார்கள். உள்ளிட்ட கிராமங்கள் எல்லாம் ஓரளவுக்கு இருந்த நிலைமையில் தான் இருக்கின்றன. எவ்வளவு மகசர்கள் வந் திருக்கின்றன, எத்தனை தடவைகள் நம்மிடம் முறையிட்டிருக்கிறார்கள் என்பதை கணக்கில் வைக்காமல், ராஜ்யம் பூராவும் சர்வே எடுத்து, யார் யாருக்கு என்ன தேவை என்பதைக் கண்டுபிடித்து, ஒரு திட்ட அடிப்படை யில் வேலை செய்யவேண்டும். இப்பொழுது நாம் எத்தனையோ திட்டங்களைப் போடுகிறோம். ஹரிஜன முன்னேற்றத்திற்காக என் ஒரு ஐந்தாண்டுத் திட்டத்தைப் போடக்கூடாது என்று கேட்கிறேன். அந்த அடிப்படையில் வேலை செய்ய வேண்டுமென்று நான் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன்.

முன்பு இருந்ததை விட ஆபீஸ்களில் எல்லாம் வேலை அதிகமாய்விட் டது. ஆனால், அதே ஆட்களை வைத்துக் கொண்டு தான் வேலை நடத்த வேண்டியிருக்கிறது. சென்ற வருடம் பிப்ரவரி மாதம் 20-ம் தேதி மாடு கள் வாங்குவதற்கு ஒரு உத்தரவு அனுப்பப்பட்டது. மார்ச் 31-ம் தேதிக் குள் இதை நிறைவேற்றவேண்டுமானால், இப்பொழுது இருக்கும் ஆட்களை வைத்துக் கொண்டு எப்படிச் செய்ய முடியும் என்று கேட்கிறேன். எக்ஸி கூடிவ் வேலைக்கும், மற்றும் "**house-sites**"-க்காக இடம் "**acquire**" செய்வதற்கும், இன்னும் மற்ற வேலைகளுக்குகெல்லாம் அதிகமாக ஆட்கள் நியமிக்கப்படவேண்டும். ஒவ்வொரு தாலுக்காவுக்கும் ஒரு டெபுடி தாஸில் தார் வேண்டும் அத்துடன் கூட ரெவென்யூ இன்ஸ்பெக்டர்களின் எண்ணிக் கையை அதிகப்படுத்தவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் இரண்டு தாலுகா சர்வேயர்கள் வேண்டும். எத்தனையோ வருஷங்களுக்கு முன் னால் "**acquire**" செய்யப்பட்ட நிலம் அவர்களுக்கு அளந்து கொடுக்கப் படாமலேயே இருந்து வருகிறது. ஒரு லோயர் டிவிஷன் குமஸ்தாவை ரெவென்யூ இன்ஸ்பெக்டராகப் போடுகிறார்கள். அவருக்கு சர்வே என்றால் என்ன என்று கூடத் தெரியாது. டயரியில் மனைகள் அளந்து கொடுக்கப் பட்டுவிட்டன என்று எழுதுகிறார்கள். ஆனால் உண்மையிலேயே அந்த மாதிரி அளந்து விடவில்லை. ஏராளமான இடங்கள் இன்னும் அளந்து கொடுக்கப்படாமலேயே இருக்கின்றன.

[Sri R. Subramaniam] [24th March 1958

9–50 a.m. அத்துடன் கூட ஒன்று சொல்லிக் கொள்ளஆசைப்படுகிறேன். இப்பொழுது ஹரிஜன வெல்பேர் ஆபீசர் இருக்கிறார். அவருக்கு எவ்வளவோ வேலை இருக்கின்றன. அவர்கள் ஜில்லா பூராவும் போக வேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீசர்கள் இருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் இரண்டு ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீசர்கள் இருக்கிறார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு ஜீப் கார் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் ஜில்லா பூராவும் போகக்கூடிய ஹரிஜன வெல்பேர் ஆபீசருக்கு ஒரு ஜீப் கார் கொடுக்கவில்லை. (மணி அடிக்கப்பட்டது). இன்னும் இரண்டொரு நிமிஷங்களில் முடித்துவிடுகிறேன்.

**MR. SPEAKER :** இன்னும் ஒரு நிமிஷம்தான் பேசலாம்.

**SRI R. SUBRAMANIAM :** ஜில்லா பூராவும் வேலை செய்யக்கூடிய ஹரிஜன் வெல்பேர் ஆபீசர் ஜில்லா பூராவுக்கும் போக வேண்டியதாக இருப்பதால் அவருக்கு ஒரு ஜீப் கார் கொடுத்து உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது அவர்களுக்கு ஜீப் கார் கொடுக்கவில்லை. அதனால் அவர்களால் சரியானபடி வேலை செய்ய முடியவில்லை. அவர்களுக்கு ஆட்களும் உதவி செய்வதற்கு கொடுக்கவில்லை. அதனால் அவர்களால் வேலைகளைச் செய்ய முடியவில்லை. அவர்களுக்கு அதிகமான பணம் ஒதுக்கி வேலை செய்யும்படி சொல்லி அதே சமயத்தில் அவர்களுக்கு வேண்டியபடி ஆட்களைக் கொடுக்காமல் இருந்தால் அவர்களால் எப்படி வேலை செய்ய முடியும் என்பதை யோசித்து பார்க்கவேண்டும். பணத்தை மட்டும் ஒதுக்கி வைத்தால் போதாது. அளவுக்கு மீறி சாப்பிட்டால் ஒருவனால் சாப்பிட முடியாமல் வயிற்று வலிதான் ஏற்படும். அதைப்போலவே பணத்தை மட்டும் ஒதுக்கி வைத்து விட்டு அதற்கு வேண்டிய ஆட்களை ஒதுக்கி வைக்காமல் இருந்தால் அவர்களால் வேலை செய்ய முடியாது. வயிற்றுவலி ஏற்படுவதுபோல் பணம் செலவு ஆகாமல் அப்படியே தங்கிப் போய்விடும். அதனால் அந்த இலாகாவுக்கு வேண்டிய ஆட்களையும் நியமித்துக் கொடுக்கும்படியாகக் கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI A. V. P. ASAITHAMBI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ஆதி திராவிடர்களுடைய நலனுக்காக இந்த நாட்டைப் பொறுத்தவரையில் திராவிட முன்னேற்றக் கழகம்தான் பெரும் பங்கு எடுத்துக் கொண்டு உழைத்து வந்திருக்கிறது என்பதை சொல்ல அவசியம் இல்லை என்று நான் கருதுகிறேன். ஆதி திராவிடர்கள் இன்றைய தினம் அதிகப்படியாக முன்னேற்றமடைந்து வருகிறார்கள் என்று கனம் அமைச்சர் அவர்களும் சொல்லி வருகிறார்கள் என்று சொன்னால் அதற்குக் காரணம் காங்கிரஸ்காரர்கள் தான் என்றும் காந்தியடிகளும்தான் என்றும் சொல்லுகிறார்கள். ஆரம்பக் காலத்திலிருந்தே திராவிட இயக்கத்தின் நடவடிக்கைகளை ஆராய்ந்து பார்த்தால் நிச்சயமாக நமக்கும் தெரியும், கனம் நிதி அமைச்சருக்கும் தெரியும், கனம் விநாயகம் அவர்கள் சொல்லுவது போல் எல்லோருக்கும் நன்கு தெரியும், திராவிடர்களுடைய முன்னேற்றத்திற்குப் பாடு பட்டவர்கள் திராவிட முன்னேற்றக் கழகம்தான். காங்கிரஸ்காரர்களிடத்தில் ஆட்சிப் பொறுப்பு இருக்கிறது என்ற காரணத்தாலும், கஜானா அவர்கள் கையில் இருக்கிற காரணத்தாலும் ஏதோ பணத்தை எடுத்து அவர்களுக்குச் செலவு செய்து வருவதால் அவர்கள் முன்னேற்றமடைந்து இருக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். பணத்தை எடுத்து அவர்களுக்கு என்று செலவு செய்துவிட்டதால் அவர்கள் முன்னேற்றமடைந்து விட்டதாக காங்கிரஸ்காரர்கள் சொல்லுகிறார்கள். இன்றைய தினம் ஆதி திராவிடர்கள் தலை நிமிர்ந்து நிற்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் திராவிட முன்னேற்றக் கழகம்தான். அவர்களுடைய முன்னேற்றத்திற்கு என்று எந்தக் கட்சி அதிகப்படியான பாடு பட்டு வந்தது என்று சொன்னால் அந்த ஒரு கட்சி இந்த திராவிட முன்னேற்றக் கழகக் கட்சித்தான் என்று சொல்லாமலேயே விளங்கும். கடந்த வருஷம் இதே மாணியக் கோரிக்கையின் விவாதத்தின்போது சொன்னார்கள், காங்கிரஸ் கட்சிதான் முதன் முதலாக ஆலயப் பிரவேசப் போராட்டத்தை நடத்தினார்கள் என்று. அப்படிச் சொல்வது தவறு என்பது எங்களுடைய அபிப்பிராயம். ஏனென்றால்

24th March 1958] [Sri A. V. P. Asaithambi]

அந்தப் போராட்டத்தை எங்கள் கட்சிதான் அதிகப்படியாக நடத்தியது. காங்கிரஸ்காரர்கள் ஆலயப் பிரவேசப் போராட்டத்தை நடத்துவதற்கு முன்னதாகவே திருவண்ணாமலையில், பழநியில், மதுரையில், 1929-ம் வருஷத்தில் எங்கள் கட்சி ஆலயப் பிரவேசப் போராட்டத்தை நடத்தி அதனால் பல இன்னல்களுக்கு ஆளாகி இருக்கிறார்கள். அது மாத்திரம் அல்ல. இந்த நாட்டில் இருக்கிறது பல பொது இடங்களில், பொது துறைகளில், பொது ஓட்டல்களில் ஆதி திராவிடர்கள் அவமானப்படுத்தியும் கேவலப்படுத்தியும் வந்ததை தடுக்க முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டதும் இந்தத் திராவிட முன்னேற்றக்கட்சிதான். இப்படி பல துறைகளில் எங்கள் கட்சிதான் அந்தப் போராட்டத்தை ஆரம்பித்தது. ஆரம்பத்தில் வைக்கத்தில் பெரியார் ராமசாமி அவர்கள் அந்தப் போராட்டத்தை நடத்தி இருப்பது அவருக்கு நன்றாகத் தெரியும். அது போலவேதான் ஓட்டல்களில் எழுதப்பட்டிருக்கும் ஜாதிப் பெயர்களை மாற்றி அமைக்க வேண்டும் என்று எங்கள் கட்சிதான் பாடுபட்டு வந்தது. இப்படிப்பட்ட எத்தனை துறைகளில் போராட்டத்தை ஆரம்பித்து வைத்து ஆதி திராவிடர்களுடைய முன்னேற்றத்தை மனதில் கொண்டு பல போராட்டங்களை நடத்தி வந்தோம். பொருளாதார துறையில் அவர்களை முன்னேற்றமடையச் செய்து விட்டால் மட்டும் போதாது. ஒரு சமுதாயம் நல்ல முறையில் முன்னேற்றமடைய வேண்டுமானால் அதற்கு அவர்களுக்கு பணத்தை ஒதுக்கி வைத்து விட்டால் மட்டும் போதாது. ஆதி திராவிடர்களை நாயை விட கேவலமாக நடத்தி வந்த காலத்தில் அவர்களுக்காக பாடுபட்டது ஆதி திராவிட முன்னேற்றக் கழகக் கட்சித்தான். இன்றைய தினம் அவர்களுக்கு பணத்தை ஒதுக்கி வைத்துவிட்டால் மட்டும் அவர்கள் ஜாதியில் முன்னேற்றமடைந்துவிட முடியாது. அவர்கள் தங்களுடைய வாழ்க்கைத்துறையில் முன்னேற்றமடைந்து விட முடியாது. பொருளாதாரத் துறையில் உதவி செய்து வருவதால் அவர்கள் ஜாதி அமைப்பில் முன்னேற்றமடைந்து விட்டதாகச் சொல்லிவிட முடியாது. அவர்களுக்கு சகல அந்தஸ்தும் வந்து விடாது. பொருளாதாரத் துறையில் அவர்களுடைய வாழ்க்கை துறை உயர்ந்திருந்தாலும் கூட சமுதாயத் துறையில் அவர்களுக்கு தனி அந்தஸ்து அந்த சமுதாயத்தில் வரவே இல்லை. அவர்கள் தாழ்ந்த மக்கள் என்று தான் இன்றைக்கும் கருதப்படுகிறார்கள். பொருளாதாரத் துறையில் அவர்கள் நல்ல வசதிகளைப் பெற்றாலும் அவர்கள் சமுகத்தில் கேவல்மாகத்தான் நடத்தப்பட்டு வருகிறார்கள். அவர்கள் பொருளாதாரத் துறையில் நல்ல வாழ்க்கையை நடத்தி வந்தாலும், முன்னேற்றமடைந்தாலும் ஆதி திராவிடர்கள் சமுகத்தில் அவமானப்படுத்தப்பட்டு கேவலப்படுத்தப்பட்டுதான் வருகிறார்கள். தங்களுடைய கையில் பணம் இருக்கிறது என்று அவர்களுக்கு வருடந்தோறும் அதிகப்படியான பணத்தை ஒதுக்கி வைத்துவிட்டால் மட்டும் போதாது. பொருளாதாரத் துறையில் உதவி செய்து விட்டோம் என்று சொல்லிவிட்டால் அவர்கள் எந்த விதத்திலும் முன்னேற்றமடைய மாட்டார்கள். உண்மையிலேயே அவர்கள் தங்களுடைய ஜாதியில் முன்னேற்றமடைய வேண்டுமானால் ஜாதியை ஒழிக்க ஒரு சட்டத்தை இயற்ற அரசாங்கம் முன் வர வேண்டும். நாங்கள் அந்தக் காலத்திலிருந்தே இந்த ஜாதி ஒழிப்புக்கு என்று போராட்டத்தை நடத்திக் கொண்டு வருகிறோம். அப்பொழுது இந்த காங்கிரஸ்காரர்கள் என்ன சொன்னார்கள் என்றால், வெள்ளைக்காரனை வெளியேற்றி விட்டு அதன் பிறகு ஜாதி ஒழிப்பைப்பற்றி நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். இப்பொழுது முதற்கொண்டே அதற்கு நாம் பாடுபட வேண்டிய அவசியம் இல்லை என்று சொன்னார்கள். மற்றும் அதைப்பற்றி நடவடிக்கை எடுக்க வேண்டுமானால் சுயராஜ்யம் அடைந்த பிறகு அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளலாம் என்றும் சொன்னார்கள். ஆனால் இன்றைய தினம் ஜாதியை ஒழிக்க என்ன சட்டங்களை இயற்றியிருக்கிறார்கள் என்று கேட்கிறேன். அதற்கு வேண்டிய சட்டத்தை இயற்றுங்கள் என்று கேட்டால் அதை சுலபமாக இயற்றுவது என்பது முடியாது, என்று சொல்லுகிறார்கள். இன்றைக்கு வெள்ளைக்காரன் போய் விட்டான், சுயராஜ்யம் வந்து விட்டது, நம்மிடத்தில் பெரிய மெஜாரிடி இருக்கிறது. இந்த நிலைமையில் ஏன் ஜாதி ஒழிப்புக்கு சட்டத்தைக் கொண்டு வந்து அதை நிறை வேற்றக்கூடாது என்று கேட்கிறேன். உங்களிடத்தில் மெஜாரிட்டி அங்கத்தினர்கள் இருப்பதால் பயமில்லாமல் அந்தச் சட்டத்தை

[Sri A. V. P. Asaithambi] [24th March 1958

இயற்றி விடலாமே. ஆனால் அதற்கு அமைச்சர் அவர்கள் பதில் சொல்லு வதைப் பார்த்தால் ரொம்பவும் பரிதாபகரமாகத்தான் இருக்கிறது. ஆளு கின்ற கட்சியில் அபரிமிதமாக அங்கத்தினர்கள் இருந்தும்கூட அவர்கள் இதற்கு என்று ஒரு சட்டத்தைக் கொண்டு வந்து இந்த ஜாதி முறையை ஒழிக்க அவர்களால் முடியவில்லை. இந்த ஜாதி முறையை ஒழிக்காத வரையில் ஆதி திராவிட மக்களுக்கு விமோசனம் கிடைக்கப்போவதில்லை. இப்பொழுதுள்ள சர்க்கார் ஏன் அந்தச் சட்டத்தைக் கொண்டு வந்து இயற்றக்கூடாது. இன்றைக்கு இருக்கக்கூடிய சட்டங்களினால் ஜாதி முறையை ஒழிக்கவே முடியாது. அதற்கு வேண்டிய சட்டம் இல்லை. அப்படிப்பட்ட சட்டம் இல்லாத காரணத்தால் தான் பெரியார் ராமசாமி அவர்கள் அந்தச் சட்டத்தை எரிப்பேன் என்று சொல்லுகிறார். அதை இந்த அரசாங்கம் கவனிக்க வேண்டும். இப்பொழுதுள்ள சட்டம் அந்த அளவுக்குத்தான் இருக்கிறது. ஆகவே இப்பொழுதுள்ள சட்டத்தை மாற் றுவதற்கு இந்த அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். இப்பொழுதுள்ள அரசாங்கத்திற்கு அதிகப்படியான ஆட்கள் இருக்கிற போதே அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். இது வரையிலும் ஆதி திராவிடர்களுக்கு ஏதோ நன்மைகள் செய்து வந் திருக்கிறோம் என்று சொன்னால் அதற்கு காரணம் ஆட்சிப் பொறுப்பு அவர்களுடைய கையில் இருப்பதுதான். ஆட்சிப் பொறுப்பு அவர்களுடைய கையில் இருப்பதால் தான் அவர்களால் கொஞ்சம் பணம் அவர்களுடைய நன்மைக்கு என்று ஒதுக்க முடிகிறது. பொருளாதாரத் துறையை விட மற்ற எந்தத் துறையிலும் அவர்களுக்கு இந்த அரசாங்கம் நன்மை செய் யவே இல்லை. சாதாரணமாகப் பார்க்கலாம் இந்த சட்ட மன்றத்தில் அதிகப்படியாக ஆதி திராவிட மக்கள் இருக்கிறார்கள் என்றால் அதற்குக் காரணம் அவர்களுக்கு என்று தனித் தொகுதி வைத்ததின் காரணம் தான். அதற்குக் காரணம் காங்கிரஸ்காரர்கள் என்று கூட சொல்ல முடியாது. அதற்குக் காரணம் டாக்டர் அம்பேத்கார் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களுக்குத் தனித் தொகுதி வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கார் தான் பாடுபட்டார். அதற்காக காந்தியடிகள்கூட எதிர்த்து உண்ணா விரதம் இருந்தார். அந்த முறையில் அவர்களுக்கு என்று தனித் தொகுதி ஒதுக்கப்பட்டதன் காரணத்தால் ஆதி திராவிடர்கள் அதிகப்படியாக இந்த சட்ட மன்றத்தில் உட்கார்ந்திருக்கும்படியான நிலைமை ஏற்பட்டது. அப்படி அவர் பாடுபடாமல் இருந்திருந்தால் இப் பொழுது ஆதி திராவிடர்களை இங்கு பார்க்க முடியாது. கனம் கக்கன் அவர்களும் அமைச்சராக இங்கு உட்கார்ந்திருக்க முடியாது என்பதை மறந்துவிடக் கூடாது. அதன் காரணமாகத்தான் ஆதி திராவிடர்கள் எல்லா இடங்களில் இடம் பெற்றிருக்கிறார்கள். சமுதாய அமைப்பிலும் அவர்கள் இடம் பெற்றிருக்கிறார்கள். அதே மாதிரி வகுப்பு பிரதிநிதித் துவம் வழங்க வேண்டும் என்று அன்று ஜஸ்டிஸ் கட்சி பாடுபட்டது. அதன் காரணமாக அதிகப்படியான இடங்களை ஆதி திராவிடர்கள் பெற் றார்கள். சுயராஜ்யம் வந்த பிறகு துருதிருஷ்ட வசமாக அந்தக் கட்சி இல்லாமல் போய் விட்டது. இந்தக் காலத்தில் காங்கிரஸ்காரர்கள் அவர் களுக்கு பாடுபட்டார்கள் என்று சொல்வது சரியல்ல. உண்மையிலேயே அவர்களுக்கு என்று பாடுபட்ட கட்சி எங்கள் கட்சிதான். திராவிட இயக்கம் ஆரம்பித்த முதற்கொண்டு அவர்களுடைய முன்னேற்றத்திற்கு என்று
10 a.m. பாடுபட்ட கட்சி ஒன்று இருக்கிறது என்று சொன்னால் அது எங்கள் கட்சி தான். அவர்களுடைய முன்னேற்றத்திற்காக எங்கள் கட்சி எத்தனையோ போராட்டத்தை நடத்தி வந்திருக்கிறது.

அந்த அளவுக்குப் பாடுபட்டதற்குப் பிறகு ஓரளவுக்கு ஆதித் திராவிட மக்களுக்கு நன்மை ஏற்பட்டிருக்கிறது. நான் இன்னொன்று சொல்லு வேன். சட்டத்தை திருத்துவதோடு மாத்திரமல்ல. இந்தப் புனித ஹிந்து மதம் சீர்திருத்தப்பட்டாலொழிய, ஆதித் திராவிட மக்கள் முன்னேற வழி கிடையாது. இன்றைக்குப் பல மதங்கள் இருக்கின்றன. அவைகளில் இந்த ஹிந்து மதம் ஒன்றில்தான் பல ஜாதிகள், பல ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. வேறு மதங்களில் அப்படி கிடையாது. ஹிந்து மதத்தைச் சேர்ந்த நான் இன்றைக்கு கிரிஸ்தவனாகி ஆசைத்தம்பியிலிருந்து ஆசீர் வாதமாக மாறி விடலாம். அல்லது ஒரு முஸ்லீமாக மாறி அபுல் கலாம்

24th March 1958] [Sri A. V. P. Asaithambi]

ஆலாதாக மாறி விடலாம். வேறு மதத்திலுள்ளவர்கள் இன்றைக்கு ஹிந்து மதத்தில் சேற முடியாது. யார் சேர்த்துக் கொள்வார்கள் என்று பார்த்தால் யாரும் மாட்டார்கள். எனவே, இந்த மதம் யார்யாரினாலோ சேர்ந்து கைப்பற்றப்பட்டு முதலாளித்துவ அமைப்பு முறையிலே, சர்வாதிகார முறையிலே அமைக்கப்பட்டிருக்கிறது. ஜாதிகளை ஒழிக்கப் பாடுபட வேண்டும். அதற்காகப் பாடுபட்ட கட்சி என்று ஒன்று இருக்குமானால், அது திராவிட முன்னேற்றக் கழகமே தவிர வேறு கிடையாது. அமைச்சர் அவர்களுக்கு ஒன்று சொல்லுகிறேன். ஹரிஜன் என்று சொன்னால், இறைவன் பிள்ளை. இன்றைய தினம் ஆலயங்களில் அர்ச்சகர்களாக ஒரே ஜாதியார் இருக்கிறார்கள். அர்ச்சகர்களுக்கு என்ன யோக்கியதை, என்ன தகுதி இருக்கவேண்டுமென்று இன்றைய தினம் போடட்டும். அதற்கு யார் வேண்டுமானாலும் படிக்கட்டும். அதற்கு ஒரு பரீட்சை இருக்கட்டும். அந்தப் பரீட்சைக்கு அப்பியர் ஆகட்டும். அப்படிப்பட்ட பரீட்சையில் யார் பாஸ் செய்கிறார்களோ அவர்களின் பெயர்களைப் பேப்பரில் போட்டு, அவர்களிடமிருந்து அப்ளிகேஷன் வாங்கி, யார் தேர்ச்சி பெற்று வருகிறார்களோ அவர்களுக்குத் தான் அர்ச்சகர் வேலை கொடுக்கப்படும் என்று சர்க்கார் என்றைக்குச் சட்டம் செய்கிறதோ, அன்றைக்குத் தான் அந்தச் சட்டம் நல்ல சட்டமாகுமே தவிற, மற்றதெல்லாம் நல்ல சட்டமல்ல . . .

SRI R. KANDASAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மானியத்தின் மீது அடியேனுக்குப் பட்ட சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். நமது ஹரிஜன இலாகா அமைச்சர் அவர்களின் மேர்பார்வையிலே, ஹரிஜன இலாகா டைரக்டர் ஸ்ரீ முத்திருளாண்டி அவர்கள் செய்திருக்கும் சில ஆக்க வேலைகளைக் குறிப்பிட்டுச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

1957–58-ம் வருஷத்திற்கு ஹரிஜனங்களுக்கென்று ஹரிஜன டிபார்ட்மெண்டாரால் செய்யப்பட்டிருக்கும் ஆக்கவேலைகளில், வெல்பேர் பாடசாலைகள் 843, இதில் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கை 72,745. இவர்களுக்கெல்லாம் மத்தியான உணவு அளிக்கப்பட்டிருக்கின்றது. உயர்நிலைப் பள்ளிகளில் வாசிக்கும் ஹரிஜன மாணவர்களுக்கு சர்க்கார் உணவு விடுதிகள் 55 ; இதில் சாப்பிட்டு வரும் பிள்ளைகளின் எண்ணிக்கை 3,329. காலேஜ் ஹாஸ்டல்கள் 3 ; இதில் சாப்பிடும் மாணவர்கள் 234. பிரைவேட் ஹாஸ்டல்கள் 212 ; இதில் சாப்பிட்டு வாசிக்கும் மாணவர்கள் 9,031. உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்குக் கொடுக்கும் ஸ்காலர்ஷிப் ரூ. 30,000 ; மாணவர்கள் 1,191. ஹரிஜனங்களுக்கு வாங்கிக் கொடுக்கப்பட்ட மாடுகள் 4,604 ஜதைகள். இறவைக் கிணறுகள் 280. குடிசைத் தொழில்கள் 16. வீட்டு மனைகள் 1,705. கட்டப்பட்டுள்ள வீடுகள் 3,331. முதுகுளத்தூரில் கட்டப்பட்டுள்ள வீடுகள் 2,833. ஓடுபோட்ட வீடுகள் 300. குடி தண்ணீர் கிணறுகள் 50, மொத்த செலவு 1,52,72,000 ரூபாய். 1958–59-ம் வருஷத்திற்கு 1,66,00,000 ரூபாய். இவைகளெல்லாம் நடந்து வருகிறது. 1947-ம் வருஷத்திலிருந்து எத்தனையோ கிராமங்களிலும், ஜில்லாக்களிலும் மிகத் திருப்திகரமாக வேலைகள் நடந்து வருவதைப் பார்த்திருக்கிறோம். எதிர் கட்சி அங்கத்தினர்கள் சில குறைகளை வைத்துக் கொண்டு அதைப் பிரசாரம் செய்யலாம். செய்யப்பட்டுவரும் வேலைகளிலுள்ள குணத்தை விட்டு குறைகளைச் சொல்லி, தங்களுடைய கட்சி பலத்திற்கு வேண்டுமென்றே சொல்லலாம். ஹரிஜனங்களை, இப்படியெல்லாம் மாற்றிச் சொல்லி, ஏமாற்றி விட முடியாது என்று மனப்பூர்வமாகச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

உதாரணமாக ஒன்று சொல்லுகிறேன். 20 வருஷங்களாக காந்தி அவர்களுடைய திட்டப்படியோ, பெரியார் அவர்களுடைய லெக்சர்படியோ நாங்கள் முன்னேறி வந்திருக்கிறோம். நீங்கள் நினைக்கின்றபடியே வைத்துக்கொள்வோம். ஹரிஜனங்களுக்கு ஒவ்வொருவருக்கும் 10,000 ரூபாய், ஏர், மாடு முதலியவைகள் எல்லாம் கொடுத்தாலும் இன்னும் உயர்ந்தவர்களாக இருப்பார்கள். நிதி நிலைமை குறைவாக இருந்தும் சுயராஜ்யம் வந்த பிறகு இவ்வளவு முன்னேற்றகரமான ஆக்க வேலைகளைச் செய்திருப்பதை மனதில் வைத்துக் கொள்ளவேண்டும். அதை மறந்து விட

[Sri R. Kandasami] [24th March 1958

வது நன்றிகெட்ட தன்மையைக் குறிக்கும். "எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு". என்று வள்ளுவர் கூறியிருக்கிருர். ஆசைத் தம்பி ஏதேதோ சொன்னுர். நான் ஒன்று சொல்லுகிறேன். சேலத்தில் ஒரு ஆசிரியர் இருந்தார். அவர் நன்ருகப் பாடக் கூடியவர். நல்ல வல்லவர். நன்ருக நடிப்பார். அவர் ஒரு தி. மு. க. நடிகரிடம் போய் சினிமாவில் சேர்த்துக் கொள்ளுங்கள் என்று கேட்டார். முதல் நாள் புக் பண்ணியாயிற்று. இரண்டாம் நாள் போனபோது, என்ன ஜாதி என்று கேட்டார்கள். ஆதித் திராவிட ஜாதி என்று சொன்னுர் அந்த ஆசிரியர். உயர்ந்த ஜாதிப் பெண்கள் மீது கை போட்டு நடிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே ஆதித் திராவிடர்களைச் சேர்த்துக்கொள்ள முடியாது என்று போகச் சொல்லி விட்டார். அறிஞர்கள் இதற்கு என்ன சொல்லுகிருர்கள் என்று கேட்கிறேன்.

அது மட்டுமல்ல, ராசிபுரத்தில் ஒரு தி. மு. க. மாநாடு நடந்தது. அந்த மாநாட்டில் சம பந்தி போஜனம் நடந்தது. அதற்கு ஹரிஜனங்களும் சாப்பிட வந்தார்கள். அப்போது அவர்களைப் பார்த்து எங்கள் தி.மு.க. குழந்தைப் பருவத்தில் இருக்கிறது. நீங்கள் இப்போது எங்களோடு கலந்து கொண்டால் எங்கள் கழகம் தீய்ந்து போகும் என்று சொல்லி அவர்களை வெளியேற்றி விட்டார்கள். அதை நான் அப்போது புளிய மரத்தடியில் நின்று கொண்டு பார்த்துக் கொண்டிருந்தேன். இதற்கு தி.மு.க. தோழர்கள் என்ன சொல்கிருர்கள் ?

உங்களிடத்திலே லட்சக் கணக்கான வாலிபர்கள் இருக்கிருர்கள் என்று சொல்லுகிறீர்கள். இவர்களெல்லாம் சொன்னபடியே கேட்பார்கள் என்று சொல்லுகிறீர்கள். கலப்பு மணத்தில் உள்ளபடியே உங்களுக்கு நம்பிக்கை இருந்தால், உள்ளபடியே இவர்களெல்லாம் தீவிரமாக வேலை செய்தால், தீண்டாமை ஒழியும். முதலியார்களும் நாயுடுகளும் கலப்பு மணம் செய்துகொண்டதைப் பற்றி ஆசைத்தம்பி ஆசையாகப் பேசுவதை நம்ப முடியாது. எங்கு பார்த்தாலும் பிரசாரம் செய்கிருர்களே தவிர ஆக்க வேலைகளில் ஊக்கம் கொள்ளவில்லை.

வெள்ளைக்காரர்கள் ஆட்சியிலே காங்கிரஸுக்கு விரோதமாக வெள்ளைக்காரர் நீடூழி வாழ வேண்டுமென்று சொன்னேம். அப்போது காங்கிரஸ்காரர்கள் என்ன சொன்னுர்கள். நீங்கள் அவர்கள் பக்கமே பேசுங்கள், வரக்கூடிய நன்மைகளை இழந்து விடாதீர்கள் என்று சொன்னுர்கள். அவர்கள் அதோடு நிற்கவில்லை. ஆசிரமம் ஏற்படுத்துவது, ஹரிஜனங்கள் இருக்குமிடங்களில் சுத்தத்தை ஏற்படுத்துவது, சுகாதாரத்தை ஏற்படுத்துவது போன்ற ஆக்கவேலைகளைச் செய்து வந்தார்கள். கல்வி முன்னேற்றத்திற்கான வேலைகளைச் செய்து வந்தார்கள். அத்தகைய பெருந்தன்மையோடு ஈடுபடவேண்டு மென்று தி.மு.க. பெரியார்களைக் கேட்டுக் கொள்கிறேன். இவர்களுக்கு உள்ளபடியே சர்க்கார் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் மாதிரிப் பேசி, பாமர ஜனங்களை உயர்த்த காங்கிரஸ் கவர்ன்மெண்ட் செய்வதை அடியோடு அழிக்கும் வகையிலே, பாமர, ஆதித் திராவிட மக்களிடத்திலே போய் பிரசாரம் செய்து நீங்கள் அவர்களுடைய மனதைக் கெடுக்கவேண்டா மென்று கேட்டுக் கொள்கிறேன். உங்களுக்கு நன்மை செய்யவேண்டு மென்ற எண்ணம் இருந்தால் காங்கிரஸ் செய்கிற நல்ல காரியங்களை மக்களிடத்தில் எடுத்துச் சொல்லுங்கள். தீமையான காரியங்கள் ஏதாவது இருந்தால் எடுத்துப் பிரசாரம் செய்து தீமை செய்யவேண்டா மென்று கேட்டுக் கொள்கிறேன். ஆகவே, நீங்கள் முடிந்தால் ஆக்க வேலைகளைச் செய்யுங்கள். உங்களிடத்திலே நல்ல வாலிபர்கள், நல்ல லெக்சரர்கள், போராடக் கூடிய வல்லவர்கள் எல்லோரும் இருப்பதாகக் கூறுவதால், ஆக்க வேலைகளில் அவர்களை ஈடுபடுத்துங்கள். திராவிட முன்னேற்றக் கழக பெரியார்கள் என்ன செய்திருக்கிருர்கள் என்று கேட்கிறேன்.......

**SRI K. ANBAZHAGAN : On a point of order** இந்த அவையிலே பேசுகிற அங்கத்தினர் அவர்கள் "நீங்கள், நீங்கள்" என்று எதிர் கட்சியைக் குறிப்பிட்டுப் பேசுவதைத் தாங்கள் அனுமதிக்கிறீர்களா என்று அறிய விரும்புகிறேன்.

24th March 1958]

**MR. SPEAKER** : " நீங்கள், நீங்கள் " என்று சொன்னால், அது சபாநாயகரைக் குறிக்கும். நான் ஒன்றும் அது மாதிரிச் சொல்ல வில்லையே என்று யோசித்துக் கொண்டிருந்தேன் (சிரிப்பு) கனம் அங்கத் தினர் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றிச் சொல்வதானால், பெய ரிட்டுச் சொல்ல வேண்டும். " நீங்கள், நீங்கள் " என்று சொன்னால் அது என்னைத் தான் குறிக்கும்.

**SRI R. KANDASAMI** : ஆகவே, ஹரிஜனங்களுக்காகப் பரிந்து பேசுகிற திராவிட முன்னேற்றக் கழகத்தினர் ஆக்க வேலைகளைச் செய்ய முன் வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியைப் பொருத்தவரையில் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். திருச்செங்கோடு தொகுதியில், திருச்செங்கோடு டவுனில் 32,000 ஜனங்கள் இருக்கிறார்கள். அதில் ஹரி ஜனங்கள் 5,000 பேர். அவர்கள் தண்ணீருக்கு மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பிப்ரவரி மாதம் 6-ம் தேதி அற நிலையப் பாது காப்பு மந்திரி அவர்கள் வந்து நேரில் பார்த்திருக்கிறார். குடி தண்ணீ ருக்காக மக்கள் பல நாட்களாகக் கஷ்டப்படுகிறார்கள். கொக்கராயன் பேட்டை வழியாகத் தண்ணீர் கொண்டுவந்து கொடுக்கும் திட்டத்தை போட்டு மக்களுக்குச் சீக்கிரமாக உதவியளிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தவிர, அங்கு மின்சார விஸ்தரிப்புக்கு ராஜாஜி அவர்களுடைய காலத் தில் கம்பங்கள் போடப்பட்டன. அவைகள் அப்படியே இருக்கின்றன. ஆகவே, இதையும் கவனித்து மின்சார விஸ்தரிப்பு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டு, இத்துடன் என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI K. P. PALANISWAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தை ஒட்டி ஒரு சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். கனம் மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் ஹரிஜன மான்யத்திற்காக ரூ. 2,33,44,500 ஒதுக்கியிருப்பதை மிகவும் வரவேற்கிறேன். அநேக ஆண்டுகளாக தீண்டாமையால் பாதிக்கப்பட்ட மக்கள் எவ்வளவோ கஷ்ட நஷ்டங்களுக்கு உட்பட்டு, இப்பொழுது காங்கிரஸ் ஆட்சியிலே அநேக நன்மைகளை பெற்றிருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் மக்களுடைய வாக்குகளை பெறுவதற்காக வேண்டு மானால் என்ன செய்திருக்கிறார்கள், ஒன்றும் செய்யவில்லை என்று மறுக்க லாம். ஆனால், பல ஆண்டுகளாக சொல்ல ஒண்ணாத துன்பங்களுக்கு ஆளான தாழ்த்தப்பட்ட மக்கள், பிற்பட்ட மக்களுக்கு இந்த நாட்டிலே காந்திஜியினுடைய லட்சியத்தை பின்பற்றி நடக்கவேண்டுமென்ற அடிப் படையில் காங்கிரஸ் ஸ்தாபனம் பல நன்மைகளை செய்திருக்கிறது. அவர்கள் முன்னேற்றம் அடைந்துகொண்டு வருவதை நாம் எல்லோரும் பார்க்கிறோம். 10-10 a.m.

குடியிருப்பு வசதிக்காக அவர்களுக்கு 4 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக் கிறார்கள். அதற்காக வீடு கட்டும் திட்டங்களை தீட்டியிருக்கிறார்கள். இந்த குடியிருப்பு வசதி சம்பந்தமாக எனக்குத் தெரிந்த சில யோசனைகளை கூற விரும்புகிறேன். முதலில் அவர்களுக்கு என்று சொந்தமாக பூமி இருந் தால் அது மிகவும் நலமாக இருக்கும். குடியிருப்பு வீட்டிற்காக வீடு ஒன்றுக்கு சுமார் ரூ. 1,000 அல்லது 700 செலவழிக்கிறார்கள். ரூ. 2,000, 3,000 செலவில் 30, 40 பேர்கள் குடியிருப்பதற்கு வசதியாக ஒவ்வொரு கிராமத்திலும் அவர்களுக்கு சொந்த பூமி வாங்கிக் கொடுத்துவிட்டால் ரொம்பவும் சௌகரியமாக இருக்கும். சொந்த பூமியாக இருந்தால் அவர் களுக்கு வேண்டியதைச் செய்துகொள்ளலாம். பிறருடைய பூமியாக இருந்தால் அவர்களுடைய கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடக்க வேண்டி யிருக்கிறது. இந்தக் கட்டுப்பாடு இல்லாமல் அவர்கள் தங்களுக்கு வேண் டிய வசதிகளை செய்துகொள்ளுவதற்கு சொந்த பூமி வசதி செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri K. P. Palaniswami] [24th March 1958

நம்முடைய நாட்டிலே தீண்டாமை ஒழியவேண்டுமென்று சொல் அளவிலே பலர் சொல்லிக்கொண்டிருந்தார்கள். செயல் அளவிலே இது வரையில் யாரும் ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லை. ஆனால் நம்முடைய காங்கிரஸ் ஸ்தாபனம் மக்கள் எல்லோரும் சம அந்தஸ்தில் வாழ வேண்டும், சுதந்திரமாக வாழவேண்டும் என்ற கருத்தோடு பல சட்டங்களை இயற்றியிருக்கிறார்கள். ஆனால் சட்டங்களை இயற்றி விட்டால் மட்டும் போதாது. மக்களுடைய மனமாற்றம் உண்மையிலேயே ஏற்படவேண்டும். எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் சரி, ஜாதி மனப்பான்மை நீங்கவேண்டும், மனமாற்றம் ஏற்படவேண்டும். இந்த நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் சம உரிமையோடு, சம அந்தஸ்தோடு வாழவேண்டும், மக்கள் எல்லோரும் சுபிட்சமாக வாழவேண்டும் என்ற மனப்பான்மை ஏற்படவேண்டும். அந்த மனமாற்றம் ஏற்பட்டால்தான் எல்லா மக்களும் சௌகரியமாக வாழ்வதற்கு ஏதுவாக இருக்கும்.

தாழ்த்தப்பட்ட மக்களுடன் ஆதிவாசிகளும் பல ஊர்களில் வசிக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் செம்மேடு என்ற பகுதியில் ஆதிவாசிகள் குடியிருக்கிறார்கள். அவர்களுக்காக 'நான்-ரெஸிடென்ஷியல் ஸ்கூல்' ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவர்களுக்கு அந்த பள்ளிக்கூடங்கள் நன்கு பிரயோஜனப்படுவதற்கு அவைகளை 'ரெஸிடென்ஷியல் ஸ்கூல்களாக' மாற்றி அமைக்கவேண்டும். அவர்களுக்கு வேண்டிய சலுகைகளை செய்து கொடுத்தால்தான் அவர்களும் முன்னுக்கு வர ஹேதுவாக இருக்கும். அந்தச் சலுகைகளை செய்துகொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

முனிசிபல் பட்ஜெட்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு சிறிது பணம் ஒதுக்கினால் நலமாக இருக்கும். கோயமுத்தூரில் $3\frac{1}{2}$ லட்சம் ஜனங்கள் வாழ்கிறார்கள். அந்த இடத்திலே தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வீடுகட்டுவதற்காக ஒரு சிறிய தொகை கூட முனிசிபல் பட்ஜெட்டில் ஒதுக்கியதாகத் தெரியவில்லை. ஆகவே முனிசிபாலிடிகளில் தாழ்த்தப்பட்ட மக்களுக்காக ஒரு சிறிய தொகையாவது ஒதுக்கினால் அவர்களுக்கு வீடு கட்டிக்கொடுப்பதற்கு ஹேதுவாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

சில இடங்களில் கூட்டுறவு சங்கங்களில் ஹரிஜனங்கள் மெம்பர்களாக சேர்த்துக்கொள்ளப்படுவதில்லை என்று கேள்விபடுகிறேன். அவர்கள் பொருளாதாரத் துறையில் பின்னடைந்திருக்கிறார்கள் என்பதற்காக சேர்த்துக்கொள்ளப்படுவதில்லை. அம்மாதிரி அவர்களை சேர்த்துக்கொள்ளாமல் இருந்தால் அவர்களுக்கு எந்த விதத்திலும் சலுகை கிடைக்காது. அதனால் அவர்கள் ரூபாய்க்கு 2 அணு வட்டி கொடுத்து கடன் வாங்கிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவர்களுக்கு கடன் வசதி சுலபமாக கிடைப்பதற்காக அவர்களையும் கூட்டுறவு சங்கங்களில் மெம்பர்களாக சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேலும் தீண்டாமை ஒழிய மக்களுடைய மனமாற்றம் ஏற்படவேண்டும். ஆகவே கூட்டுக் காலனிகளை உடனடியாக ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதை தள்ளிப் போட்டுக்கொண்டே போனால் மக்களிடையே மனமாற்றம் சீக்கிரத்தில் ஏற்படாது. கூட்டுக் காலனிகளை படுத்தினால் அவர்கள் பழக்க வழக்கங்களிலே ஒன்றுபட்டு மக்களிடையே உண்மையிலேயே மனமாற்றம் ஏற்பட ஹேதுவாக இருக்கும். சில இடங்களில் பள்ளி பிள்ளைகளுக்கு மத்தியான உணவு கொடுக்கிறார்கள். அதில் உண்மையிலேயே மனமாற்றம் ஏற்படுகிறது. அம்மாதிரி மத்தியான உணவு அளிக்கப்படும்பொழுது ஹரிஜனங்களை தனியாக பிரித்துவைக்காமல் எல்லோருக்கும் சேர்த்து உணவு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஒரு சில பள்ளிக்கூடங்களில் மத்தியான உணவிற்காக 1 அணு கொடுக்கப்படுகிறது. அது மிகவும் போதாது. $2\frac{1}{2}$ அணுவாவது கொடுக்க வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆதிவாசிகள் வசிக்கும் இடத்திலே அவர்களுக்கு வேலையில்லை என்று அநேகம் பேர்கள் குறை சொல்லுகிறார்கள். உதாரணமாக செம்மேட்டில் 100 ஏகர் பூமி இருக்கிறது. அதை தாழ்த்தப்பட்ட மலை வாசிகளுக்கு பட்டா செய்து கொடுத்தால் அவர்கள் வாழ்வதற்கு சௌகரியமாக இருக்கும்.

24th March 1958] [Sri K. P. Palaniswami]

அவர்கள் போக்குவரத்திற்கு ரோடு வசதிகள் சரியாக இல்லை என்று தெரிகிறது. ஆகவே, அவர்கள் நடந்து போவதற்கு சில ரோடுகளையாவது நல்ல முறையிலே அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri N. MARUDACHALAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யத்தின் மீது நான் சில வார்த்தைகளை கூற விரும்புகிறேன். இந்த மான்யத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 2,33,44,500. இந்தத் தொகை பூராவும் ஹரிஜன நலனுக்காக செலவழிக்கப்படுகிறதா என்று பார்த்தால், இல்லை. பிற்பட்ட வகுப்பினர்களுக்கு வசதி செய்துகொடுப்பதற்கும், இந்த ஹரிஜன நல இலாகாவில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு சம்பளம் கொடுப்பதற்கும் சேர்த்து இந்தத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதில் தனியாக ஹரிஜனங்கள் என்று எடுத்துக்கொண்டால் அவர்களுக்காக செலவழிக்கப்படுவது ஒரு கோடி ரூபாய் கூட வராது என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். ஆனால் ஹரிஜன மான்ய விவாதத்தின்போது, எல்லா கட்சி அங்கத்தினர்களும், ஜாதி ஹிந்துக்களும், ஜாதி ஹிந்துக்கள் அல்லாதவர்களும் வருஷா வருஷம் ஹரிஜனங்களுக்காக பரிந்து பேசிக்கொண்டு வருகிறார்கள். அப்படி பேசி வந்த போதிலும் கூட, ஹரிஜனங்கள் முன்னேற்றம் அடையவில்லை என்று இப்பொழுதும் எதிர்க் கட்சி அங்கத்தினர்களும், மற்ற அங்கத்தினர்களும் பேசுகிறார்கள். இவ்வளவு பணம் ஒதுக்கியும் அது ஹரிஜனங்களுக்கு பிரயோஜனப்படுகிறதா, அவர்கள் முன்னேற்றம் அடைவதற்கு உபயோகப்படுகிறதா என்று பார்த்தால், கொஞ்சம் கூட பிரயோஜனப்படவில்லை என்றுதான் கூறமுடியும். ஹரிஜனங்களுக்காகவீடு கட்டும் திட்டம், 'ஸ்காலர்ஷிப்' கொடுக்கும் திட்டம், ஹரிஜனப் பிள்ளைகளுக்கு உணவு அளிக்கும் திட்டம் இம்மாதிரி பல வகைகளில் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஹரிஜனங்களிடையே சிறு கைத்தொழில் அபிவிருத்திக்காக தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. அப்படி ஒதுக்கப்பட்ட தொகை ஹரிஜன நல அதிகாரிகளால் சரியாக விநியோகிக்கப்படுகிறதா என்று பார்த்தால், கொஞ்சம் கூட ஹரிஜனங்களுக்கு பிரயோஜனப்படுகிற முறையில் விநியோகிக்கப்படவில்லை என்று தான் கூற வேண்டியிருக்கிறது. தலைமை உபாத்தியாயர் முதலில் 40 பிள்ளைகளுக்கு 'ஸ்காலர்ஷிப்' வேண்டுமென்று எழுதி அனுப்பினால் அதை 'சாங்ஷன்' செய்வதில்லை. பின்னாலே அனுப்பினால் 10 பிள்ளைகளுக்கு மாத்திரம் சாங்ஷன் செய்கிறார்கள். ஏனென்று கேட்டால், 2 தடவை அனுப்பியிருக்கிறார்கள், அப்படித்தான் செய்வது என்று அந்த ஹரிஜன நல இலாகா அதிகாரி கூறுகிறார். அதுமட்டுமல்ல. டைலரிங் மெஷின், லெத் மெஷின் இவைகளுக்கு பாதி விலையில் வாங்கிக் கொடுப்பதற்கு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. சென்ற வருஷத்தில் லேத் மெஷின் வாங்கிக்கொடுப்பதற்கு மனு போட்டவர்களுக்கு இந்த வருஷத்தில் கூட அது கிடைப்பதில்லை. அதற்கு காரணம் ஹரிஜன நல இலாகா அதிகாரி ஆபீஸில் ஒரு ஹெட் கிளார்க் இருக்கிறார். அவரை முன்னால் போய் பார்த்தால் தான் இந்த மெஷின் கிடைக்கும், இல்லாவிட்டால் கிடைக்காது என்று சொல்லப்படுகிறது. ஆகையால் ஹரிஜனங்களாக இருப்பவர்களையே ஹரிஜன இலாகா அதிகாரிகளாகப் போட்டால்தான் ஹரிஜனங்களுடைய கஷ்ட நஷ்டங்களை அவர்கள் அறிந்து வேண்டிய வசதிகளை செய்துகொடுக்க ஹேதுவாக இருக்கும். ஹரிஜனங்களல்லாதாரை அந்த உத்தியோகங்களுக்கு நியமிப்பதால், ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகை மற்றவர்களுக்குப் பயன்பட ஏதுவாகிறது. அந்தப் பணத்தால் ஹரிஜனங்கள் பயனடைவதில்லை ஹரிஜன நலனுக்கான மானியத்தில், ஆசிரியர்களுக்காக 10,07,538 ரூபாயும், அலுவலகத்தாருக்காக 20,751 ரூபாயும், சிப்பந்திகளின் செலவிற்காக 2,633 ரூபாயும், இதர செலவுகளுக்காகவும் சில்லரைச் செலவுகளுக்காகவும் 17,02,255 ரூபாயும், குடிக்கூலிக்காக 46,161 ரூபாயும் ஒதுக்கப்படுகின்றன. ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்படும் பணத்தில் இந்தத் தொகைகள் எல்லாம் ஹரிஜனங்களுக்குப் பிரயோஜனப்படாத பணம். இந்த தொகைகள் போக பாக்கியுள்ள பணம்தான் ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இந்தத் தொகையின் மூலம் ஹரிஜன முன்னேற்றம் போதிய அளவு ஏற்படுமா ?

[Sri N. Marudachalam] [24th March 1958

கல்வியை எடுத்துக்கொண்டால், கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப்புகளினுல் பல ஹரிஜனங்கள் சரிவரப் பலனடைய முடியாமல் இருக்கிருர்கள். காரணம், சாதாரண பள்ளிக்கூடங்களிலிருந்து வைத்தியக் கல்லூரி வரையில், கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப் பணம் தாமதித்துக் கொடுக்கப்படுகிறது. காலாகாலத்தில் ஸ்காலர்ஷிப் பணம் கொடுக்கப்படாததால், பல மாணவர்களை பள்ளிகளிலிருந்து வெளியேற்றுவதற்கு பள்ளி நிர்வாகஸ்தர்கள் முயன்று வருகிருர்கள். ஆகவே அவர்களுக்கு ஸ்காலர்ஷிப் பணம் காலா காலத்தில் கிடைக்கச் செய்வதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டும்.

மேலும், கைத்தொழில் அபிவிருத்தியைப் பொறுத்தவரையில், முன்னதாக விண்ணப்பம் போடுபவர்களுக்கு அனுமதிகொடுக்க வேண்டும். இது சம்பந்தமாக ஹரிஜன் வெல்பேர் ஆபீசரிடம் நான் பேசிக்கொண்டிருந்தேன் 'சென்ற வருஷம் விண்ணப்பித்துக்கொண்டவர்களுக்கு ஏன் அனுமதி கொடுக்கவில்லை ?' என்று அவரைக் கேட்டேன். '10 வருஷங்கள்கூட ஆகலாம். அது அவரவர்களுடைய அதிர்ஷ்டம்.' என்று அவர் கூறினுர். ஹரிஜனங்களுக்காக சர்க்கார் ஒதுக்கும் பணம் எல்லா ஹரிஜனங்களுக்கும் சரிவரப் பயன்படுவதில்லை. அந்தப் பணத்தைப் பெற ஹரிஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். இந்தப் பணம் கொடுக்கப்படும் விதம் 'ப்ரைஸ் போடுவது' போல் இருக்கிறது. இந்த நிலைமையை மாற்ற வேண்டும். இதைச் செய்ய வேண்டுமானுல், ஹரிஜனரல்லாதவர்களை ஹரிஜன நல இலாகாவில் நியமிக்காமல், ஹரிஜனங்களை நியமிக்க வேண்டும். இப்போதுள்ள ஹரிஜனரல்லாத அதிகாரிகளுக்கு பதிலாக ஹரிஜனங்களை நியமிக்க வேண்டும். மேலும் ஹரிஜன நல அதிகாரிகளை அப்போதைக்கப்போ போது மாற்ற வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், ஹரிஜன நலனுக்காக ஒதுக்கப்படும் பணத்தினுல் ஹரிஜனங்கள் பயனடைய முடியாது என்பதுதான் என் கருத்து. ஹரிஜன நலனுக்காக இன்னும் கொஞ்சம் அதிகப் பணம் ஒதுக்கினுல் நல்லது என்று கூறிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. VINAYAKAM:** மதிப்பிற்குரிய தலைவர் அவர்களே, கோரப்பட்டுள்ள மானியத்தின்பேரில் ஒரு சில வார்த்தை சொல்ல விரும்புகிறேன். பல ஆண்டுகளாக ஆதிதிராவிட மக்கள் சமூதாயத்தால் ஒதுக்கப்பட்டும் கேவலமாக நடத்தப்பட்டும் வந்ததால், அவர்கள் அடிமைகளாக வாழ்ந்து வந்தனர். அப்படி இருந்து வந்த சமூகத்தை, காங்கிரஸ், அது ஆட்சிக்கு வந்தபிறகு, நினைத்த நாட்களுக்குள் முன்னேற்றமடையச்செய்துவிட வேண்டுமென்றே, அவ்வாறு செய்துவிட முடியும் என்றே யாராவது நினைத்தால், அது பெரிய தவறு ஆகும். ஆதித் திராவிட மக்களை முன்னேற்றமடையச் செய்வது, ஒரு பெரிய சிக்கலான பிரச்னை. இத்தனை ஆண்டுகளாக அடிமைகளாக இருந்தவர்களை முன்னேற்றமடையச் செய்வதென்ருல், குறைந்தது 20-30 ஆண்டுகளாவது பாடுபட்டால் தான் முன்னேற்றமடையச் செய்ய முடியும் என்பதை நாம் உணர வேண்டும். ஆங்கிலத்தில் '**Rome was not built in one day**' என்று ஒரு பழமொழி உண்டு. பல ஆண்டு முயற்சிக்குப் பிறகு தான் ரோம் நகரம் அவ்வளவு அழகான நகரமாக ஆகியது; அவ்வளவு நாகரிகம் பொதிந்த கட்டிடங்கள் அங்கே ஏற்பட்டன. அதே மாதிரித்தான் ஹரிஜன முன்னேற்றம் பூரணமாக ஏற்படுவதற்கும் பல ஆண்டுகள் ஆகலாம். காங்கிரஸ் ஆட்சியாளர்கள் 1949-ம் ஆண்டில் ஹரிஜன முன்னேற்றத்திற்காக ஒரு தனி இலாகாவை அமைத்தார்கள். அதே சமயத்தில், கல்வித் துறையிலும் மற்ற பல துறைகளிலும் பிற்பட்டவர்களாக இருக்கும் மக்களை முன்னேற்றமடையச் செய்வதற்காகவும் ஒரு சிறிய இலாகாவை அரசாங்கத்தார் அமைத்தார்கள். இந்த இரண்டு இலாக்காக்களும் ஒரே அமைச்சரின் கீழும், ஒரே டைரக்டரின் கீழும் இயங்குகின்றன. ஆதித் திராவிட எம்.எல்.ஏ.-க்களிலும் ஆதித் திராவிடத் தலைவர்களிலும் விஷயம் புரியாதவர்கள் என்ன நினைக்கிருர்கள் ? ஆதித் திராவிடர்களுக்காக தனியாக ஒதுக்கப்பட்ட பணத்திலிருந்து தொகைகளை எடுத்து பிற்பட்ட இனத்தவர்களுக்கு அரசாங்கம் கொடுத்துவிடுவதாக அவர்கள் நினைக்கிருர்கள். இந்த சந்தேகத்தை கனம் அமைச்சர் நீக்குவார் என்று நினைக்கிறேன். பிற்பட்ட இனத்தவர்களுக்காக தனித்தொகை

24th March 1958] [Sri K. Vinayakam]

இருக்கிறது. ஆதித் திராவிட மக்களுக்காக வேறு தனித் தொகை இருக்கிறது. இரண்டிற்கும் சம்பந்தமில்லை. ஆதித் திராவிட மக்களுக்கான பணத்திலிருந்து ஒரு சல்லிக் காசுகூட பிற்பட்ட இனத்தவர்களுக்குக் கொடுக்கப்படுதவதில்லை என்பதை கனம் அமைச்சர் விளக்கமாகச் சொல்லி விட வேண்டுமென்று அவரைக் கேட்டுக் கொள்கிறேன். அவர் இதை விளக்கமாகச் சொல்லிவிட்டால் ஆதித் திராவிடர்களின் இந்த சந்தேகத்திற்கு இடமிருக்காது.

நான் கனம் அமைச்சருக்கு இன்னுமொரு யோசனை கூற விரும்புகிறேன். எங்களுக்காக, அதாவது பிற்பட்ட இனத்தவர்களுக்காக, ஒரு தனி டைரக்டர் நியமிக்கப்பட்டு, தனி **Directorate**-ம் அமைக்கப்பட்டு அந்த டைரெக்டரிடம் நாங்கள் சென்று பேசிவருவதை ஆதித் திராவிட மக்கள் பார்த்தால் அவர்களுக்கு இந்த சந்தேகம் எழாது. அவ்வாறு அரசாங்கத்தார் செய்தால் மிகவும் நன்றாக இருக்கும். மேலும் பிற்பட்ட இனத்தவர்களுக்காக ஒரு தனி மந்திரியே இருந்தால் இன்னும் நன்றாக இருக்கும். நான் இவ்வாறு சொல்வதால், இப்போதைய மந்திரி மீது நான் சந்தேகம் கொண்டிருப்பதாக யாரும் நினைக்கக்கூடாது. பிற்பட்டவர்களின் நலன்களைப் பேணுவதற்காக தனி டைரெக்டரையும் தனி மந்திரியையும் நியமித்தால் மிகவும் நன்றாக இருக்கும்.

ஆதித் திராவிட மக்களுக்கும் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் அரசாசாங்கம் செய்து வரும் நன்மைகளை நாம் குறைவுபடுத்திப் பேச முடியாது. பிற்பட்ட இனத்தவர்களைப் பொறுத்தவரையில், அரசாங்கம் அவர்களுக்கு பல நன்மைகளைச் செய்திருக்கிறது. ஒரு காலத்தில் பிற்பட்ட இனத்தவர்களுக்காக அரசாங்கத்தார் 1 லட்சம் ரூபாய் தான் ஒதுக்கினார்கள். இப்போது அவர்களுக்காக அரசாங்கத்தார் 12 லட்சம் ரூபாய் ஒதுக்கி யிருக்கிறார்கள் என்றால், அவர்களிடம் அரசாங்கத்தார் கொண்டுள்ள நல்லெண்ணத்தைத் தான் இது காட்டுகிறது. அதேமாதிரி ஆதித்திராவிட மக்களுக்காகவும் அரசாங்கத்தார் நிறையப் பணம் ஒதுக்கியிருக்கிறார்கள். இதை ஆதித் திராவிட எம்.எல்.-ஏ.-க்களும் தலைவர்களும் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இதை உணராமல் 'அரசாங்கத்தார் எங்களுக்கு ஒன்றுமே செய்யவில்லை, எங்களைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை' என்று அவர்கள் கூறினால், ஆட்சியில் இருப்பவர்களின் மனதும் காங்கிரஸ் கட்சியில் இருப்பவர்களின் மனதும் எவ்வளவு துன்பப்படும் என்றும், அவர்கள் எவ்வளவு கஷ்டத்திற்கு ஆளாவார்கள் என்றும் அவர்கள் சிந்தித்துப்பார்க்க வேண்டும். இந்த நாட்டில் சௌகரியமாக இருப்பவர்கள் தான் வரி கொடுக்கிறார்கள். வரி கொடுக்கும் வசதியுள்ளவர்கள் முற்பட்ட இனத்தவர்களாக இருக்கிறார்கள். பணக்காரர்களாகிய அவர்களிடமிருந்து பணத்தை வரியாக வசூலித்து வசதியில்லாத ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் அரசாங்கம் கொடுப்பது,

'**Rob Peter to pay Paul**' என்ற ஆங்கிலப் பழமொழிக்கு ஒத்ததாக இருக்கிறது. பணக்காரர்களிடமிருந்து பணத்தை வரியாக வசூலித்து அந்தப் பணக்காரர்களின் நன்மைக்காகச் செலவு செய்யாமல் பணம் கொடுக்காத பிற்பட்ட இனத்தவர்களுக்கும் ஆதித் திராவிடர்களுக்கும் அதை அரசாங்கம் கொடுக்கிறது. இதைப் பார்க்கும்போது வரி கொடுப்பவர்களின் மனம் எப்படி வேதனைப்படும் என்பதை ஆதித் திராவிட மக்களும் பிற்பட்ட மக்களும் உணர வேண்டும். சோஷலிஸ சமுதாயத்தை அமைப்பதற்காக, பணக்காரர்களிடமிருந்து வரியை வசூலித்து பணமில்லாதவர்களுக்காக அரசாங்கத்தார் செலவு செய்கிறார்கள். இந்த நிலையில் வரி கொடுப்பவர்களின் மனம் புண்படக்கூடிய முறையில் நாம் ஒன்றும் பேசக்கூடாது என்றுகூட நான் அழுத்தந்திருத்தமாகச் சொல்வேன்.

ஹரிஜன நல இலாகா எப்படி நடக்கிறது? ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு ஜில்லா ஹரிஜன நல அதிகாரி இருக்கிறார். அனேகமாக எல்லா ஜில்லா ஹரிஜன நல அதிகாரிகளும் நேரிடையாக ஹரிஜன நல டைரெக்டரின் கீழ் வேலை செய்வதில்லை. ஒரு சில ஜில்லா ஹரிஜன நல அதிகாரிகள்தான் நேரிடையாக டைரெக்டரின் கீழ் வேலை செய்கிறார்கள். பல ஜில்லாக்களில் ஜில்லா ஹரிஜன நல அதிகாரிகள் கலெக்டரின் கீழ் வேலை

[Sri K. Vinayakam] [24th March 1958

செய்கிறார்கள். அப்படிப்பட்ட இடங்களில் டைரெக்டர் ஜில்லா ஹரிஜன நல அதிகாரிக்கு ஏதாவது நேரிடையாக எழுதினால், தன் மூலமாக இல்லாமல் நேரிடையாக ஜில்லா அதிகாரிக்கு டைரெக்டர் எவ்வாறு தெரிவிக்கலாம் என்று கலெக்டர்கள் ஆட்சேபிக்கிறார்கள். அவ்வாறு ஒரு ஜில்லாவில் நேர்ந்திருப்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஜில்லா ஹரிஜன நல அதிகாரிகள் நேரிடையாக டைரெக்டரின் கீழ் பணியாற்றும்படி செய்ய வேண்டும். கலெக்டருக்கு எத்தனையோ வேலைகள் இருக்கின்றன. அவர் களுக்கு **revenue work and such other works** இருக்கின்றன. அந்த வேலைகள் இருக்கும்போது ஹரிஜன நல வேலைகளை கலெக்டர் பரிபூரணமாக கவனிக்கமுடியாது என்று நான் பயப்படுகிறேன். ஆகவே ஜில்லா ஹரிஜன நல அதிகாரிகளை டைரெக்டரின்கீழ் நேரிடையாக பணியாற்றும்படி செய்ய வேண்டும். அவர்களில் சிலர் இப்போது கெஜெட் பதிவுபெறுதவர்களாக இருக்கிறார்கள். சில ஜில்லாக்களில் தாசில்தார்கள் ஹரிஜன அதிகாரிகளாக இருக்கிறார்கள் அவர்களுடைய பதவிகளை கெஜெட் பதிவு பெற்ற பதவிகளாக உயர்த்த வேண்டும். அவ்வாறு செய்தால் மிகவும் நன்றாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

பிற்போக்கு இனத்தவர்களுக்காக ஒதுக்கிவைத்திருக்கும் பணம் ரொம்பக் குறைவு. எங்களுக்கு உத்தியோகம் கூட தரவேண்டியதில்லை. ஆட் சியாளர்கள் பிற்போக்கு இனத்தவர்களுக்கு உத்தியோகம் தேடித் தரு வதைப்பற்றிக்கூட கவலைப் படவேண்டாம். நாங்கள் படித்துவிட்டால் போதும். நாங்கள் படித்துவிட்டால் முன்னேறுவதற்கு நாங்கள் வகை செய்துகொள்வோம். எங்களுக்கு வேண்டியதெல்லாம் **initial start in life.** ஆரம்பக் கல்வியிலிருந்து கலாசாலைக் கல்விவரை எங்களுக்கு யாதொரு தடங்கலும் இல்லாமல், தொல்லை இல்லாமல் இருக்கவேண்டும். அதற்கு எங்களுக்குப் போதிய அளவு நிதி ஒதுக்கிவிடுங்கள். **Almost free education at all stages** என்ற முறையில் கலாசாலைப்படிப்பு வரை யில் எங்களுக்கு இலவசமாகவே வசதி தந்துவிட்டால் உத்தியோகத்தைப் பற்றி நாங்கள் கவலைப்படமாட்டோம். ஆதித் திராவிடர்களைப் போல நன் றிகெட்டத் தனமாக இருக்க நாங்கள் வழி செய்யமாட்டோம். எங்களுக்குக் கல்வி ஒன்று இருந்தால் போதும். நாங்கள் முன்னேறி வந்துவிடுவோம். எங்களுக்கு இலவசக் கல்வி வசதி செய்துகொடுத்துவிட்டு மற்ற துறை களில் எங்களுக்காக ஒதிக்கியிருக்கும் மான்யங்களை வெட்டுவதற்கு அனுமதி கேட்டால் கூட, நாங்கள் ஒத்துக்கொள்வதற்குத் தயாராயிருக்கிறோம்.

மான்யத்தின் மீது கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையை நான் படித்துப் பார்த்தேன். ஏதோ டைரக்டர் அவர்களோ, அவர்கள் கீழ் இருக் கும் அதிகாரிகளோ ஹரிஜன மாணவர்களைத் துன்புறுத்துவதாகவும் கொடு மைப் படுத்துவதாகவும் ஒரு வெட்டுப் பிரேரணை வந்திருக்கிறது. அது பற்றி விசாரித்துப் பார்த்தேன். நடந்தது என்ன ? கனம் சூளை அங்கத் தினர் அங்கு இதிலே ஈடுபட்டிருக்கிறார். ஆதித் திராவிட மாணவன் ஒரு வன் டைரக்டர் ஆபீசுக்குப் போய், அங்கிருக்கும் ஒரு குமஸ்தாவையோ, சூபரின்டெண்டண்டையோ அணுகி, " என்னுடைய அப்ளிகேஷன் என்ன ஆயிற்று ? என்றைக்குப் பணம் ஒதுக்கினீர்கள் ? ஸ்காலர்ஷிப் கிடைத்ததா ?" என்று கேட்டால் எப்படி பதில் சொல்ல முடியும் ? அங்கிருக்கும் குமாஸ்தா என்ன சொல்வார் ? " டைரெக்டரைக் கேளுங்கள், பி.ஏ.-யைக் கேளுங்கள் " என்று சொன்னார். உடனே, செல்வாக்கு பெற்ற சூளை சட்ட சபை அங்கத்தினரிடம் பிராது செய்ய, அந்த அம்மையார் நேரடியாக அலு வலகத்திற்கு வந்து, " கோர்ட் மார்ஷல் " மாதிரி விசாரணை நடத்த ஆரம்பித்துவிட்டார். " என்ன ஐயா ? நான் சட்ட சபை அங்கத்தினர் ; இப்படிச் செய்யலாமா " என்று கேட்டால் அவர்கள் என்ன சொல்வார்கள் ? " நேரடியாக டைரக்டரைக் கேளுங்கள்,-பி.ஏ.யைக் கேளுங்கள் " என்று சொல்லிவிட்டார்கள். **A great scene was created in the office** " டைரக்டரைக் கேளுங்கள் ; பி.ஏ.-யைக் கேளுங்கள் " என்று சொன்னதற் காக ஒரு வெட்டுப் பிரேரணை வந்திருக்கிறது " **Ill treating Harijan students** என்று. அந்தத் தன்மையில் வெட்டுப்பிரேரணை கொடுத்தால், உத்தியோ கஸ்தர்கள் என்ன செய்வார்கள் ? உத்தியோகஸ்தர்கள் எப்படியும் வேலை செய்யவேண்டியவர்கள்தான் என்றாலும் இப்படியெல்லாம் அவர்

24th March 1958] [Sri K. Vinayakam]

களைப்பற்றி சொன்னால், அவர்கள் என்ன நினைப்பார்கள்? எவ்வளவோ நல்ல முறையில் வேலை செய்கின்ற இந்த அதிகாரிகளையோ, அமைச்சரவையையோ இவ்வளவு கடுமையாகப் பேசுவது தவறு. **It is not a fact; it is only indulging in terminological inexactitude.** "பொய்" என்று சொல்ல மாட்டேன். அந்த வார்த்தையை சட்டமன்றத்தில் பேசக் கூடாது. **Terminologial inexactitude** என்று சொல்வேன். அது உண்மை அல்ல. அதிகாரிகளைப்பற்றியெல்லாம் அப்படிச் சொல்வது தவறு. நான் டைரக்டரிடம் பல முறை போயிருக்கிறேன். அவர் வீடு ஒரு சத்திரம் மாதிரி இருக்கும். 10, 20 மாணவர்கள் அங்கே இருந்து கொண்டேயிருப்பார்கள். "யார்?" என்று அவர்களைக் கேட்டால், "ஆதித்திராவிட மக்கள்" என்று அவர்கள் சொல்வார்கள். ஆதித் திராவிட மக்களிடம் அவர் வைத்திருக்கும் நல்ல எண்ணம் எத்தகையது என்பதற்கு ஒரு சான்றை மாத்திரம் நான் இங்கே கூறினால் அவருடைய நல்ல எண்ணம் எல்லோருக்கும் விளங்கும். "முத்திருளாண்டி நகர்" என்ற பெயரில் 1,000 குடும்பத்தினருக்கு புறம்போக்கு நிலத்தில் குடிசைகள் போட்டுக்கொடுத்திருக்கிறார் என்றால், ஆதித்திராவிட மக்களுக்கும், பிற்பட்ட மக்களுக்கும் எவ்வளவு நன்மை செய்யவேண்டுமென்ற நல்ல எண்ணம் அவருக்கு இருக்கிறது என்பதை குறை சொல்பவர்கள் கவனிக்க வேண்டும். அவருடைய இந்தச் செய்கை எதைக் காட்டுகிறது? ஆதித் திராவிடர்களுக்கு நல்ல முறையில் இந்த இலாகா வேலை செய்வதைத்தான் காட்டுகிறது. "ஆதித்திராவிடர்களுக்கென்றே ஒரு தனி இலாகா இருக்க வேண்டும், அதற்கு டைரக்டராக ஒரு ஆதித்திராவிடரே இருக்கவேண்டும் என்று சொல்வதென்றால், அது அவர்களுக்கு நியாயம் செய்வதாகாது. **We are not doing proper justice to the officers concerned.**

தலைவர் அவர்களே, நான் வற்புறுத்திச் சொல்லுவது ஒரேஒரு பிரச்னைதான். சென்னையில் பல இடங்களில் ஆதித் திராவிட மக்களுக்கு இலவசமாகவே வீடு கட்டுகிற மனையை ஒதுக்கித் தந்திருக்கிறார்கள். வெள்ளப் பாதுகாப்புக்காக குடிசை கட்டிக்கொள்ள மக்களுக்கு பணத்தை சர்க்கார் சார்பில் டைரக்டரும், கலெக்டரும் வைத்துக்கொண்டு இனாமாகத் தந்தார்கள். அப்படிச் செய்யும் இந்த நல்ல இலாகாவை குறை சொல்வதிலே லாபம் இல்லை. மேலும் மேலும் இத்தகைய நல்ல காரியங்களைச் செய்வதற்கு ஊக்குவிக்கவேண்டும். அதிகமாகச் செலவு செய்ய அவர்களை உற்சாகப்படுத்தவேண்டும். அந்த அளவில் நம்முடைய பேச்சுக்களும், அமைய வேண்டும். டைரக்டருடைய வீட்டுக்கு நான் நேற்று காலை போயிருந்தேன், இந்த வெட்டுப் பிரேரணையைப்பற்றி தெரிந்து கொள்வதற்காக.

DEPUTY SPEAKER: The hon. Member has got one minute more.

SRI K. VINAYAKAM: Yes, Sir. I shall finish in a minute.

இதையெல்லாம் பார்க்கும்போது, கனம் அங்கத்தினர் ஒருவர் கூறிய குறளைப்போலவே நான் இன்னொரு குறளைக் குறிப்பிடுவேன். அதாவது, "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல தன்றே மறப்பது நன்று" என்று வள்ளுவர் ஆணித்தரமாக, அழுத்தந்திருத்தமாகச் சொல்லியிருக்கிறார். யாராவது ஒரு நல்ல காரியம் செய்தால் அதை மறக்கவே கூடாது. அந்த நல்ல காரியத்தைச் செய்தவர் திரு. காமராஜ் அவர்களாக இருந்தாலும் சரி, காங்கிரஸ் கட்சியாக இருப்பினும் சரி, எதிர்கட்சியில் இருக்கும் ஒரே காரணத்திற்காக, குறை சொல்வதே தம்முடைய வாழ்கையின் லட்சியமாகப் போய்விட்டது சிலருக்கு. மாற்றுக்கட்சித் தோழர்களோ, அந்த இனத்தைச் சேர்ந்தவர்களோ நன்றி மறந்த முறையிலே இங்கு கண்டித்துப் பேசினாலும் வள்ளுவர் அன்னவர்களை மன்னிக்கமாட்டார்கள். ஏனென்றால், "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்றும் திருவள்ளுவர் கூறியிருக்கிறார். ஆகவே, ஏதோ ஒரு சில தவறு நடந்தால், அதை அப்பொழுதே மறக்கவேண்டுமே யொழிய, அப்படியில்லாமல், அதையே திரும்பத் திரும்பச் சொல்லி,

கேவலமான முறையில், " இதைச் செய்ய வில்லை ; அதைச் செய்யவில்லை " என்று குறைச்சொல்லுவது மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்டது என்று சொல்வேன். ஆகையால் அவர்களுடைய நன்றியை என்றுமே மறக்கக் கூடாதென்று சொல்லி என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

**SRI T. VELUCHAMI :** கனம் உப சபாநாயகர் அவர்களே, நான் இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்துப் பேசுகின்றேன். இந்த ஆண்டு ஹரிஜன இலாகா மான்யத்திலே ஒரு பெரிய குறைபாடு இருக்கிறது. அந்தக் குறைபாட்டை நான் இங்கே எடுத்துச்சொல்ல வேண்டிய அவசியம் இருக்கிறது. சென்ற ஓராண்டுக் காலத்திலே, இந்த நாட்டில் பல துக்க கரமான நிகழ்ச்சிகள் நடந்ததன் காரணமாக, ஹரிஜன மக்களும், மறவர் குலத்து மக்களும் வெகுவாக பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். வகுப்பு வெறி யும் தலைதூக்கி அது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துகொண்டிருக்கிறது. அந்த வகுப்பு வெறி இப்படியே வளர்ந்து கொண்டே போகுமேயானால், அது ஹரிஜன மக்களையும், மறவர் மக்களை யும், இந்த நாட்டையும் எந்த நிலைக்குக்கொண்டுபோய்ச் சேர்க்குமோ அது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். அப்படிப்பட்ட ஆபத்தான முறையில் வகுப்பு வெறி வளர்ந்து வருவதைத் தடுப்பதற்கு உரிய அக்கறை இந்தச் சர்க்காருக்கு இல்லை என்றுதான் சொல்லவேண்டும். இந்த நாட்டை பாதிக்கக்கூடிய முக்கியமான பிரச்னையாக இருக்கக்கூடிய வகுப்பு வெறியை ஒழிப்பதற்கான பரிகாரத்தைக் கண்டு, அதற்கு எவ்வளவு தொகை வேண்டுமானாலும் சரி, அதை ஒதுக்கி, வகுப்பு வெறியை ஒழிக்க அக்கறை காட்டியிருந்தால், அது பொறுப்புடைய சர்க்கார் செய்யக்கூடிய தாக இருக்கும். வகுப்பு வெறியைத் தொலைப்பதற்கு தீண்டாமை ஒழிப்பு வாரம் கொண்டாடினாலும் சரி, ஹரிஜன நல இலாகா மூலமாக எத்தனை பரிசுகள் வழங்கினாலும் சரி, அவையெல்லாம் உதவாக்கரை பரிகாரங்களாக இருக்குமேயொழிய, உண்மையிலேயே வகுப்பு வெறியை ஒழிக்கவேண்டு மானால் கட்டாயக் கல்வி முறைதான் நிச்சயமாக ஒழிக்கக்கூடிய பரிகார மாக இருக்கும்.

இன்றைக்கு படித்தவர்களிடையே ஜாதி வித்தியாசம் பாராட்டுவதில்லை. எவ்வளவுதான் ஜாதி வித்தியாசங்களோடு கூடியவர்களாக இருந்தாலும் அவர்கள் ஒருவரோடொருவர் நெருங்கி அன்னியோன்னியமாக பழகி வருகிறார்கள். ஆனால், படியாதவர்கள் வகுப்பு வித்தியாசங்களை விடா மல் பற்றிக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, இந்த வகுப்பு வெறியை ஒழிப்பதற்குரிய ஒரு நடவடிக்கையாக கட்டாயக் கல்வி முறையை எந்தப் பாகங்களில் அமுல் நடத்தினாலும் நடத்தாவிட்டாலும், முக்கியமாக ஹரிஜன மக்களும், மறவர் மக்களும் நெருங்கி வாழும் பகுதிகளிலாவது அமுல் நடத்தியிருக்கவேண்டும் அல்லது கலவரங்களினால் பாதிக்கப்பட்ட பகுதிகளிலாவது கட்டாயக் கல்வி முறை அமுல் நடத்தப்பட்டிருக்கவேண் டும். கட்டாயக் கல்வி முறைக்கு வறுமை இடையூறாக இருக்கிறதென்று சொல்லலாம், அமைச்சர் அவர்கள். பாடசாலைகளில் படிக்கும் மாணவர் களுக்கு இலவசச் சாப்பாடு வழங்குவதின் மூலமாக அந்தக் கட்டாயக் கல்வி முறையை எளிதாக்கிக் கொள்ளமுடியும். செலவுகள் அதிகமாகும் என்றாலும், அதனால் பரவாயில்லை. இந்த நாட்டு மக்களையும் இந்த நாட்டிலே ஜனநாயகத்தையும் குழிதோண்டிப் புதைக்கக்கூடிய வகுப்பு வெறியைக் கண்டிப்பாக ஒழிக்கவேண்டியது நமக்கு முதல் கடமையாக இருக்கிறபடியால் அந்தக் கட்டாயக் கல்வி முறையை கண்டிப்பாக அமுல் நடத்த வேண்டிய நடவடிக்கைகளை இந்த சர்க்கார் எடுத்திருக்கவேண்டும். தேசீய வளர்ச்சித் திட்டங்களிலுள்ள பணம் போல அல்ல இதில் செலவிடு வது. தேசீய வளர்ச்சித் திட்டங்களில் செலவிடும் பணம் அநேகமாக விரய மாகிறது என்று இந்தச் சபை அங்கத்தினர்கள் சொல்லிக் கொண்டிருந் தார்கள். ஆனால் கட்டாயக் கல்வி முறையில் செலவிடும் ஒவ்வொரு நயா பைசாவும் இந்த நாட்டின் நலனுக்கு உபயோகப்படும், ஒவ்வொரு நயா பைசாவாகும் என்பதோடு அல்லாமல் இந்தக் கலவரங்களுக்குக் காரணமானவர்களுக்கு ஓர் பிராயச்சித்தமாக இருக்குமென்று நம்புகிறேன்.

24th March 1958] [Sri T. Veluchami]

அடுத்த ஒரு விஷயம் நான் முக்கியமாகச் சொல்ல வேண்டியது. ஹரிஜன இலாகா மூலம் சலுகை அளிப்பதில் சர்க்கார் காட்டிவரும் பாரபட்சம் இந்த நாட்டில் வகுப்புத் துவேஷத்தை பரப்பக்கூடிய நிலைமையில் இருக்கிறது. இதை நான் எடுத்துப் பேசும்போது ஒரு குறிப்பிட்ட சமூகத்தார் மீது துவேஷத்தின் காரணமாகச் சொல்லவில்லை. நான் குறிப்பாக அந்தச் சமூகத்தாருடன் நெருங்கிப் பழகக் கூடியவன். அவர்களிடத்தில் அதிகமான அன்பும், அபிமானமும் உள்ளவனுகையால் என்னை வேலுச்சாமி தேவர் என்பதற்குப் பதிலாக வேலுச்சாமி நாடார் என்று அழைப்பது வழக்கம். சர்க்கார் சலுகை காண்பிக்கும் விஷயத்தில் சர்க்கார் பாக்வர்டு சமூகத்தார், மோஸ்ட் பாக்வர்ட் சமூகத்தார் என்று இரண்டு பிரிவுகள் செய்திருக்கிறார்கள். பாக்வார்ட் சமூகத்தாரின் இன்னும் நன்றாக விருத்தி ஆகாத வன்னியர், முக்குலத்தோர் படையாச்சி போன்றவர்கள் இருக்கிறார்கள். இந்த அரசாங்கம் பின்தங்கிய வகுப்பாருக்குச் சில சலுகைகள் அளிப்பதன் மூலம் அவர்களை முன்னேற்றம் அடையச் செய்யவேண்டும் என்று சர்க்கார் விரும்பலாம். அது இயற்கை. அப்படிச் செய்ய வேண்டியதும் அவசியம் தான். ஆனால் நெடுங்காலமாக முற்போக்குச் சமூகத்தார் என்று கருதப்பட்டவர்கள் எப்படி பின்தங்கிய வகுப்பாரையும் தாண்டி, மிகவும் பின்தங்கிய வகுப்பார் ஜாபிதாவில் சேர்க்கப்பட்டார்கள் என்பதிலேயே மக்கள் அதிக கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். இதில் மக்களிடையே பாரபட்சம் காட்டப்படுகிறது என்று மக்கள் நினைக்கிறார்கள். அது தவிர ஓர்புறம் ஓர் ஜாதி மக்கள் இன்னொரு சாதி மக்களிடையே அர்த்தம் இல்லாத வகையில் துவேஷம் பாராட்ட ஆரம்பிக்கிறார்கள். வகுப்பு துவேஷம் இல்லாத நிலைமையில் அவர்களுக்குள் ஓர் ஒற்றுமை நிலவச் செய்வதற்கு சர்க்காருடைய போக்கு கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இந்தச் சர்க்காரின் கொள்கையினால் வகுப்புத்துவேஷம் வளருவதற்குரிய நிலைமையில் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்காமல் இப்போது இருக்கும் நிலைமைக்குப் பரிகாரமாக இந்தப் பிரிவில் இருக்கும் வன்னியர், படையாச்சி, முக்குலத்தோர் போன்றவர்களையும் மிகவும் பின்தங்கிய வகுப்பார் பட்டியலில் சேர்க்கவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்ற ஆண்டில் ஒரு காரியம் அமைச்சர் அவர்களிடம் சொன்னேன். அது இன்று வரையில் கவனிக்கப்படவில்லை. அது ஒரு நியாயமான கோரிக்கை. பாரபட்சமற்ற முறையில் நமது அமைச்சர் அவர்கள் நியாயம் வழங்கி வருவதாகக்கூட சென்ற ஆண்டில் பாராட்டினேன். ஆனாலும் நியாயம் வழங்கப்படவில்லை.

அதாவது இந்து அரிஜனங்களுக்குக் கொடுக்கப்பட்ட சில சலுகைகள் கிருஸ்துவ அரிஜனங்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறதைப் போலவே, பின்தங்கிய வகுப்பார், மிகவும் பின்தங்கிய வகுப்பார் என்று இந்துக்களுக்கு அளிக்கப்படுவதைப்போலவே, அந்த வகுப்பாரைச் சேர்ந்தவர்கள் கிருஸ்துவர்களாக மாறியிருந்தாலும் அளிக்கப்படவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொண்டேன். இது நியாயமான கோரிக்கை. சென்ற ஆண்டில் இருந்தே நான் சொல்லிக்கொண்டு வந்தபோதிலும் இன்னும் அது நிறைவேற்றப்படவில்லை. சர்க்காருக்கு இவ்விஷயத்தில் ஒரு குறிப்பிட்ட கொள்கை இருக்க வேண்டும். இந்துக்களில் குற்றபரம்பரையினர் இருப்பது போலவே, மதம் மாறிய கிருஸ்தவர்களும் குற்றபரம்பரையினராக இருக்கிறார்கள். அவர்களுக்கும் இச்சலுகை அளிப்பது மிகவும் நியாயமானதாகும்.

தவிர, தேசீய வளர்ச்சித் திட்டத்தில் சில கிராமங்களில் மக்கள் பெருவாரியாக பிற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கிறார்கள். அந்த கிராமங்களில் ஏதாவது அபிவிருத்தித் திட்டங்களை அமைப்பது சர்க்கார் கிராமத்தார்கள் கொடுக்கவேண்டிய பாதித் தொகையை கட்டுவதற்கும் மார்க்கம் இல்லாமல் இருக்கிறார்கள். அதனால் அந்த கிராமங்களில் பல அபிவிருத்தி வேலைகள் நடைபெறவில்லை. ஆகவே இப்படிப்பட்ட கிராமங்களுக்கு அங்குள்ள பின்தங்கிய வகுப்பார்கள், ஹரிஜனங்கள் இவர்களுடைய நலனைக் கருதியாவது சர்க்காரே இந்த உதவித் தொகையைக் கொடுக்க முன்வரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். ஆகவே

[Sri T. Veluchami] [24th March 1958

பிளாக் டெவெலப்மெண்டு ஆபீசர்களுக்கு ஒரு டிஸ்க்ரிஷன் கொடுத்து இம்மாதிரியாக பிற்போக்கு இனத்தவர்கள் அதிகாமாகவுள்ள கிராமங்களுக்கு சர்க்காரிடமிருந்தே ஒரு பகுதி உதவித் தொகையைப் பெற்றுக் கொள்ள வசதி செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொண்டு நான் முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. R. VISWANATHAN :** உதவி அவைத் தலைவர் அவர்களே, இந்த ஹரிஜன முன்னேற்ற மானியக் கோரிக்கையை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த சமயத்தில் இதுவரை இந்த இலாகாவுக்கு பொறுப்பு ஏற்று நடத்தி வந்து இப்பொழுது மாற்றப் பட்டு செல்கின்ற டைரக்டர் அவர்களைப்பற்றி அவர்கள் சிறந்த முறையில் பணியாற்றியதை குறித்து பாராட்டாமல் இருக்கமுடியாது. குறிப்பாக அண்மையில் இந்த இலாகாவிலிருந்து மாற்றப்பட்டுள்ள ஸ்ரீ முத்திருளாண்டி அவர்கள் இந்த இலாகாவில் செய்திருக்கும்படியான பல நல்ல காரியங்களில் படிப்புதவிர (**Scholarship**) வழங்குவதன் மூலம் செலவாகிக் கொண்டிருந்த பணம் இவர் வந்த பிறகுதான் சரியான முறையில் செலவிடப்பட்டது. அவர் மிகவும் நியாயமான முறையில் படிப்புதவி பணம் செலவிடப்படுவதைச் சீர் செய்தார். அவரிடம் சட்டசபை அங்கத்தினர்கள் மாணவர்களுக்கு உதவி வழங்கவேண்டுமென்று கேட்கப் போகும்போது எப்படி சர்க்கார் வழங்குகின்ற பணத்தை ஜில்லாவாரியாகப் பிரித்து, பிறகு அந்த ஜில்லாவிற்குள்ளேயே இனவாரியாகப் பிரித்து, பிறகு அந்த இனத்திற்குள்ளேயே மார்க்குகளையும், அந்தப் பையனுடைய நிலைமையையும் கணக்கிட்டுத் தனித்தனி மாணவர்களுக்கும் நியாயமாக சென்று சேருகிற வகையில் காரியங்கள் செய்திருப்பதாக எடுத்துக் காட்டுவார்கள். எதைச் சொல்லவேண்டுமென்று சட்டசபை அங்கத்தினர்கள் சொல்கிறார்களோ அதைச் சொல்லாமலேயே அந்த அதிகாரி மிகவும் நியாயமாக நடந்து கொள்கிறார் என்று நினைத்து பாராட்டி விட்டுத் திரும்பி வந்துவிடுவார்கள். அதோடு அந்த இலாகாவின் பணம் விரயமாக்கப்படுகிறது என்று வெட்டுப்பிரேரணை கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர எப்படி வீணாக்கப்படுகிறது என்று யாரும் சொல்லவில்லை. முன்பு வீணாக்கப்பட்டிருக்கலாம். இவர் வந்த பிறகு பணம் எந்த விதத்திலும் விரயமாகாமல் தடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு முன் படிப்புதவி யார் யாருக்கு வழங்கப்படுகிறது என்கிற லிஸ்டு கல்லூரிக்கு ஒன்றுதான் அனுப்பப்படும். அப்போது பணமோசடி செய்ய சந்தர்ப்பம் இருந்தது. உதவி கிடைத்த மாணவனுக்குக்கூட அந்த உதவி அளிக்கப்பட்டது தெரிவிக்கப்படாமல் இருந்ததும் நமக்குத் தெரியும். அந்த இலாகா தலைவராக ஸ்ரீ முத்திருளாண்டி அவர்கள் வந்தபிறகு விளம்பரப் பலகையில் ஒட்டுவதற்கு மற்றொரு லிஸ்டு அனுப்பி வெளிப்படுத்தியதால் அப்படிப்பட்ட மோசடிகள் எல்லாம் தவிர்க்கப்பட்டன. ஆகவே அவர் ஏழைகளுக்கு நியாயமான முறையில், மிகவும் திறமையான சேவா மனப்பான்மையோடு செய்து வந்திருக்கும்படியான செயல்களுக்காக எல்லாம் அவரைப் பாராட்டுகிறேன்.

10-50 a.m. அடுத்தபடியாக பிற்பட்ட மக்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் சர்க்கார் இப்போது செய்துவருகிற நன்மையைப் பாராட்டும்போது இந்த இனத்தவர்களுக்கு உத்தியோக விஷயத்தில் சர்க்கார் இன்னும் சில விஷயங்களில் கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

உத்தியோக நியமனங்களில், பிற்பட்ட வகுப்பாருக்கு 25 சத விகிதம், தாழ்த்தப் பட்டவகுப்பினருக்கு 15 சத விகிதம் உத்தியோக நியமனத்தில் மட்டும் ஒதுக்கியிருக்கிறார்கள் என்று நாம் அறிவோம். ஆனால் உத்தியோக உயர்வுகளில் அம்மாதிரி இடங்கள் ஒதுக்கப்படுவதில்லை. அப்படி உத்தியோக உயர்வுகளில் இடங்கள் ஒதுக்கப் படாததால் உயர்ந்த உத்தியோகங்களில் இவர்களுக்கு தம் பங்கு கிடைப்பதில்லை. உதாரணமாக கலெக்டர்களை எடுத்துக்கொண்டால், இம்மாகாணத்தில் 12 கலெக்டர்கள் இருக்கிறார்கள் என்றால் அதில் முற்பட்டவகுப்பினரைச் சார்ந்தவர்கள் 10 பேர்கள் இருப்பார்கள். பிற்பட்ட வகுப்பினரில் இரண்டு பேர்கள்தான் இருப்பார்கள். அதேபோன்று இன்னும் அதற்கு சமமான பதவிகளில், **Assistant Secretaries, Deputy Secretaries and Secretaries**

24th March 1958] [Sri K. R. Viswanathan]

இலாகாத் தலைவர்கள்போன்ற உயர்ந்த பதவிகளை எடுத்துக் கொண்டால் முற்பட்ட வகுப்பைச் சார்ந்த பெரும்பாலானவர்கள் தான் அந்தப் பதவிகளை வகிக்கிறார்கள். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் அல்லது பிற்பட்ட வகுப்பினர் அதில் குறைவாகத்தான் இருக்கிறார்கள். காரணம் உத்தியோக நியமனத்தில் மாத்திரம் சலுகைகள் கொடுக்கிறார்களே தவிர உத்தியோக உயர்வு விஷயத்தில் சலுகைகள் கொடுக்கப்படுவதில்லை. ஆகவே உத்தியோக உயர்வு விஷயத்திலும் சலுகைகள் காட்டினால்தான் பிற்பட்ட வகுப்பினருக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் கிடைக்கக்கூடிய பங்கு கிடைக்கும். அதைப்பற்றிய ஆலோசனை மத்திய சர்க்காரிடம் இருக்கிறது. மத்திய அரசாங்கத்தில் பொறுப்பு உள்ளவர்கள் இம்மாதிரி உத்தியோக உயர்வு விஷயத்திலும் சலுகைகள் கொடுக்கவேண்டும், அதற்காக தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இடங்கள் ஒதுக்க வேண்டுமென்று ஆலோசனை செய்துகொண்டிருக்கிறார்கள் என்பதை நான் இங்கு நினைவூட்ட விரும்புகிறேன். அடுத்தபடியாக, மிகவும் பின் தங்கிய வகுப்பினரைப் பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். மிகவும் பின் தங்கிய வகுப்பினர் என்ற பிரிவானது, அகில இந்திய பிற்பட்ட கமிஷன் ஒன்று மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்டு அவர்கள் நாடு முழுவதும் சுற்றி ஆங்காங்குள்ள எல்லா இனத்தாரின் நிலைமையையும் பரிசீலித்து எந்தெந்த மக்களை மிகவும் பின்தங்கிய வகுப்பினராகக் கருதவேண்டும் என்று ஆராய்ந்து எடுத்துச் சொல்லி, அவர்களுக்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் தீண்டாமை என்ற ஒரு வித்தியாசம்தான் இருக்கிறதே தவிர மற்ற எந்த வித்தியாசமும் இல்லை. ஆகவே, மிகவும் பின்தங்கிய வகுப்பினர் என்பவர்களுக்குத் தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கொடுக்கப்படும் சலுகைகளை கொடுக்கவேண்டும் என்று சிபார்சு செய்தனர். முடிவு அப்படி இருந்தாலும், இந்த மாகாணத்தில் பள்ளிக்கூட, கல்லூரி கட்டணச்செலவு சலுகை மட்டுந்தான் அவர்களுக்கு வழங்கப்படுகிறது. ஆனால் கலைக்கல்லூரி, தொழிற் கல்லூரி இவைகளில் நுழைவுக்கு அனுமதி கிடைக்க எந்தவித சலுகையும் கொடுப்பதில்லை. சென்ற ஆண்டு சர்க்கார் சார்பில் இருந்து சொல்லப்பட்டது, கலைக் கல்லூரி, தொழிற் கல்லூரி இவைகளில் அனுமதி கொடுக்க வேண்டிய உத்திரவு பிறப்பிக்க சர்க்காரால் உடனடியாக முடியவில்லை என்று. ஏனெனில், அதை பற்றி சட்ட அபிப்பிராயம் தெரியவேண்டியிருக்கிறது, அதைத் கேட்டிருக்கிறோம் என்று சொன்னார்கள். அதைப்பற்றிய முடிவு இன்னும் தெரிந்த பாடில்லை. ஆகவே, இந்த வருஷத்திலாவது மிகவும் பின்தங்கிய வகுப்பினருக்கு கல்லூரிகளில் அனுமதிக்கும் சலுகைகள் வழங்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கிராமங்களில் ஹரிஜன மக்களுக்கு நிலம் வழங்குதல், நில அடமானம் செய்தல், மனை அடமானம் செய்தல் என்ற முறைகளில் பல சலுகைகள் காட்ட வேண்டுமென்று சர்க்கார் உத்தரவிட்டுள்ளனர். அதற்காக தனி அதிகாரிகளைப்போட்டு துரிதமாக நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று உத்தரவு போட்டிருக்கிறார்கள். ஆனால் கிராமங்களில் சென்று பார்ப்போமேயானால், துரிதமான நடவடிக்கைகள் எதுவும் மேற்கொள்வதாக தோன்றவில்லை. சில சில்லறைக் குழப்பங்களும், தகராறுகளும் ஏற்பட்டு இந்த அடமான வேலைக்கு தடங்கல் ஏற்படுகிறது. வருடம் ஒன்றுக்கு ஒவ்வொரு தாலுகாவிலும் 10, 15 இடங்களில் அடமானம் செய்திருந்தால் அது, மிகவும் அதிகமான தொண்டு செய்திருக்கிறார்கள் என்று சொல்லவேண்டும். அதற்கு தடையாக இருப்பது, அதிகாரிகள் நல்லமுறையில் வேலையை மேற்கொள்ளாது இருப்பதுதான். குடியானவர்களுக்கும் ஜாதி ஹிந்துக்களுக்கும் அங்கிருக்கிற ஹரிஜன மக்களுக்கும் தகராறு ஏற்படாத விதத்தில் மனைகளை அல்லது நிலங்களைத் தேர்தெடுப்பது கிடையாது. தகராறு ஏற்படும் வகையில்தான் மனைகளை தேர்ந்தெடுக்கிறார்கள். ஆகவே, இவைகளை எல்லாம் அதிகாரிகள் நல்லமுறையில் கவனித்து வேலைகளைத் துரிதப்படுத்தும்படி உத்திரவிட வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, ஹரிஜன காலனி கட்டுதல் என்ற முறையில், ஒவ்வொரு தாலுகாவிற்கும், ஒவ்வொரு ப்ளாக்கிற்கும் என்ற முறையில் ஒன்றல்லது இரண்டு காலனிகள் வழங்கப்படுகிறது. அதாவது, 20 வீடுகள் இலவசமாக கட்டிக் கொடுக்கப்படுகிறது. அதற்காக, ஒரு வீட்டிற்கு 550 ரூபாய் இனாமாகவும், 200 ரூபாய் வீடு கட்டிக் கொள்பவர்

போட்டுக்கொள்ளவேண்டும் என்று இருக்கிறது. ஆக, 750 ரூபாயில் வீடு கட்டி முடிக்கவேண்டுமென்று வலியுறுத்தப்படுகிறது ; 750 ரூபாய்க்கு, வீடு கட்டி முடிக்கவேண்டுமென்று வருகிற மார்ச் திங்களுக்கு முன் ஐந்தாறு மாதங்களுக்குள்தான் உத்தரவு பிறப்பிக்கப்படுகிறது. மார்ச்சுக்குள் வீடு கட்டி முடிக்க வேண்டுமென்றால், உத்தரவு பிறப்பிப்பது செப்டம்பர் அல்லது அக்டோபர் மாதத்திலாகும். உத்தரவு வந்தபிறகு, வீடு கட்டும் ஆளை கண்டுபிடிப்பது, அதற்கு வேண்டிய எஸ்டிமேட் தயாரிப்பது ஜனவரி அல்லது பெப்ரவரி மாதம் வரை ஆகிவிடுகிறது. இடைக்காலத்தில் உள்ள ஒன்றிரண்டு மாதங்களில் 15,000 ரூபாயில் 20 வீடுகள் கட்டி முடிக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, வீடுகள் சரியான முறையில் கட்டப்படுவதில்லை. கோயமுத்தூர், மதுரை ஜில்லாக்களில் சென்று பார்த்தபோது அங்கு கட்டப்பட்ட வீடுகள் எல்லாம் தாமாக இடிந்து விழும் நிலையில் இருந்தது. பல இடிந்தும் விழுந்துவிட்டன. ஆகவே, சர்க்கார் நல்ல எண்ணத்தோடு செலவு செய்யும் பணம், அது எவரைச் சென்று அடைகிறதோ அவருக்கு பயன் படுவதாக இது இருக்கவேண்டும். ஆகவே, இடையில் நல்ல காலம் கொடுத்து இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே சாங்க்ஷன் செய்து சாவதானமாக வீடுகள் கட்ட குறைந்தது மூன்று மாத காலமாவது இருக்க வேண்டுமென்ற முறையில் வீடு கட்டிக்கொடுத்தால்தான் அவை நீடிக்கும் என்று சொல்லிக்கொண்டு இந்த ஹரிஜன இலாகா மான்யக் கோரிக்கையை நான் ஆதரிக்கிறேன்.

Sri SAMI SAHAJANANDA : கனம் தலைவர் அவர்களே, இந்த ஹரிஜன மான்யமானது மிக முக்கியமானது. வருஷந்தோறும் சர்க்கார் ஒதுக்கி வந்த பணம் குறைவாக இருந்தது. சென்ற ஆண்டில் ஏறக்குறைய இரண்டு கோடி ரூபாய் ஒதுக்கியிருந்தார்கள். அதற்கு முன் ஆண்டு ஒரு கோடி ஐந்து லட்சந்தான் செலவிடப்பட்டது. ஆனால் கனம் கக்கன்ஜி அவர்கள் வந்த பிறகு, அது இரண்டு கோடியானது. இந்த வருடம், இரண்டு கோடி 40 லட்சம் வரையில் செலவிட சர்க்கார் முன் வந்திருக்கிறார்கள் என்றால் அது சர்க்காரின் விரிந்த மனப்பான்மையைத் தான் எடுத்துக்காட்டுகிறது. மேலும் இந்த இலாகாவை யார் வைத்துக் கொண்டிருக்கிறார்களோ அவர் விரிந்த மனப்பான்மையுடையவராக இருக்கவேண்டும். கக்கன்ஜி அவர்கள் டெல்லிக்குச் சென்றபோதும் கூட, வீடு கட்ட ஹரிஜனங்களுக்கு அதிகம் பணம் கொடுக்க வேண்டுமென்று சொன்னார்கள். இங்கும் ஒரு மகாநாட்டில் ஹரிஜன நன்மைகளைப்பற்றிப் பேசியிருக்கிறார்கள். ஆகவே, அவர் வந்தது ஏதோ அதிருஷ்டம் என்று தான் சொல்லவேண்டும். இவ்வளவு பணம் செலவு செய்யும்போது ஹரிஜனப் பிள்ளைகளுக்கு அதிகமாக படிக்கவேண்டும். அவர்களுக்கு அதிகம் உயர்நிலைப் பள்ளிகள் ஏற்படுத்தவேண்டும். ஆகவே, சர்க்கார் அந்த வகையில் அதிகம் ஹாஸ்டல்ஸ் ஏற்படுத்தவேண்டும். இப்பொழுது ஹாஸ்டல்களை சர்க்கார் நடத்துகிறார்கள். அது நல்லதுதான். ஆனால் ப்ரைவேட் மானேஜ்மென்ட் நடத்தும் ஹாஸ்டல்களைப் போல் சர்க்கார் நடத்தும் ஹாஸ்டல்கள் ஒழுங்காக நடப்பதில்லை. விழுப்புரத்தில் ஒரு ஹாஸ்டல் இருக்கிறது பத்து வருஷங்களாக. அது இன்னும் முன்னுக்கு வரவில்லை. பிரைவேட் மானேஜ்மென்ட் நடத்துவதாக இருக்குமானால் அவர்கள், அது எப்படியாவது அபிவிருத்திக்கு வரவேண்டுமென்று கஷ்டப்பட்டு வேலை செய்கிறார்கள். ஆகவே அந்த வகையில் ப்ரைவேட் மானேஜ்மெண்டுக்கு இடம் கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது ஒரு ஹரிஜன டைரக்டரைப் போட்டிருக்கிறார்கள். முன் இருந்தவரும் ஹரிஜன டைரக்டர் போலவே நன்கு வேலை செய்து வந்தார். இருந்தாலும் ஹரிஜன உத்தியோகஸ்தர் ஒருவர் அந்த இலாகாவிற்கு தலைவராக வந்திருக்கிறார் என்ற ஒரு திருப்தி. அடுத்தபடியாக, சிதம்பரத்தில் மனைக்கட்டுகள் கொடுக்கும் விஷயம் பற்றி, இரண்டு தாசில்தார்கள் போட்டு அவர்கள் வேலை செய்து வருகிறார்கள். அங்கு, வீடு கட்ட யோக்கியதை உள்ள நிலம் இருந்தாலும், ஒன்று, ஒன்றரை கஜம் பள்ளம் உள்ள நிலத்தைத்தான் மிராசுதார்கள் வார்த்தையைக் கேட்டு எடுக்கிறார்கள். சுடுகாட்டில் உள்ள நிலங்களை எடுக்கிறார்கள். மந்திரியவர்கள் வந்தபோது, நேரில் பார்க்கவேண்டுமென்று கேட்டிருந்தேன். ஆகவே, சர்க்கார் செலவு செய்யும் பணம் ஹரிஜன மக்களுக்கு திருப்தி அளிக்கும் வகையில் செலவு செய்யப்படவேண்டும்.

24th March 1958] [Sri Sami Sahajananda]

மேலும் ஹரிஜன முன்னேற்றத்திற்காக திராவிட முன்னேற்ற கழகத்தார் நாங்கள் பாடுபட்டோம் என்று சொல்லுகிறார்கள். அவர்களுக்கும் நான் நன்றி செலுத்திக்கொள்கிறேன். ஆனால் இப்போதும் எங்கள் பக்கத்தில் செட்டியார் தோப்பு என்கிற கிராமத்தில் ஹரிஜன மக்கள் செருப்பு போட்டுக்கொண்டு போனார்கள் என்ற காரணத்திற்காக அவர்களை அடித்திருக்கிறார்கள். இதற்காக கேஸும் நடந்து வருகிறது. அங்கே போலீஸ் ஸ்டேஷன் இருக்கிறது. போலீஸ் ஸ்டேஷனில் வைத்தே ஹரிஜன மக்களை அடிக்கிறார்கள். இதைப்பற்றி அங்குள்ள ஜில்லா சூப்பரிண்டெண்டன்ட், கலெக்டர் இவர்களிடம் சொல்லிருக்கிறோம். ஹரிஜன மக்கள் விஷயத்தில் போலீஸார் அக்கரையோடு நடந்துகொள்ளவேண்டும். போலீஸாரில் பாதிக்குமேல் ஹரிஜனங்களாக இருந்தால்தான் ஹரிஜனங்களுக்கு போலீஸில் பாதுகாப்பு கிடைக்கும். இதையும் சர்க்கார் கவனிக்கவேண்டும். இவ்விதம் மேலும் சர்க்கார் ஹரிஜனங்களுக்கு நன்மை செய்யவேண்டும் என்று கூறிக்கொண்டு சர்க்கார் கொண்டுவந்திருக்கும் இந்த மான்யத்தை பரிபூரணமாக ஆதரித்துக்கொண்டு, சர்க்காருக்கு என் நன்றியறிதலை தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Srimathi A. S. PONNAMMAL**: மதிப்பிற்குரிய கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன முன்னேற்றத்திற்காக கொண்டுவரப்பட்டிருக்கிற இந்த மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சென்ற வருஷத்தில் நான் ஹரிஜன முன்னேற்றத்தில் பேசும்பொழுது கிராமப் பகுதிகளில் படிக்கின்ற ஏழை குழந்தைகளுக்கும் ஹரிஜன குழந்தைகளுக்கும் மத்தியான சாப்பாடு போன்ற வசதிகள் கொடுக்கப்படுவது போன்று எல்லாக் குழந்தைகளுக்கும் துணிகள் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டேன். இப்போது நிதி அமைச்சர் அவர்கள் மதுரையில் பேசும்போது எல்லாக் குழந்தைகளுக்கும் யூனிபாரம் கொடுக்கப்போகிறோம் என்று சொன்னதை நான் பேப்பரில் பார்த்தேன். அதைப்பார்த்து நான் மகிழ்ச்சி அடைந்தேன். அதற்காக கனம் நிதி அமைச்சர் அவர்களுக்கு நன்றியும் செலுத்த கடமைப்பட்டிருக்கிறேன். அடுத்து கல்வித்துறையை எடுத்துக்கொண்டால் பல ஏழை குழந்தைகள் கல்வி பெற்று பல்லாயிரக் கணக்கில் ரூபாய்களை பெற்று மாணவர்கள் ஆங்காங்கு பல துறைகளில் முன்னேறியிருக்கிறார்கள் என்பதை யாரும் மறைக்கவோ மறுக்கவோ முடியாது. இன்னும் ஒரு சில கிராமப் பகுதிகளில் பள்ளிக்கூடங்கள் இல்லாததினால் அங்குள்ள மக்கள் படிக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். இந்த முறையில் ஒரு சில இடங்களில் இன்னும் சரியான முறையில் பள்ளிக்கூடங்கள் அமையவில்லை. அதற்கும், ஆங்காங்கு பல பள்ளிக்கூடங்களை அமைப்பதற்கு அமைச்சர் அவர்கள் ஆவன செய்வார்கள் என்று நினைக்கிறேன். அடுத்தபடியாக பொருளாதாரத் துறையை எடுத்துக்கொண்டால் ஹரிஜன மக்கள், நகரப் பகுதிகளில்தான் ஓரளவுக்கு தங்கள் குடும்பத்தை காப்பாற்றக்கூடிய நிலையில் இருந்துகொண்டு வருகிறார்கள். ஆனால் கிராமப் பகுதிகளில் பகல் பூரா பாடுபட்டும், சரியானபடி உண்ண உணவும், உடுக்க உடையும் இல்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். இதைப்பார்த்து கிராமப் பகுதிகளில் பிறந்த என்போன்றவர்கள் பரிதாபப்படவேண்டிய நிலைமையில் இருக்கின்றது. அவர்கள் ஆறு மாதம்தான் வேலை செய்கிறார்கள். பாக்கி ஆறு மாதம் அவர்களுக்கு வேலை கிடைப்பதில்லை. அந்த சமயத்தில் அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அந்த சமயத்தில் புல் அறுத்து விற்பனை செய்யலாம் என்றால், அதற்கும் இடையூறு ஏற்படுகிறது. புல் அறுப்பதற்கு அங்குள்ள தோட்ட முதலாளிகள் அனுமதிக்க மறுத்து விடுகிறார்கள். இவ்வித கஷ்டங்கள் ஏற்படுகிறது. ஆகவே பொருளாதாரத் துறையில் அவர்களை முன்னேற்றுவதற்கு ஆங்காங்கு இருக்கக்கூடிய ஏழை மக்களுக்கும் பிற்பட்ட வகுப்பிலுள்ள மக்களுக்கும், ஆங்காங்கு குடிசைத் தொழில்களை ஏற்படுத்தி அவர்களது வருவாயை அதிகப்படுத்த ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு உடனடியாக வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு பொருளாதாரத் துறையில் நான் சென்ற ஆண்டில் குறிப்பிட்டது மாதிரி, மில்களில் எல்லாம் ஹரிஜன மக்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். இதற்கு இதுவரையிலும் எந்தவிதமான

[Srimathi A. S. Ponnammal] [24th March 1958

நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. அதைப்பார்த்து நான் வருத்தமடைகிறேன். ஒவ்வொரு துறையிலும் இத்தனை சத விகிதம் ஹரிஜனங்களுக்கு கொடுக்கவேண்டும் என்று ஒரு உத்தரவு பிறப்பிக்க வேண்டும். மில்களுக்கு எல்லாம் சர்க்காராகிய நாம்தான் லைஸன்ஸ் கொடுக்கின்றோம். இதில் நூற்றுக்கு 25 சத வீதமாவது ஹரிஜனங்களைத்தான் வைத்துக்கொள்ளவேண்டும் என்று ஒரு நிபந்தனையை உண்டு பண்ணினால் அதில் வேலை பார்க்கிறவர்களுடைய குடும்பம் நல்லமுறையில் விருத்தி அடைய முடியும். இதற்கு இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. இனிமேலாவது உடனடியாக அதற்கு தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்த படியாக மத்திய அரசாங்கத்திலிருந்து இந்த ஆண்டில் லட்சத்தி இருபத்தி ஒன்பதாயிரம் வீடுகளுக்கு மான்யம் கொடுக்கப்படப்போவதாக தெரிகிறது. அதில் சென்னை மாகாணத்திற்கு எத்தனை வீடுகள் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்று தெரியவில்லை. அதை அமைச்சர் அவர்கள் தங்களுடைய பதிலில் தெரிவிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிகமான வீடுகள் கட்டிக்கொடுத்தால்தான் ஹரிஜன மக்கள் நல்ல முறையில் வாழ்க்கை நடத்த முடியும். அவ்விதம் வீடுகளுக்கு வசதி இருந்தால்தான் அவர்கள் நாகரீகத்தோடு ஜாதி ஹிந்துக்களோடு நல்ல முறையில் வாழ்க்கை நடத்த முடியும். இப்போது பத்து பேர், பதினைந்து பேர் என்று ஒவ்வொரு குச்சு வீட்டிலும் தங்கியிருக்கிறார்கள். இப்போது ஒவ்வொரு தாலுகாவுக்கும் 40 வீடுகள் கட்டிக்கொடுப்பது என்பது போதாது. உடனடியாக எல்லோருக்கும் வீடு கட்டிக்கொடுத்துவிட முடியாது என்பது என் போன்றவர்களுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் வீடு கட்டிக் கொள்வதற்காக தவணை முறையில் கடனாக கொடுக்க ஏற்பாடு செய்தால் எல்லோரும் சுத்தமாக நல்ல வீடுகளில் வாழ்வதற்கு வாய்ப்பாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால், ஒரு சில இடங்களில் அதாவது தண்ணீர் உள்ள இடங்களில், மிக சிறிய சிறிய வீடுகள் கட்டிக்கொடுக்கிறார்கள். இந்த சிறிய வீடுகளிலுள்ள கூரைகளில் சில சமயங்களில் தீ பிடித்து விடுகிறது. பின்னால் இந்த வீடுகளுக்கெல்லாம் கலக்டரிடமிருந்து 30 ரூபாய் வாங்கி கொடுக்கவேண்டியிருக்கிறது. இவ்விதம் குச்சு வீடுகள் போட்டுக்கொடுப்பதினால் மேலும் பணம் கொடுக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறது. ஆகவே இதற்கு கூட்டுறவு முறையில் கடன் கொடுத்து அவர்களுக்கு வீடு கட்டுவதற்கு பணம் கொடுக்க சர்க்கார் முன்வர வேண்டும். சில இடங்களில் வீடு கட்டுவதற்குகூட மனைகள் இல்லாமல் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். நாச்சிகுளம், மேட்டு நீரேத்தான், தாதம்பட்டி, சோளவந்தான் பக்கத்தில் கோட்டப்பட்டி மேடு இந்த இடங்களில் எல்லாம் வீடு கட்டுவதற்கு மனைகள் இல்லாமல் இருக்கிறது. இதற்காக பக்கத்திலுள்ள ஒரு இடத்தை பிரித்து கொடுப்பதற்காக, நான், வெல்பெயர் ஆபீஸர், கலெக்டர் எல்லோரும் போய் பார்த்தோம். பின்னால் அதை சர்வே செய்ய போகும்போது அந்த இடத்தில் ஒரு இறந்த குழந்தையை புதைத்துவிட்டு இது சுடுகாடு என்று கூறி தடுத்து வருகிறார்கள். இவ்விதம் அங்கு ஜாரி செய்ய முடியாமல் இருக்கிறது. இந்த முறையை தடுப்பதற்கு ஆவன செய்யவேண்டும் என்று ஏழை ஹரிஜனங்களின் சார்பாக பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக கிணறு வெட்டிக்கொடுக்கும் காரியத்தில் ஒவ்வொரு கிணறுக்கும் 1,500 ரூபாய் கொடுத்து கிணறு வெட்டிக் கொடுக்கப்படுகிறது. இதற்கு இரண்டு ஏக்கர் நிலம் உள்ளவர்களிடம்தான் கொடுக்கப்பட்டு வருகிறது. இவ்விதம் தனிப்பட்ட நபர்களிடம் கொடுப்பதை மாற்றி தரிசு நிலங்கள் எங்கு கிடக்கின்றதோ அந்த இடங்களில் வெட்டிக் கொடுக்கவேண்டும். எங்கள் பக்கத்தில் அதாவது வத்தலக்குண்டு பகுதியில் 250 ஏக்கர் தரிசு நிலங்களாக கிடக்கின்றன. இதை அங்குள்ள ஹரிஜன மக்களுக்கு கூட்டுறவு முறையில் விவசாயம் செய்வதற்கு கொடுத்தால் மிகவும் அனுகூலமாக இருக்கும், அதோடு இவர்களுக்கு பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதற்கும் வசதியாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொண்டு, இதற்கு சர்க்கார் ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்ததாக, ஹாஸ்டலில் படிக்கின்ற மாணவர்கள் இப்போது எந்த விதமான வேலையும் செய்யக்கூடாது தட்டு' கழுவக்கூடாது, என்றெல்லாம்

24th March 1958] [Srimathi A. S. Ponnammal]

ஒரு சர்குலர் வந்திருந்தது. அது நல்லதல்ல என்றுதான் நான் நினைக்கிறேன். இன்றைக்கு நமது சர்க்கார் உடல் உழைப்புக்கும், சுய தேவைக்கும் முக்கியத்துவம் கொடுத்துவருகிறது. காந்திஅடிகள்கூட ஒவ்வொருவரும் தனக்கு வேண்டிய தேவையை பூர்த்தி செய்துகொள்ள வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். ஆகவே இம்மாதிரி வேலைகள் செய்யக்கூடாது என்று ஹாஸ்டலில் சர்குலர் வருமானால், அதனால் மாணவிகள் எப்படியும் நல்ல முறையில் கற்றுக்கொள்வார்கள், ஆனால் மாணவர்கள் எட்டாம் வகுப்பு வரை படித்த உடனேயே வேலைக்கு லாயக் கில்லாதவர்களாகி விடுகிறார்கள். மேலும் வேலை செய்வதை கேவலமாக கருதி இருந்து விடுவார்கள். ஆகவே கட்டாயம் வேலை செய்யவேண்டு மென்று ஒரு உத்தரவை பிறப்பிக்கவேண்டுமென்று ஹரிஜன குழந்தை களின் சார்பாக சர்க்காரை கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக இன்னும் பல இடங்களில் மாடுகள் வாங்கி கொடுக்கப்பட்டு வருகிறது. இதனால் விவசாயிகளுக்கு அனுகூலமும் ஏற்படுகிறது. இந்த மாடு வாங்கி கொடுக்கும் விஷயத்தில், மாடு வாங்கி கொடுப்பது, அங்குள்ள தாசில்தார், எம்.எல்.ஏ. இவர்கள் எல்லோரும் சேர்ந்துதான் வாங்கிக்கொடுக்கிறார்கள். ஆனால் இதைப்பற்றி சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். மாடு வாங்கி கொடுக் கின்ற முறை மோசமாக நடந்து வருகிறது, நல்ல முறையில் நடைபெற வில்லை என்று கூறினார்கள். "இடுவார் பிச்சையை கெடுவார் கெடுப்பார்" என்பதுபோல, கனம் அங்கத்தினர் சொல்லியதைப் பார்த்து நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஹரிஜன மக்களுக்காக இன்னும் என்னென்ன நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும் என்று கூறுவார்களேயானால், என்னைப் போன்ற ஹரிஜன சமுதாயத்தில் உள்ளவர்களுக்கு ஆறுதலாக இருக்கு மென்று தெரிவித்துக்கொள்கிறேன். 11-10 a.m.

இதுவரையிலும் டைரக்டராக இருந்து இப்பொழுது மாற்றப்பட்டிருக்கும் ஸ்ரீ முத்திருளாண்டி அவர்கள் ஹரிஜன மக்களுக்கும் பிற்பட்ட மக்க ளுக்கும் நல்ல முறையில் சேவை செய்து வந்ததைப் பாராட்டி, ஹரிஜன மக்களுடைய சார்பிலே அவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

Sri P. S. SANTHANAM: தலைவர் அவர்களே, அவையின் கண் கொண்டு வந்திருக்கும் வெட்டுப் பிரேரணையை ஒட்டி சில கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த தமிழகத்திலே ஒதுக்கப்பட்ட சமூகத் தினர், அதாவது ஆதித்திராவிடர்கள் என்று சொல்லக்கூடிய ஹரிஜன வகுப்பினர், இந்த நாட்டில் குடிக்க கஞ்சிக்கும், கட்ட ஆடைக்கும், குந்த நிழலுக்கும் தவித்துக்கொண்டிருக்கும் இந்த நேரத்திலே, இந்த ஆளும் சர்க்கார் அவர்களுக்கு நல்லதொரு திட்டங்களைத் தீட்டி நன்மை செய் வதாகச் சொல்லப்படுகிறது. அதை ஒரு விதத்திலே வரவேற்கிறேன். மற்றொரு விதத்திலே ஏன் இந்த சர்க்கார் சரியான முறையில் வேலை செய்யவில்லை என்று கேட்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

ஹரிஜனங்களுக்காக இந்த ஆண்டு ஏறத்தாழ $2\frac{1}{4}$ கோடி ரூபாய்க்கு மேல் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அப்படி நிதி ஒதுக்கப்படுகையிலே, பின் தங்கிய வகுப்பினருக்கும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும், ஹரிஜன வகுப்பினருக்கும் என்று பணம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி தோழர் விநாயகம் அவர்கள் விளக்கம் கூறினார்கள். "பூவை ஒட்டி நாரும் மணக்கும்" என்று சொல்லுவது போல், இந்த பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்து, ஹரிஜனங்களுக்குத் தனியாக ஒதுக்க வேண்டும், பின்தங்கிய வகுப்பினருக்கு தனியாக ஒதுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஹரிஜனங்களுக்கென்று ஒரு தனி டைரக்டரும், பின்தங்கிய வகுப்பினருக்கு என்று ஒரு தனி டைரக்டரும் போட்டால் அந்த நிர்வாகம் நல்ல முறையில் இருக்கும் என்று கூறியதை நான் வரவேற்கிறேன். உண்மையிலேயே அதை மனமாற வாழ்த்துகிறேன். அந்த நிலைமை ஏற்படுமேயானால், ஒதுக்கப்பட்ட தொகையை பாழாக்கு வதற்கு வழி இருக்காது என்பதுதான் என்னுடைய கருத்து.

அடுத்தபடியாக, வட ஆற்காடு ஜில்லாவிலே ஹரிஜனப் பிள்ளைகளுக்காக ஒதுக்கப்பட்ட நான்கு லட்சம் ரூபாயில் ஒரு லட்சம் தான் செலவு செய்யப் பட்டிருக்கிறது. மூன்று லட்சம் ரூபாயை மீத்து வைத்து மீண்டும்

[Sri P. S. Santhanam] [24th March 1958

சர்க்காருக்கே திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறது. அந்தோ பரிதாபம். என் ? இந்த வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள அத்தனை ஹரிஜன மக்களும் நல்ல நிலைமையில் இருக்கிறார்களா ? உணவுப் பஞ்சம் இல்லாத நிலையில் இருக்கிறார்களா ? மழை பெய்தால் என்ன, இடி இடித்தால் என்ன, ஹரிஜன மக்கள் எப்படிப் போனால் என்ன என்று நிர்வாகத்தில் உள்ளவர்கள் நினைப்பதனால்தான், அந்த மூன்று இலட்சம் ரூபாயும் செலவழிக்கப்படாமல், திருப்பி அனுப்பப்பட்டிருக்கிறது. ஆகையால் தான் தோழர் கே. விநாயகம் அவர்கள் சொன்னது போல், அந்தந்த நிர்வாகத்திற்குத் தகுந்தபடி ஒரு தனி அமைப்பாளரை ஏற்படுத்துவார்களேயானால், உண்மையிலேயே நிர்வாகத்தில் ஊழல் இருக்காது என்பது என்னுடைய கருத்து. இந்த சர்க்கார் ஹரிஜன மக்கள் முன்னேறவேண்டும் என்ற நோக்கத்தைக் கொண்டவர்கள். அதை உண்மையிலேயே வரவேற்கிறேன். ஹரிஜனங்கள் இந்த நிலைமையில் இருப்பதன் காரணம் என்ன, ஹரிஜனங்களுக்கு என் இந்த மாதிரி சலுகைகள் கொடுக்கப்படவேண்டும், பின் தங்கிய வகுப்பினருக்கு என் கொடுக்கப்படவில்லை என்று ஏக்கமும், துக்கமும், பொறாமையும் கொண்டிருக்கிறார்கள் சிலர். இந்த நாட்டிலே வெள்ளையர்கள் இருந்த காலத்திலே கூட, ஹரிஜனங்கள் உண்மையாகவே நாட்டிற்குச் சேவை செய்யக்கூடியவர்கள், இந்த நாட்டிலே உள்ளவர்களில் நல்ல உழைப்பாளிகள், இந்த நாட்டிலே பரிசுத்தமானவர்கள், நாயைப் போல் நன்றியுள்ளவர்கள் என்று தெரிந்துதான் அவர்கள் படிப்பதற்காக சில சலுகைகளைக் கொடுத்தார்கள். ஆனால் ஆளும் கட்சியினர் சொல்லுகிறார்கள் "நாங்கள் தான் இந்த நிலைமையை உண்டாக்கினோம்" என்று. இன்று ஆளும் கட்சியில் ஏறத்தாழ 40 ஹரிஜன அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். இவர்கள் அத்தனை பேரும் காங்கிரஸின் பெயரால வந்தார்களா, அல்லது தனித் தொகுதி ஏற்பட்டதன் காரணமாக வந்தார்களா என்பதைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். "ஒன்றே குலம், ஒருவனே தேவன், எல்லோரும் இந்நாட்டு மக்கள், எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற அடிப்படையிலே, ஹரிஜன மக்களுக்குத் தனித் தொகுதி இல்லாமலிருந்து, பொதுத் தொகுதியிலே வந்திருக்க முடியுமா என்று கேட்கிறேன். இந்த தனித் தொகுதி யாருடைய முயற்சியால் வந்தது என்பதை நாம் பார்க்கவேண்டும். டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ஹரிஜனங்களுடைய நிலைமையை மனதில் வைத்துக்கொண்டு, வெள்ளையர் ஏகாதிபத்தியத்தோடு போராடி, அந்தக் காலத்திலேயே அவர்களுக்காக தனித் தொகுதி ஒதுக்கப்படவேண்டும் என்ற பிரச்னையை கொண்டு வந்தார். அந்தக் காலத்தில் காந்தி அவர்கள் "ஹரிஜனங்களுக்கு தனித் தொகுதி கூடாது, எல்லோரும் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும்" என்று பாடுபட்டார்கள். அதே பிரகாரம் டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ஊதுக்கொண்டிருப்பார்களேயானால், இந்த மன்றத்திலே ஏறத்தாழ 40 ஆதித்திராவிடர்கள் உட்கார முடியுமா என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்று எத்தனையோ தொல்லைகளுக்கும் இடையூறுகளுக்கும் இடையில்தான் அவர்கள் இந்த நிலைமைக்கு வந்திருக்கிறார்கள். வோட்டுச் சாவடிக்குப் போகிற நேரத்தில் கூட "ஏ கருப்பா, ஏ முத்து, வோட்டுச் சாவடிக்கு என் போறீங்க, வேலையைப் போய்ப் பாருங்கடா" என்ற கூக்குரல் இன்றும் கிளம்புகிறது. தனித் தொகுதி இல்லாமல் இருந்தால் வோட்டுச் சாவடியை எட்டிப்பார்க்கக் கூட முடியாது. தோழர் விநயகம் அவர்கள் ஒரு பேச்சிலே "காங்கிரஸ் சர்க்கார்தான் ஹரிஜனங்களுக்கு நன்மை செய்கிறது, ஹரிஜனங்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் பெயரால் தான் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள், அந்த ஸ்தாபனம் இல்லையென்றால் அவர்கள் கேவலமான நிலையில் தான் இருந்திருப்பார்கள்" என்று சொல்லுகிறார். சென்ற ஆண்டிலே ஒரு மேடையில் அவர் பேசும்பொழுது, என்ன சொன்னார் என்பது இந்த அவையிலுள்ளவர்களுக்குத் தெரியும், என் போன்றவர்களுக்கும் தெரியும். சென்ற ஆண்டுக்கு முன்னதாக அநேக இடங்களில் காங்கிரஸ்காரர்கள் செய்யக்கூடிய அயோக்கியத்தனத்தையும், அட்டூழியத்தையும் பற்றிச் சொல்லும்போது எல்லாம், "காங்கிரஸ் ஹரிஜனங்களுக்கு நன்மை செய்யவில்லை, தமிழகத்தின் தலை தாங்குவதற்குச் செல்லுகிறேன், எல்லோரும் வாருங்கள், வாருங்கள்" என்று அழைத்த தோழர் விநயகம், "ஹரிஜனங்களுக்கு

24th March 1958] [Sri P. S. Santhanam]

இந்த சர்க்கார் நன்மை செய்கிறது, சர்க்காரை நம்பித்தான் அவர்கள் வாழ்கிருர்கள் ” என்று இப்பொழுது சொல்லுகிருர். அன்று அப்படிப் பேசியவர் . . .

**Sri K. VINAYAKAM : On a point of order, the speech that is being delivered by the hon. Member . . .**

**Sri P. S. SANTHANAM :** தமிழில் பேசினுல் தான் என் போன்றவர் களுக்குப் புரியும்.

**Sri K. VINAYAKAM :** தமிழிலே வேண்டுமானுலும் பேசுகிறேன், ஹிந்தியில் வேண்டுமானுலும் பேசுகிறேன். இப்பொழுது நண்பர் பேசுவதற் கும் இந்த மானியத்திற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது என்று கேட்கிறேன். நான் ஏதோ மேடையில் பேசினேன் என்பதற்கு அத்தாட்சி இருக்கிறதா ? குறிப்பு எழுதி வைத்திருக்கிறீர்களா ? இப்படி என்னை தற்காப்பு செய்து கொள்வதற்கு தருணம் இல்லாத பொழுது, இதை முன் கூட்டியே சொல்லி இருந்தால் சரியான “ சாட்டை ” கொடுத்திருப்பேன்.

**DEPUTY SPEAKER :** தயவுசெய்து மானியத்தைப் பற்றிப் பேசுங்கள். வெளியிலே நடந்த விஷயங்களை இங்கே பேசுவது நல்லதல்ல.

**Sri M. C. MUTHUKUMARASWAMY :** கனம் அங்கத்தினர் ஸ்ரீ விநாயகம் பேசும்பொழுது, முன் கூட்டியே பேசி இருந்தால் “ சாட்டை ” கொடுத்திருப்பேன் என்று சொல்லுவது சாட்டையால் அடிப் பதற்கு ஒப்பாகும் என்று கருதுகிறேன். அப்படிப் பேசுவது சரியல்ல என்று கண்டிக்கிறேன்.

**Sri K. VINAYAKAM : “ Proper reply ”** என்பதற்கு தமிழ் அகராதியில் “ சாட்டை ” என்று தான் போடப்பட்டிருக்கிறது.

**DEPUTY SPEAKER :** கனம் அங்கத்தினருக்கு இன்னும் ஒரு நிமிஷம் தான் இருக்கிறது.

**Sri P. S. SANTHANAM :** நான் பேசிக் கொண்டிருக்கும்போது மடக்கி, மடக்கி ஸ்ரீ விநாயகம் கேட்டுவிட்டதனுல் என்னுடைய நேரம் குறைந்துவிட்டது. சீக்கிரம் முடித்துவிடுகிறேன்.

ஹரிஜன மக்களுக்கு இருக்கும் குறைகளை எடுத்துச் சொல்வதற்குத் தான் நாம் இந்த சட்ட மன்றத்திற்கு வந்திருக்கிறோம். நிர்வாகத்தில் இருக்கும் குறைகளை எடுத்துச் சொல்வதற்குத்தான் நாம் இங்கு வந்தி ருக்கிறோம். ஒருவரை ஒருவர் பாகுபடுத்தி பேசுவதற்காக அல்ல.

கிராமங்களில் ஆதித்திராவிட மக்கள் மிகவும் பின் தங்கியிருக்கிருர்கள். கல்வித்துறையிலும், பொருளாதாரத் துறையிலும் அவர்கள் நிலைமை சீர்கேடான நிலையில் இருக்கிறது. பொருளாதாரத் துறையில் ஆதித் திராவிட மக்கள் முன்னேற வேண்டும் என்று சொன்னுல் . . .

**DEPUTY SPEAKER : The hon. Member's time is up.**

**Sri K. B. S. MANI :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஹரிஜன மானியத்தை ஆதரித்து என்னுடைய உரையை துவங்குகிறேன். 11-22 a.m.

இந்த சர்க்கார் அரிஜன மக்களுக்கு பல நூற்றுக் கணக்கான நன்மை களை செய்திருக்கிறது என்று சொல்லிக் கொள்வதில், அச்சமோ அல்லது வெட்கமோ இருக்கமுடியாது. உலகம் தோன்றிய நாள் முதல் என்று கூறுவது சரியாக இல்லாவிட்டாலும், மனிதன் அறிவு படைத்த நாட் களிலிருந்து, ஆசை வளர்ந்த நாட்களிலிருந்து பல நன்மைகள் செய்யப் பட்டிருக்கின்றன என்று சொல்லலாம். முன் காலத்தில் பொதுவாக “ ஆண்டான், அடிமை ” என்ற எண்ணம் இருந்தது. உலக வரலாற்றி லேயே, முன்னணிக்கு வந்து கொண்டிருக்கும் இந்தியா தீண்டாமையின்

[Sri K. B. S. Mani] [24th March 1958

காரணமாக பின்னணிக்குப் போய் கொண்டிருக்கிறது. அரசாங்கம் பல துறைகளில் சட்ட பூர்வமாகவும், அதிகார பூர்வமாகவும் பல காரியங்களை செய்திருப்பதும், அவைகளை நடைமுறையில் கொண்டு வருவதற்கு பல அதிகாரிகளை நியமித்து அதை நல்ல முறையில் நிர்வகிக்க பல கோடிக் கணக்கான ரூபாய் ஒதுக்கியிருப்பதும் வரவேற்கத்தக்கது. அப்படியிருந்தும் சில குறைபாடுகள் இருக்கின்றன. சாதாரணமாக ஒரு சிறு குடும்பத்தை நடத்துவதிலும், பல குறைபாடுகள் இருப்பதைக் காண்கிறோம். உற்றார் உறவினர் சொல்வதை கேட்டு அவன் குறைகளை திருத்திக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறான். அரசாங்கத்திலும், எந்த நாட்டில் எந்த கட்சி ஆண்டாலும், நடைமுறையில் சில குறைபாடுகள் இருக்கும். தனி மனிதன் தன்குறைகளை திருத்திக் கொள்வது போல், அரசாங்கமும் குறைகளை திருத்திக் கொள்ளவேண்டும் என்பது ஒரு பொது சித்தாந்தம். அரசாங்கம் இதுவரை செய்துள்ள நன்மைகளுக்கு எங்களுடைய மக்களின் சார்பாக, தாழ்த்தப்பட்ட மக்களின் சார்பாக, வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். செய்திருக்கும் நன்மைகளில் உள்ள குறைபாடுகளை திருத்தினால் இன்னும் நன்றாக இருக்கும் என்று சொல்லிக் கொள்கிறேன். கடந்த வருஷம் ஒரு பெரிய மகாநாடு கூட்டி அரசாங்கத்திற்கும், மந்திரி அவர்களுக்கும் இதைப் பற்றி சொன்னோம். நான் நேரிடையாகவும் அவர்களுக்கு இதைப் பற்றி கூறியிருக்கிறேன். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு குடியிருப்பு வீடு கட்டிக் கொடுப்பது நல்லது தான். ஆனால் இதனால் அதிகமாக நன்மை ஒன்றும் பயக்க முடியாது என்பது என்னுடைய கருத்து. தனிப்பட்ட மனிதனுக்கு குடியிருக்க இடம் இல்லை என்று சொன்னால், அவன் சுதந்திரம் அடைந்த மனிதன் என்று சொல்லிக் கொள்ள முடியாது. ஆகையால் அவனுக்கு குடியிருக்க வேண்டி வீடு இருப்பது மிகவும் அவசியம். ஆகவே இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு, தனிப்பட்ட ஒருவனுக்கு குடியிருப்பு வசதிசெய்து கொடுப்பதற்கு அரசாங்கம், தைரியமாக எந்த விதமான எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், ஒரு சட்டம் இயற்ற வேண்டும். இது தான் நமது முதல் பிரச்னை. பத்தாயிரம் வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும் என்று வைத்துக் கொண்டால் அதை கட்டிக் கொடுப்பதற்கு எவ்வளவு வருஷங்கள் ஆகும் என்பதை நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். ஆகையால் யார் எந்த இடத்தில் சொந்த பணத்தைக் கொண்டு வீடுகட்டிக் கொண்டிருக்கிறார்களோ அந்த இடத்தை அப்படியே ஆர்ஜிதம் செய்து அவர்களுக்கு கொடுத்துவிட ஏற்பாடு செய்ய வேண்டும். ஒருவனுக்கு குடியிருப்பதற்கு சொந்தமாக ஐந்து சென்ட் நிலம் இல்லை என்று சொன்னால் அவனை சுதந்திர மனிதன் என்று சொல்ல முடியாது. அவனும் சுதந்திர மனிதனாக இருக்க முடியாது. ஆகையால் சர்க்கார் நிலமாக இருந்தாலும் சரி, மிராசுதார் நிலமாக இருந்தாலும் சரி, பழைய ஜமீன் நிலமாக இருந்தாலும் சரி, அங்கு இருக்கும் அரிஜனங்களுக்கு குடியிருப்புக்கு என்று நிலங்களை சொந்தமாக்கிக் கொள்வதற்கு தகுந்த நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று நான் சொல்ல விரும்புகிறேன்.

தற்பொழுது குடியிருப்புக்கு என்று சில இடங்களில் வீடு கட்டியிருக்கிறார்கள். கடந்த பிப்ரவரி மாதம் 28-ம் தேதி நமது முதல் அமைச்சர் நாச்சியார்கோவிலுக்கு அருகில் உள்ள செம்மங்குடி கிராமத்திற்கு வந்தார்கள். அரிஜனங்கள் வீடு கட்டிக்கொள்வதற்கு நிலம் வாங்கி கொடுத்தார்கள். நன்னிலம் தாலூகாவில் இருக்கும் குவளைகிணறு என்ற கிராமத்தில் 40 வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. இந்த விஷயத்தில் சர்க்கார் திருத்திக்கொள்ள வேண்டிய அவசியம் இருக்கிறது. பட்டுக்கோட்டைக்கு கனம் அமைச்சர் அவர்கள் வந்தபோது இதைப் பற்றி நானும் எஞ்சினியர் அவர்களும் சொன்னோம். இங்கு கட்டும் வீடுகளுக்கு 2¼ அடி தான் அஸ்திவாரம் போடப்பட்டிருக்கிறது. தஞ்சை ஜில்லாவில் எல்லாம் நஞ்சை நிலங்கள் அதிகம். அவைகள் ஆற்றுப் பாய்ச்சலில் பயிராகின்றன. ஒரு மழை பெய்தால் இங்கு கட்டியிருக்கும் வீடுகள் எல்லாம் சரிந்து விடுகின்றன. ஆகையால் போடப்படும் திட்டங்களை எல்லாம் " செய்வன திருந்தச் செய் " என்பது போல் நன்றாக நடத்துவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

24th March 1958] [Sri K. B. S. Mani]

கடந்த மாதம் 14-ம் தேதி ஸ்ரீ பந்த் அவர்கள் எங்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட தொகை செலவழிக்கப்படவில்லை என்று சொன்னார்கள். பணம் செலவழிக்காமல் இருந்ததற்கு காரணம் என்ன என்று சர்க்கார் ஆராய வேண்டும். அப்படி இருந்தால் பணத்தை செலவழிப்பதற்கு தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

இப்பொழுது எங்களுக்கு ரிசர்வ் சீட் என்று ஒதுக்கியிருப்பது போல், பணம் தனியாக ஒதுக்கியிருப்பது போல் உத்தியோகத்திலும் ஒதுக்க வேண்டும். ஒரு தடவை சர்விஸ் கமிஷன் பரீக்ஷை எழுதி அந்த குறிப்பிட்ட உத்தியோகத்திற்கு தேர்வு கிடைக்கவில்லை என்றால், வேறு உத்தியோகத்திற்கு போக வேண்டுமானாலும் மறுபடி சர்விஸ் கமிஷன் பரீக்ஷை எழுத வேண்டும். இந்த முறையை மாற்றி அமைக்கவேண்டும். ஒரு தடவை ஒருவர் ஸர்விஸ் கமிஷன் பரீக்ஷை எழுதினால் அதை வைத்துக் கொண்டே அவருக்கு வேலை கொடுக்க வேண்டும் என்ற முறை வர வேண்டும்.

உத்தியோகத்துறைகளிலும் அவர்களுடைய ஜனத்தொகைக்குத் தக்கபடி அவர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்க வேண்டும். உத்தியோகங்களில் அவர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கினாலும் அவர்கள் மேல் பதவிகளுக்குச் செல்ல முடியாமல் அப்படியே இருக்கிறார்கள். அதனால் அவர்களுக்கு சலுகைகள் வழங்கியதாக கருதமுடியாது. ஆகவே உத்தியோகத் துறையில் அவர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்குவதோடு அவர்களுக்கு மேல் பதவிக்கு செல்வதற்கும் வசதி செய்து கொடுக்கவேண்டும். இப்பொழுது பார்த்தால் பலர் ஒரே பதவியில்தான் இருந்து கொண்டு வருகிறார்கள். எந்த உத்யோகத்தில் அவரை நியமித்தார்களோ அதே பதவியில் தான் இன்னும் இருந்து கொண்டு வருகிறார்கள். அதனால் அரிஜனங்களுக்கு உத்தியோகங்களில் ஸ்தானங்களை ஒதுக்குவதுபோல அவர்களுக்கு மேல் பதவிகள் வழங்குவதிலும் அவர்களுக்கு சலுகைகள் காட்டவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்பொழுது தான் அவர்களுக்கு உண்மையிலேயே சலுகைகள் காட்டியதாக ஆகும்.

கன்னியாகுமரி போன்ற இடங்களில் அரிஜனங்களில் சில வகுப்புகளுக்கு சாம்பவர் என்று வழங்கப்படுகிறது. இங்கு அவர்களை சாம்பான் என்று வழங்குகிறார்கள். இந்த வித்தியாசத்தால், இருவரும் ஒரே இனத்தவர்களாக இருந்தாலும், அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சலுகைகள் சாம்பவர்களுக்குக் கிடைக்காமல் இருக்கிறது. ஆகவே இந்த இரண்டு இனத்தவர்களையும் ஒன்றாகக் கருதி இரண்டு இனத்தவர்களுக்கும் சலுகைகளை காட்ட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய திருத்தத்தையும் செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக பணக்காரர்களிடமிருந்து வரிப்பணமாக பணத்தை வாங்கி அரிஜனங்களுக்கு செலவு செய்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்வது தவறு என்பது எங்களுடைய அபிப்பிராயம். வரி வசூல் செய்வதெல்லாம் நாட்டின் நலனுக்குத் தான் தவிர அரிஜனங்களுக்கு என்று வரி போட்டு வசூல் செய்வதல்ல. யாரிடமும் வரி வாங்காமல் எங்களுக்கு சலுகைகளை காட்டி வருகிறார்கள். அரிஜனங்களுக்கு என்று வரி போட்டு வசூல் செய்வதில்லை என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நாடு நல்ல முறையில் வாழ்வதற்குத்தான் வரி போட்டு வசூல் செய்கிறார்கள். நாடு முன்னேற்ற மடைந்து இருக்கிறது என்று சொன்னால் அது அரிஜனங்களால்தான் என்பதையும் யாரும் மறந்துவிடக் கூடாது. இதை எல்லோரும் உணர வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM:** சட்ட மன்ற உபதலைவர் அவர்களே, அரிஜன நல மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இந்த சமுதாயத்தில், அடித்தளத்தில் சகல விதத்திலும் பின் தங்கிய நிலைமையில், நீண்டகாலமாக துவட்டப்பட்டு பின் அடைந்த சமூகத்தினர் இன்றைய தினம் என்ன நிலைமையில் இருக்கிறார்கள் என்பதை நாம் கூர்ந்து கவனிக்கவேண்டும். இன்று அல்ல, நேற்று அல்ல, பல வருஷங்

[Srimathi Rajathi Kunchithapatham] [24th March 1958

களாக இந்த நாட்டில் ஆயிரம் ஆயிரம் வருஷங்களாக அந்த சமூகம் பின் அடைந்து வந்திருக்கிறது. அப்படிப்பட்ட சமூகத்தினருக்கு இந்த அரசாங்கம் பல விதத்திலும் சலுகைகள் காட்டி வருகின்றது. அதை நாம் பார்க்கிறோம். அரிஜனங்கள் பின்னடைந்து இருப்பதால் அவர்களுக்கு சகல விதமான வசதிகளையும் செய்து கொடுத்து வருகிறார்கள். எந்த விதமான சலுகைகள் அளிக்கப்பட்டாலும் அவைகளை அளிக்கும் போது அவர்களுக்குத்தான் முதல் சலுகை அளிக்கப்பட்டு வருகிறது. அரிஜனங்களுக்கு அளிக்கப்பட்டு வரும் சலுகையை பார்த்தால் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்களும் தாங்களும் அரிஜனங்களாகப் பிறந்திருக்கக் கூடாதா என்று எண்ணும்படியான அளவிற்கு அரிஜனங்களுக்கு முதல் சலுகை காட்டி விட்டு அதற்குப் பிறகு தான் மற்றவர்களுக்கு சலுகைகள் காட்டப்பட்டு வருகிறது என்பது எல்லோருக்கும் நன்றாகத்தெரியும். ரோடு போடவேண்டும் என்றுசொன்னால் அவர்களுக்குத்தான் முதல் சலுகை, கிணறுகள் வெட்ட வேண்டுமென்றால் அவர்களுக்குத்தான் முதல் சலுகை, படிப்பு வசதி செய்து கொடுக்கவேண்டும் என்றால் அவர்களுக்குத் தான் முதல் சலுகை. குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டும் என்றால் அவர்களுக்குத்தான் முதல் சலுகை. இப்படி அவர்களுக்கு எந்த வகையிலும் சலுகைகளை இந்த சர்க்கார் செய்து வருகிறார்கள். அந்தக் காலத்தில் சொன்னார்கள், அதாவது நந்தனார் காலத்தில் சற்று விலகி இரும் பிள்ளாய் சந்நிதானம் மறைக்கிறாய் என்று. அந்தக் காலத்தில் நந்தனார் ஆண்டவனை தரிசனம் பண்ணவேண்டும் என்று சொன்னபோது சற்று விலகி இரும் பிள்ளாய் என்று ஆண்டவன் நந்தியை சொன்னார். பிறகு நந்தனார் தீக்குளித்து விட்டு மறு ஜன்மம் எடுத்து ஆண்டவனை தரிசிக்கச் சென்றான். தீக்குளித்த பிறகு நந்தனாருக்கு ஞான உதயம் ஆயிற்று. வழி மறைத்திருக்கிறதே என்று சொன்னான். அதற்கு கடவுள் நந்தியை சற்று விலகி இருக்கச் சொன்னார். பிறகு மறு ஜன்மத்தில் நந்தனாருக்கு மோட்சம் கிடைத்து கடவுளுடன் சேர்ந்தார் என்று சொல்லப்படுகிறது. அன்று கடவுளால் கூட அரிஜனங்களுக்கு உடனே கொடுக்க முடியாத சலுகைகளை இன்று ஒரே ஜன்மத்தில் காங்கிரஸ் சர்க்கார் அரிஜனங்களுக்கு செய்து கொடுக்க முடிகிறது. கடவுளாலும் செய்து கொடுக்க முடியாத காரியத்தை இந்த காங்கிரஸ் சர்க்கார் அரிஜனங்களுக்குச் செய்து கொடுக்கிறது. இப்படிப்பட்ட நன்மைகளை இந்த காங்கிரஸ் சர்க்கார் அரிஜனங்களுக்கு செய்து வருகிறார்கள் என்பதை என்னால் சொல்லாமல் இருக்கமுடியாது. அத்துடன்கூட இன்று பார்த்தால் தொட்டில் முதற்கொண்டு சுடுகாடு வரையிலும், கரு முதற்கொண்டு கல்லறை வரையிலும் அரிஜனங்களுக்கு சர்க்கார் பல சலுகைகளைக் காட்டி வருகிறார்கள். அவர்களுக் எவ்வளவு சலுகைகளைச் செய்ய வேண்டுமோ அவ்வளவு சலுகைகளையும்கு சர்க்கார் செய்து வருகிறார்கள். அப்படியிருந்தும் அந்தச் சலுகைகள் அவர்களுக்கு சில சமயங்களில் பயனடையாமல் போய் விடுகின்றன. சர்க்கார் என்னசெய்தாலும் அவைகள் பூராவும் அரிஜனங்களுக்குப் போவதில்லை. சில குறைபாடுகள் இருக்கின்றன. வீடு கட்டும் திட்டம் என்று சர்க்கார் அமைத்திருக்கிறார்கள். அது எப்படி இருக்கிறது என்றால் யானை கொடுக்கிற நேரத்தில் அதற்கு உதவியாக தொரட்டி கொடுக்காமல் இருக்கிறார்கள். அதை ஒத்து இருக்கிறது இப்பொழுது அரிஜனங்களுக்குக் கொடுக்கப்படும் உதவிகள். வீடுகள் கட்டுவதற்கு என்று ஒரு வீட்டிற்கு 750 ரூபாய் கொடுக்கிறார்கள். அதில் 550 ரூபாய் சர்க்கார் கொடுக்கிறார்கள். பாக்கி 200 ரூபாயை அரிஜனங்கள் போட்டுக்கொண்டு கட்டிக்கொள்ளவேண்டும் என்று சொல்லுகிறார்கள். இந்த 200 ரூபாயை ஒரு அரிஜனாவது முழுசாக போட்டுக் கொண்டு கட்டிக்கொள்ள முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். ஒருவரிடமாவது முழுசாக 200 ரூபாயை கண்டுபிடிக்க முடியாது. அவ்வளவு தரித்திர நாராயணர்களாக அவர்கள் இருக்கிறார்கள். அந்த சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்றால் பகல் பட்டினியாகவும் இரவு கொட்டாவியாகவும்தான் இருக்கிறார்கள். அந்த நிலைமையில் அவர்கள் இருக்கும்போது அவர்களிடமிருந்து எப்படி முழுசாக 200 ரூபாயை எதிர்பார்க்க முடியும். இப்பொழுது பல இடங்களில் வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. அவைகள் எப்படி

இருக்கிறது என்றால் பச்சை செங்கலாலும், உளுத்த மரங்களாலும், உடைந்த ஓடுகளாலும், வீடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. அப்படிக் கட்டியிருப்பதால் அவைகள் கூடிய சீக்கிரத்தில் விழக்கூடிய நிலைமையில் இருக்கின்றன. இப்படியே தான் பல அங்கத்தினர்களும் குறிப்பிட்டார்கள். இந்த நிலைமையில் அவர்களுக்கு வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. சில இடங்களில் நல்ல முறையில் அதிகாரிகளால் வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு கோளாறும் இல்லாமல் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் எல்லா இடங்களிலும் அப்படி கட்டிக் கொடுக்கவே இல்லை. மாதம் 25 நாட்கள் அவர்கள் வேலை செய்ய வேண்டியதாக இருக்கிறது. இப்படி 25 நாட்கள் அவர்கள் வேலை செய்தாலும் அவர்களுடைய வாழ்க்கையை நடத்துவதற்குத்தான் அவர்கள் சம்பாத்தியம் இருக்கிறது. இந்த நிலைமையில் அவர்கள் எப்படி இந்த 200 ரூபாயைக் கொடுக்கமுடியும் என்பதை சற்று ஆராய்ந்து பார்க்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே இந்த 200 ரூபாயை அவர்களுக்குக் கடனாகக் கொடுத்து அந்தக் கடனை ஒரு வருஷத்திலோ அல்லது ஆறு மாதத்திலோ திருப்பி வாங்கிக்கொள்ளும்படியாக கடன் கொடுத்து உதவ வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி கடனாகக் கொடுத்து அவர்களிடமிருந்து பல தவணைகளாக வசூலித்துக்கொள்ளலாம். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக பார்த்தால் நகரப்புரங்களில் அரிஜனங்களுக்கு வீடு கட்டும் திட்டம் இல்லை. இதைப்பற்றி பல தடவை எடுத்துச் சொல்லியிருக்கிறேன். இதைப் போலவேதான் பல ஊர்களிலும் இருக்கின்றது. நகரப்புரங்களிலும் அதாவது முனிசிபாலிடிகளில் இப்படிப்பட்ட நிலைமை இருக்கிறது. நகரப்புரங்களில் இருக்கும் அரிஜனங்கள் எந்த அளவிலும் கிராமப்புரங்களில் இருக்கும் அரிஜனங்களைவிட அதிகப்படியான உயர்ந்த நிலைமையில் இல்லை. நகரப்புரங்களில் இருக்கக்கூடியவர்கள் மாட மாளிகையிலும் கூடகோபுரங்களிலும் வசிக்கவில்லை. கிராமங்களிலுள்ளவர்கள் அரைப் பட்டினியாக இருந்தால் இவர்களும் அரை பட்டினியாகத்தான் இருக்கிறார்கள். அதனால் இவர்களுக்கு மட்டும் வீடு கட்டிக் கொடுக்கும் திட்டம் ஏன் அமைக்கவில்லை என்று கேட்கிறேன். இந்த அடிப்படையில் சர்க்காருடைய கொள்கையைப் பார்த்தால் ஒரு கண்ணில் வெண்ணையும் மற்றொரு கண்ணில் சுண்ணாம்பும் இருப்பது போல் கருதுவதாகத் தோன்றுகிறது. இதைப் பார்த்தால் ரொம்பவும் பரிதாபகரமாக இருக்கிறது. இப்படிப்பட்ட பரிதாபகரமான நிலைமை நகரப்புரங்களிலும் இருக்கிறது. ஆகவே நகரப்புரங்களில் இருக்கிறவர்களுக்கும் வீடு கட்டித் தரும் திட்டத்தை அமுல் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அடுத்தப்படியாக அரிஜனங்களுக்கு சம்பளம் வழங்கும் திட்டம். இதிலும் சில குறைபாடுகள் இருக்கின்றன. "கானல் நீரை கவர்ந்து செல்லும் கால் நடை" போல, அதாவது தண்ணீர் வரப் போகிறது, வரப்போகிறது என்று நினைத்துக்கொண்டு கால் நடைகள் நடந்து நடந்து சென்று கடைசியில் தண்ணீர் இல்லாமல் ஏமாந்து போவது போல் இருக்கிறது அரிஜனங்களுக்கு சம்பளம் வழங்கப்படுவது. இன்றைக்குப் பார்த்தால் அரிஜனங்களுக்கு சம்பளம் காலாகாலத்தில் கிடைப்பதாகவே இல்லை. 1956-ம் வருஷத்திற்கு கொடுக்க வேண்டிய சம்பளம் இன்னும் அதாவது 1957 ஆகியும் அவர்களுக்கு கிடைக்கவில்லை. இப்பொழுது வருவதற்குக்கூட கஷ்டமான நிலைமையில் இருக்கிறது. இதைப்பற்றி பல தடவை இங்கே குறிப்பிடப்பட்டும் இன்னும் காலதாமதம் ஆகிக்கொண்டு வருகிறது. அவர்கள் கையிலுள்ள பணத்தைக் கொடுத்துவிட்டு இன்னும் அதைத் திருப்பிப் பெற்றுக் கொள்ளாமல் இருக்கிறார்கள். பலர் பணத்தை வட்டிக்கு வாங்கி விட்டு இன்னும் கொடுக்க முடியாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வசித்து வருகிற குடிசைகளை விற்று, நகை நட்டுகளை விற்று, சொத்து சுதந்தரத்தை விற்று பள்ளிக்கூடங்களுக்கு சம்பளத்தைக்கட்டியிருக்கிறார்கள். பலர் கடன் வாங்கியும் சம்பளத்தைக் கட்டியிருக்கிறார்கள். அப்படி கடன் வாங்கி வட்டி கட்டிக்கொண்டிருக்கிறார்கள். இப்படி அவர்கள் எவ்வளவு நாட்களுக்குத்தான் வட்டி கட்டிக்கொண்டிருக்க முடியும். அதனால் அவர்களுக்கு கொடுக்க வேண்டிய சம்பளப் பணத்தை காலா காலத்தில் கொடுக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Srimathi Rajathi Kunchithapatham] [24th March 1958

அடுத்தப்படியாக தேவஸ்தானம் சம்பந்தமாக சிலவற்றை சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இன்றைக்கு அரிஜனங்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்கிருர்கள், கிணறுகள் வெட்டிக்கொடுக்கிருர்கள், ரோடுகள் போட்டுக் கொடுக்கிருர்கள். இன்னும் பல விதமான சலுகைகளைச் செய்துகொண்டு வருகிருர்கள். அப்படி செய்யும்போது அதற்கெல்லாம் இந்த தேவஸ்தானம்களும் மடாலயங்களும் முட்டுக்கட்டையாக இருக் கின்றன. தேவஸ்தான, மடாலய நிலங்கள் அவைகளுக்கு முட்டுக்கட்டை களாக இருக்கின்றன. என்னுடைய தொகுதியில் துலுக்கர்பட்டியில் அரிஜனங்கள் இருக்கிருர்கள். அடுத்தபடியாக நரியூத்து என்ற கிராமம் இருக்கிறது. அது இனம் கிராமம் அல்ல. ஆனல் துலுக்கர்பட்டி இனம் கிராமம். அந்த இனம் கிராமத்தில் நிலத்தை ஆர்ஜிதம் செய்ய முடிய வில்லை. கிணறுகள் வெட்டுவதற்கு நிலத்தை ஆர்ஜிதம் செய்ய முடிய வில்லை. ஆனல் அடுத்துள்ள நரியூத்தில் கிணறுகள் வெட்டிக் கொடுத்தும் ரோடுகள் போட்டுக்கொடுப்பதற்கும் முடிகிறது. இனம் கிராமமாக இருந் தால் அப்படி முடியவில்லை. இன்னும் திருவாடுதுரை ஆதீனத்தைச் சேர்ந்த இடமாக இருப்பதால் அந்த இடங்களை ஆர்ஜிதம் செய்ய முடியாமல் இருக்கிறது. அங்குள்ள மாணவர்கள் தாங்களாகவே முன் வந்து ஒரு ரோடு போட்டார்கள். அதன்மூலம் சர்க்காருக்கும் எவ்வளவோ பணம் செலவாயிற்று. அது இனம் நிலமாக இருந்ததால் அந்த இடத்தை எடுத்துக்கொள்ள முடியாமல் போனதால் மாணவர்கள் போட்ட ரோடு மழையால் கரைந்து போய்விட்டது. அதன் பிறகு அங்கு ரோடு இல்லா மல் நடந்து செல்ல வேண்டியதாக இருக்கிறது. ரோடு போடுவதற்கு முன்னதாகவாவது வண்டிகள் போகக்கூடிய நிலைமையில் இருந்தது. இப்பொழுது வண்டிகள்கூட போகமுடியாத நிலைமையில் இருக்கிறது. அங்குள்ளவர்கள் கால் நடையாகச் செல்ல வேண்டியதாக இருப்பதால் ரொம்பவும் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள். ஏனென்ருல் அங்குள்ள வைகள் இனம் நிலமாக இருப்பதால் அதை ஆர்ஜிதம் செய்ய முடிய வில்லை. அதை ஆர்ஜிதம் செய்வதாக இருந்தால் சுமார் ஏழு அல்லது எட்டு வருஷங்களாகும் என்று அதிகாரிகள் சொல்லுகிருர்கள். அதனல் சர்க்கார் செலவு செய்தாலும் அதனல் எந்தவிதமான பிரயோசனமும் இல்லாமல் இருக்கிறது. இம்மாதிரி மாணவர்களுடைய உடல் உழைப்பு பிரயோசனம் இல்லாமல் போனதோடு சர்க்காருடைய பணம்கூட வீண் செலவாகியிருக்கிறது. ஆகவே இப்படிப்பட்ட குறைகளை அகற்ற வேண்டும் என்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இம்மாதிரியே கிணறு கள் வெட்ட வேண்டுமென்ருலும் கஷ்டங்கள் இருக்கின்றன. ஆகவே அரிஜனங்களுக்கு சொந்தமாக நிலம் கொடுக்கவேண்டும் என்ருல் இப்படிப்பட்ட குறைபாடுகளை நிவர்த்திக்க வேண்டும். இப்படிப்பட்ட இனம் நிலங்களை தேவஸ்தானங்களும், மடாதிபதிகளும் கொடுக்கவேண்டும் என்ருலும் அவர்களால் கொடுக்கமுடியவில்லை, அதற்கு அவர்களுக்கு உரிமையில்லை என்று சொல்லுகிருர்கள். சர்க்கார் வாங்க வேண்டுமென்ரு லும் அதுவும் முடியவில்லை. ஆகவே அவர்கள் விழுங்கவும் முடியாமல் கக்கவும் முடியாத நிலையில் இருக்கிருர்கள். அரிஜனங்களுக்கு நன்மை செய்ய வேண்டும் என்று நினைக்கும்போது இப்படிப்பட்ட நிலங்கள் முட்டுக்கட்டையாக இருக்கின்றன. இப்படிப்பட்ட முட்டுக்கட்டைகளை அகற்றி அவர்களுக்கு நன்மையை செய்யவேண்டும் என்றும் அதை காலா காலத்தில் செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

" காலத்தி னுற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது "

என்று சொல்வதுபோல் நாம் செய்யக்கூடியது சிறிய நன்மையாக இருந்தாலும் சிறியவையாக இருந்தாலும் அதை காலா காலத்தில் செய் வது நன்று என்று சொல்லிக்கொண்டு இந்த மானிய கோரிக்கையை ஆதரித்து என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

11-40 a.m. *SRI P. VEDAMANICKAM : கனம் உதவி சபாநாயகர் அவர் களே, இந்த ஆண்டிலே மராமத்து அமைச்சர் அவர்கள் கொண்டு வந் திருக்கிற ஹரிஜன மான்யத்தை ஆதரித்து வரவேற்று பேசுகிறேன். இந்த நாட்டிலே ஆயிரம் ஆண்டுகள் அல்ல, அதற்கு மேலாகவே இருந்து

24th March 1958] [Sri P. Vedamanickam]

வந்த கொடுமையான தீண்டாமை இப்பொழுது ஓரளவுக்கு மறைந்து கொண்டிருக்கிறது. நான் சிறுவனுக இருக்கும்பொழுது பள்ளிகளிலே மற்றவர்களோடு சேர்ந்து உட்கார்ந்து படிக்க முடியாது. இந்த நிலே மாறி ஓரளவு முன்னேற்றம் காணப்படுகிறது, இருந்தாலும், மற்றவர்கள் சொல்லியபடி முழுவதும் தீண்டாமை ஒழியவில்லே, ஹரிஜன மக்கள் முன்னேற்றத்திற்காக அரசாங்கம் பல சட்டங்களே செய்தபோதிலும், நாட்டு மக்களுடைய மனம் மாறவில்லே என்றுதான் சொல்லுகிறேன். மனம் மாறுவதற்கு கொஞ்சம் காலம் செல்லும். ஏனென்ருல் வெகு நாட்க ளாக ஊறிப்போன காரியமானது சீக்கிரத்தில் மாற முடியாது. இருந் தாலும் இப்பொழுது படிப்படியாக தீண்டாமை மறைந்து கொண்டிருப்பது பற்றி மிக சந்தோஷம். இன்னும் தீண்டாமை விஷயத்திலே அரசாங்கம் கடுமையான சட்டத்தை நிறைவேற்றவேண்டும்.

இந்த ஆண்டிலே ஹரிஜன நல மான்யத்திற்காக ரூ. 2,33,44,500 ஒதுக்கப்பட்டிருக்கிறது. மதிப்பிற்குரிய பிரகாசம் அவர்கள் காலத்தில் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருந்தார்கள். இப்பொழுது ஏறக்குறைய ஒரு கோடி 33 லட்சம் ரூபாய் அதிகமாக ஒதுக்கியிருக்கிருர்கள். இதை கண் நோக்கிப் பார்த்தால் நாளுக்குநாள் ஹரிஜனங்களுடைய அபிவிருத்தி முன்னுக்குத் தான் சென்றுகொண்டிருக்கிறது. என்னுடைய வட்டாரத்தில் இந்த ஆண்டில் விவசாயத்திற்காக ஏறக்குறைய ரூ. 2,30,000 ஒதுக்கப்பட்டிருக் கிறது. அதாவது, 520 ஜதை மாடுகள் வாங்குவதற்கும், 30 கிணறுகள் வெட்டுவதற்கும், 40 மாணவர்களுக்கு கைத்தொழில் சாமான் கொடுப்ப தற்கும் வகை செய்யப்பட்டிருக்கிறது. மேலும், ஹரிஜன மாணவர்களுக்கு உணவு அளிக்கப்படுகிறது. இம்மாதிரி ஹரிஜனங்களுக்கு பல வசதிகள் செய்து தரப்படுகின்றன. ஹரிஜன மக்கள் இப்பொழுது அதிகமாக படிக்க ஆசைப்படுகிருர்கள். ஆனல் அவர்களுக்கு சர்க்கார் இன்னும் பூரண உதவி செய்ய முடியவில்லே.

எல்லாவற்றையும் விட மிகவும் முக்கியமானது குடியிருப்பு மனே வசதி. அதை எல்லா அங்கத்தினர்களும் ஒத்துக்கொண்டிருக்கிருர்கள். இந்த விஷயத்தில் டிபார்ட்மெண்டு கொஞ்சம் மந்தமாகத்தான் நடக் கிறது. என்னுடைய தாலூகாவிலே, நான் வேலே செய்த இடத்திலே 10 ஆண்டுகள் காலமாகியும் இதுவரையில் ஒரு வருஷத்தில் கூட மனேக் கட்டு கொடுக்கப்படவில்லே. இன்னும் சர்க்கார் அலுவலகத்தில் அதுபற்றி வேலே நடந்துகொண்டு வருகிறது. அதற்கு ஆசைப்பட்ட அநேக ஆத்மாக் கள் இன்று உலகத்தை விட்டே மறைந்துவிட்டன. இம்மாதிரி வேலேகள் துரிதமாக நடை பெறவேண்டுமென்ருல் ஜில்லா வெல்பர் ஆபீஸருக்குக் கீழே 3 டெப்யூடி தாசில்தார்கள் நியமிக்கப்படவேண்டும். ஒவ்வொரு டிவிஷனுக்கும் ஒரு தாசில்தார் போடவேண்டும். ஜில்லா வெல்பேர் ஆபீஸருக்கு ஜீப்கார் கொடுக்கவேண்டும். 2 பிர்கா 80 கிராமங்கள் உள்ள பிளாக் டெவலப்மெண்டு ஏரியாவுக்கு ஜீப்கார் கொடுக்கப்பட் டிருக்கிறது. அங்கு வேலே அதனல் துரிதமாக நடைபெறுகிறது. ஆகவே, ஏறக்குறைய 1,500 கிராமங்கள் கொண்ட ஒரு வட்டாரத்திற்கு அதிகாரி யாக இருப்பவர் வாகனம் இல்லாமல் சொந்தக் காரிலோ அல்லது பஸ் ஸிலோ சுற்ற வேண்டுமென்ருல், வேலே துரிதமாக நடப்பதில்லே. அத ஞல் அவர்களுக்கு மற்ற காரியங்களே சரிவர செய்யமுடியாமல் போய் விடுகிறது. ஆகவே ஒவ்வொரு வெல்பர் ஆபீஸருக்கும் ஒரு ஜீப்கார் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படியில்லாவிட்டால் ஹரிஜன நலனுக்காக ஒதுக்கப்படும் பணம் வீணுக செலவழிக்கப்படும். காரணம் ஒரு வெல்பேர் ஆபீஸர் கார் இல்லாமல் 7, 8 தாலூக்காக்களே சுற்ற வேண்டுமென்ருல், மற்ற வேலேகளே ஒழுங்காக செய்ய முடியவில்லே. மேலும் வெல்பர் ஆபீஸர்கள் பள்ளிக்கூட நிர்வாகம் முதலிய எல்லா வேலேகளேயும் சேர்த்து கவனிப்பது என்ருல் கஷ்டமாக இருக்கிறது. ஆகையால் இரண்டு தாலூகா கொண்ட ஒரு டிவிஷனுக்கு ஒரு டெப்யூடி தாசில்தார், 2 ஸ்பெஷல் ரெவின்யூ இன்ஸ்பெக்டர்களே போட்டால் வேலேகள் சீக்கிரமாகவும் ஒழுங்காகவும் நடக்கும். சிதம்பரம் தாலூகாவில் அப்படிச் செய்திருக்கிருர்கள். தஞ்சாவூர் ஜில்லாவிலும் அம்மாதிரி செய் திருப்பதாக கேள்விப்படுகிறேன். ஆகவே, ஒவ்வொரு மாவட்டத்திலுள்ள

[Sri P. Vedamanickam] [24th March 1958

வெல்பேர் ஆபீஸருக்கு ஒரு ஜீப்கார் கொடுத்து, ஒரு டிவிஷனுக்கு டிப்டி தாசில்தாரையும் நியமித்தால், மனைக்கட்டு கொடுக்கும் வேலை சீக்கிரமாக நடைபெறும்.

அடுத்தபடியாக தாழ்த்தப்பட்ட மக்களுக்கு குடியிருப்பு மனைக்கட்டு அளிக்கப்படவேண்டுமென்று எங்கும் எல்லா கட்சியினர்களாலும், எல்லா மேடைகளிலும் பேசப்பட்டு வருகிறது. ஆனால் அது வாயளவில்தான் இருக்கிறது. பேப்பர் அளவில்தான் இருக்கிறது. ஏறக்குறைய 100-க்கு 90 தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நிலம் இல்லை. அவர்கள் நிலம் இல்லாமல் கூலி வேலை செய்து காலம் தள்ளுகிறார்கள். அப்படிப்பட்ட மக்களுக்கு நிலம் அளிக்கவேண்டும். ஒவ்வொரு மாவட்டத்திலும் லட்சக்கணக்கான ஏக்கர்கள் நிலம் தரிசாகக் கிடக்கின்றன. அவைகளை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பட்டா செய்து கொடுக்கலாம். இன்னும் அநேக ஏக்கர் நிலங்கள் புறம்போக்காக இருக்கின்றன. புறம்போக்கு நிலங்களை சர்க்கார் இவர்களுக்கு கொடுக்க மறுக்கிறது. காரணம், சர்க்காருக்கு அவைகள் வேண்டியிருக்கலாம் என்பதுதான். ஆனால் சில கண்டிஷன்ஸ் போட்டு குறிப்பிட்ட காலத்திற்காவது அவர்களுக்கு புறம்போக்கு நிலங்களை அளிக்கலாம். அப்படிச் செய்தால்தான் தாழ்த்தப்பட்ட மக்கள் முன்னேற முடியும். அப்படியில்லாமல் கொஞ்சம் ஹரிஜன மாணவர்களுக்கு படிப்பதற்கு சலுகைகள் கொடுத்துவிட்டால் மட்டும், ஹரிஜன மக்கள் முன்னேற முடியாது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு தலைக்கு 1 ஏக்கர் நஞ்சையும், அல்லது 2 ஏக்கர் புஞ்சையாவது கொடுக்க வேண்டும். தஞ்சாவூர், சிதம்பரம் குத்தகை வாரச் சட்டம் அமுலில் இருக்கிறது. அதனால் ஒரு ஆளுக்கு அங்கே ரூ. 1–4–0 கூலி கிடைக்கிறது. ஆனால் மற்ற 7 தாலூக்காக்களில் ஒரு ஆளுக்கு 8 அணாவும், பெண்ணுக்கு 6 அணாவும் கூலி கிடைக்கிறது. இது மிகவும் மோசமான கூலி. மிராசுதார்களை அணுகி கேட்டாலும், ஸ்டிரைக் செய்தாலும் ஒன்றும் முடியாது. ஏனென்றால் அந்த வட்டாரங்களில் சட்டம் அமுலில் இல்லை. ஆகவே, 1959 டிசம்பருக்குள் இந்த மாநிலம் முழுவதற்கும் ஒரேவிதமான கூலியை நிர்ணயிக்கவேண்டும். சிதம்பரம் போன்ற இடங்களிலுள்ள கூலி கிடைக்காவிட்டாலும், அவர்கள் ஜீவனத்துக்கேற்ற கூலியாவது கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். இப்பொழுது படித்த அநேக ஹரிஜன மக்கள் வேலையில்லாமல் இருக்கிறார்கள். உண்மையிலே இவர்களுக்கு கல்விச் சலுகைகள் கொடுத்துவிட்டு, வேலை கொடுக்காமல் இருந்தால் பிரயோஜனம் இல்லை. என்னுடைய விடுதியிலே படித்த மாணவர்கள், எம்.ஏ., பி.ஏ. படித்தவர்கள் வேலைதேடித்தரும் ஸ்தாபனத்தில் ரெஜிஸ்டர் செய்து கொண்டிருந்தும், வேலையில்லாமல் இருக்கிறார்கள். தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சர்க்கார் எவ்வளவு தூரம் கல்விச் சலுகைகள் அளிக்கிறார்களோ அந்த அளவுக்கு அவர்களுக்கு உத்தியோகம் வழங்குவதிலும் சலுகை அளிக்கவேண்டும். இந்த மாநிலத்தில் ஏறக்குறைய 140 டெவலப்மெண்டு பிளாக்குகளுக்கு மேல் இருக்கின்றன. தாழ்த்தப்பட்ட மக்களோ அல்லது ஹரிஜன மக்களோ பிளாக் டெவலப்மெண்டு ஆபீஸர்களோகவோ அல்லது வேறு உத்தியோகஸ்தர்களாகவோ நியமிக்கப்பட்டிருக்கிறார்களா என்று பார்த்தால் மிகவும் சொல்பம்தான். அபிவிருத்தி வட்டாரங்களில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு அவசியம் வேலை கொடுக்க வேண்டும். அப்படி கொடுத்தால்தான் அவர்கள் கையை தூக்கிவிட முடியும்.

குடிதண்ணீர் திட்டம் ஒவ்வொரு தாலூக்காவிலும் பஞ்சாயத்து கிராமங்களிலும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் என்னுடைய தாலூகாவில் முதனை, மங்கலம்பேட்டை, பெண்ணாடம் திட்டக்குடி முதலிய கிராமங்களுக்கு குடி தண்ணீர் வசதி விஸ்தரிக்கப்படவில்லை. நகரங்களிலும், பஞ்சாயத்துகளிலும் உயர் ஜாதி மக்கள் வாழ்கின்ற பகுதிகளுக்குமட்டும் குடி தண்ணீர் வசதி செய்து கொடுத்துவிட்டு, தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும் சேரிகளுக்கு குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்காமல் இருப்பது ஜனநாயக ஆட்சியில் பொறுத்தமாக இருக்காது. குறிப்பாக பஞ்சாயத்து போர்டு பிரதேசங்களில் உள்ள ஹரிஜன காலனிகளுக்கு குடி தண்ணீர் கிடைப்பதற்கு " ஓவர்ஹெட் டாங்க் " கட்டுவதற்கு அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

24th March 1958] [Sri P. Vedamanickam]

எல்லாவற்றிற்கும் மேலாக, தாழ்த்தப்பட்ட மக்களை போலீஸ் அதிகாரிகள் மிகவும் கேவலமாக மதிக்கிறார்கள். இதனால் நான் அரசாங்கத்தை எதிர்த்துப் பேசுகிறேன் என்று நினைக்க வேண்டாம். உண்மையை எடுத்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. அம்மாதிரி நிலை இருக்கிறது. என் தொகுதியில் ஏந்தல் சேரியை உயர்ஜாதி மக்கள் கொளுத்திவிட்டார்கள். ஆர்.டி.ஓ., டி.டபிள்யூ.ஓ. இவர்களோடு நானும் போய் நேரில் பார்த்தேன். ஆனால் சப்-இன்ஸ்பெக்டர் அந்த இடத்திற்கே வரவில்லை, அதுபற்றி மந்திரி அவர்களுக்கும், மற்ற அதிகாரிகளுக்கும் விண்ணப்பம் கொடுத்திருக்கிறோம். ஆனால் சப்-இன்ஸ்பெக்டர் ஒன்றுமில்லை என்று ரிபோர்ட் கொடுத்துவிட்டதாக தெரிகிறது. பேப்பரும் குளோஸ் ஆகிவிட்டது. அதே மாதிரி நெய்வாசல் சேரியில் ஒரு வீட்டையும், போரடியையும் கொளுத்திவிட்டார்கள். தாழ்த்தப்பட்ட மக்கள் ரிபோர்ட் கொடுத்தால் அதை சப்-இன்ஸ்பெக்டர் கவனிப்பதே இல்லை. நான் சொன்னால் கூட மதிப்பதில்லை. சர்க்கார் இம்மாதிரி நடைபெறாமல் இருப்பதற்கு தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டும். இந்த விஷயத்தை கவனிக்காவிட்டால் இந்த இடங்களிலெல்லாம் முதுகளத்தூர் ஆகிவிடும். இம்மாதிரி செய்தால் அங்குள்ள சப்இன்ஸ்பெக்டர் பேரிலும், போலீஸ் அதிகாரிகள் பேரிலும் தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா 11-50 a.m.
நாயகர் அவர்களே, ஹரிஜன முன்னேற்றத்திற்காக ஒதுக்கப்படும் மானியத்தின் பேரில் நான் பேசுவது ஒருசில ஹரிஜன அங்கத்தினர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஹரிஜன முன்னேற்ற மானியத்துடன் பிற்பட்டவர்களின் முன்னேற்றத்திற்கான மானியத்தையும் அரசாங்கத்தார் சேர்த்திருப்பதால், இந்த சந்தர்ப்பத்தில் பேச முன்வந்திருக்கிறேனே தவிர, ஹரிஜனங்களின் உரிமைகளைப் பறிப்பதற்காகவோ அவர்களுக்கு உரிமைகள் அளிக்கும் சர்க்காருக்கு குறுக்கே நிற்பதற்காகவோ நான் பேச முன்வரவில்லை என்று முதலில் சொல்லிக்கொள்கிறேன். ஹரிஜன முன்னேற்றத்திற்காக சென்ற ஆண்டு அரசாங்கத்தார் 194 லட்ச ரூபாய் மானியம் ஒதுக்கினார்கள் ; இந்த ஆண்டு அதைவிட அதிக மானியம் ஒதுக்க முன்வந்திருக்கிறார்கள். அதாவது இந்த ஆண்டு 233 லட்ச ரூபாய் ஒதுக்க முன்வந்திருக்கிறார்கள். ஹரிஜன முன்னேற்றத்திற்காக அரசாங்கம் எதை எதையெல்லாம் செய்துவருகிறது என்பதை என்னைவிட நன்றாக ஆளும் கட்சியைச் சேர்ந்த இதர அங்கத்தினர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதை கனம் அங்கத்தினர்கள் கேட்டும் இருக்கிறார்கள். எந்தெந்த துறைகளில் எவ்வளவு எவ்வளவு பணம் செலவழிக்க முடியுமோ அவ்வளவு பணத்தை அந்தந்தத் துறைகளில் செலவழிப்பதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது. ஹரிஜனங்களை முன்னேற்றமடையச் செய்ய வேண்டுமென்ற ஆவேசத்தோடும் ஆர்வத்தோடும் இந்த அரசாங்கத்தார் இருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்கவும் முடியாது, மறக்கவும் முடியாது, மறக்கவும் கூடாது. ஹரிஜன முன்னேற்றத்திற்காக நிறையப் பணம் செலவு செய்துவரும் இந்த அரசாங்கத்தார் பிற்பட்ட இனத்தவர்களுடைய முன்னேற்றத்திற்காகவும் பணம் ஒதுக்கிச் செலவழித்து வருகிறது. ஆனால் பல ஹரிஜனங்களுக்கு ஒரு பயம் இருக்கிறது. ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்படும் பணத்திலிருந்து தொகைகளை பிற்பட்ட இனத்தவர்களுக்கு அரசாங்கத்தார் கொடுத்து விடுகிறார்களோ என்று அவர்கள் பயப்படுகிறார்கள். சில எதிர்கட்சி கனம் அங்கத்தினர்கள் போடும் குழப்பமான கேள்விகளிலிருந்து இந்த பயத்தைப் புரிந்துகொள்ள முடிகிறது. ஹரிஜனங்களுக்காக தனித் தொகையும் பிற்பட்ட இனத்தவர்களுக்காக வேறு தனித் தொகையும் ஒதுக்கப்படுகின்றன என்றும், ஹரிஜனங்களுக்கான தொகையில் ஒரு பகுதியும் பிற்பட்டவர்களுக்காக செலவழிக்கப்படுவதில்லை என்றும், பிற்பட்டவர்களுக்கான தொகையில், ஒரு பகுதியும் ஹரிஜனங்களுக்காக செலவழிக்கப்படுவதில்லை என்றும் கனம் அமைச்சர் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். ஹரிஜனங்களுக்காக சென்ற ஆண்டு 150 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டது ; இவ்வாண்டு 220 லட்ச ரூபாய் ஒதுக்கப்படுகிறது ; சென்ற ஆண்டு ஒதுக்கப்பட்டதை விட 70 லட்ச ரூபாய் அதிகமாக இவ்வாண்டு ஒதுக்கப்படுகிறது. பிற்பட்ட இனத்

தவர்களுக்காக சென்ற ஆண்டு 22 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டது; இவ்வாண்டு 12 லட்ச ரூபாய்தான் ஒதுக்கப்படுகிறது; இவ்வாண்டு பிற்பட்டவர்களுக்கு குறைவாக ஒதுக்கப்படுகிறது. ஹரிஜன மக்களின் தொகை எல்லாப் பிற்பட்ட வகுப்பினரின் மொத்தத் தொகையையும் விடக் குறைவாகத்தான் இருக்குமே தவிர அதிகமாக இருக்காது. அப்படிப் பட்ட பிற்பட்ட வகுப்பினருக்கு, சென்ற ஆண்டு ஒதுக்கியதைவிட குறைவாக பணம் இவ்வாண்டு ஒதுக்கப்படுகிறது. பிற்பட்ட இனத்தவர் பிரிவில் எத்தனையோ ஜாதிகள் வருகின்றன. காகா கலேல்கர் குழுவினர், இரு நிலைமைகளைக் குறிப்பிட்டு அந்த இரு நிலைமைகளில் உள்ளவர்களைத் தான் பிற்பட்ட இனத்தவர்களாகக் கருத வேண்டுமென்று கூறினார்கள். அந்த இரு நிலைமைகள் "ஸோஷல் டிஸபிலிடி" என்பதும் "இகனாமிக் பாக்வர்ட்னெஸ்" என்பதும் ஆகும். அதாவது பிற பிரிவினரால் இழுக்கு உண்டாக்கப்பட்டு அதன் விளைவாக சமுகத்தில் தாழ்ந்த அந்தஸ்தில் இருப்பது ஒரு நிலைமை; பொருளாதாரத் துறையில் தாழ்வுற்றிருப்பது மற்றொரு நிலைமை. "பாக்வர்ட், மோர் பாக்வர்ட், மோஸ்ட் பாக்வர்ட்" என்ற வெவ்வேறு விதமான பிற்பட்ட நிலைகளிலிருக்கும் ஜாதியினர் "ஏ, பி, சி" என்ற மூன்று வகையினராகப் பிரிக்கப்பட்டிருக்கிறார்கள். காகா கலேல்கர் கமிஷனில் நானும் ஒரு அங்கத்தினராக இருந்ததால் இதுபற்றி எனக்கு விளக்கமாக தெரியும். அந்தக் கமிஷனின் யோசனைகள் பார்லிமெண்டால் இன்னும் அங்கீகரிக்கப்படாததால் அவை பூராவும் இன்னும் அமலுக்கு வரவில்லை. அந்தக் காரணத்தால், இப்போது, மிகவும் பிற்பட்ட இனத்தவர்கள் என்று எங்களால் குறிப்பிடப்பட்டவர்கள் மிகவும் பிற்பட்ட இனத்தவர்களாக எடுத்துக்கொள்ளப்படாமல் அவ்வளவு பிற்பட்டவர்களாக இல்லாத வேறு இனத்தவர்கள் மிகவும் பிற்பட்ட இனத்தவர்களாக எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறார்கள். இதை கனம் அமைச்சரின் கவனத்திற்கு நாங்கள் அடிக்கடி கொண்டு வந்திருக்கிறோம். மத்திய சர்க்காருக்கு எழுதி நாங்கள் சொல்கிறபடி செய்வதாக கனம் அமைச்சரும் வாக்குறுதி அளித்திருக்கிறார். அவ்வாறு கனம் அமைச்சர் வாக்குறுதி அளித்திருக்கும்போது, பிற்பட்ட இனத்தவர்களுக்கான தொகை சென்ற ஆண்டு ஒதுக்கப்பட்டதில் பாதியாக இவ்வாண்டு குறைக்கப்படுவதற்கு காரணம் என்ன என்று அறிய விரும்புகிறேன். பிற்பட்ட இனத்தவர்களின் நிலைமையை அரசாங்கம் புரிந்து கொள்ளாததால், அந்தத் தொகையை அரசாங்கம் குறைக்கிறதா? அப்படி இல்லாவிட்டால், பிற்பட்டவர்கள் ஓரளவு முன்னேற்றமடைந்து விட்டார்கள் என்று கருதி அவ்வாறு அரசாங்கம் குறைக்கிறதா? இப்போது இவ்வளவு தொகை போதும் என்று கருதி அரசாங்கம் அதை அவ்வாறு குறைக்கிறதா? ஹரிஜனங்களுக்கு படிப்பிற்காக மாத்திரமின்றி மற்ற காரியங்களுக்காகவும் அரசாங்கம் நிதி உதவி அளிக்கிறது. மனைக் கட்டுகள், கிணறு வெட்டுதல், ஹாஸ்டல்கள் ஆகிய எல்லாவற்றிற்குமாகத்தான் ஹரிஜனங்களுக்கு அரசாங்கத்தார் 233 லட்ச ரூபாய் மானியம் அளிக்கிறார்கள். ஆனால் பிற்பட்ட இனத்தவர்களுக்குக் கொடுக்கப்படும் பணத்தில் 3/4 பங்கு படிப்பபிற்காகத் தான் செலவழிக்கப்படுகிறது. "ரெக்லமேஷன் ஆப் கள்ளர்ஸ் அண்ட் கொரவர்ஸ்" என்பது போன்ற காரியங்களுக்காக ஒரு சிறிது தொகை செலவழிக்கப்படுகிறதே தவிர மற்றெல்லாத் தொகையும் ஸ்காலர்ஷிப்பிற்காகத்தான் செலவழிக்கப்படுகிறது. அதிகமான பிற்பட்ட இனப் பிள்ளைகள் ஸ்காலர்ஷிப் கேட்டிருந்தும்கூட அவர்களுக்கு அது கிடைக்காமலிருப்பதற்குக் காரணம், மானியத் தொகை பற்றாக்குறையாக இருப்பதுதான் என்று நினைக்கிறேன். மற்ற இலாகாக்களில் செலவழிக்கப்படுவதைவிட 82 சத விகிதம் அதிகமான பணம் ஹரிஜன நல இலாகாவில் செலவழிக்கப்படுகிறது என்று அறிகிறேன். ஆகவே ஹரிஜன மக்களேயும் பிற்பட்ட இனத்தவர்களேயும் குறுகிய காலத்தில் முன்னேற்றமடையச் செய்வதற்காக ஒவ்வொரு ஆண்டும் அவர்களுக்காக அதிகமான பணம் ஒதுக்க வேண்டுமென்ற ஆர்வமும் ஆவேசமும் அரசாங்கத்தாருக்கு இருப்பதை உணருகிறேன். இந்தத் தொகைகளை சரிவரச் செலவழித்து அவர்களை சீக்கிரம் முன்னேற்றமடையச் செய்தால்தான் அதற்குப் பிறகு மற்ற வளமளிக்கும் திட்டங்களை ஆரம்பித்து நிறைவேற்ற முடியும். இந்த நிலையில் பிற்பட்ட இனத்தவர்களுக்கு இவ்வாண்டு குறைவான பணம் ஒதுக்கப்பட்டதற்கு கனம் அமைச்சரிடமிருந்து விளக்கம் பெற விரும்புகிறேன்.

24th March 1958] [Srimathi T. N. Anandanayaki]

அடுத்தபடியாக, திருத்தப்பட்ட மதிப்பீடுகளில், பிற்பட்ட இனத்தவர்களுக்காக ஒதுக்கப்பட்ட 22 லட்ச ரூபாய் தொகையில் சென்ற ஆண்டு 12 லட்ச ரூபாய்தான் செலவழிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. பாக்கித் தொகையை இந்த மார்ச்சு மாத முடிவிற்குள் இலாகாவினர் செலவழித்து விடுவார்கள் என்று அரசாங்கம் எண்ணுகிறதா? இல்லா விட்டால், இலாகாவினர் மொத்தத் தொகையையும் மீதமின்றி செலவழிக்கத் தவறி விட்டனர் என்றே கருதுகிறதா? இது எனக்கு சரியாக விளங்கவில்லை. செலவழிக்கப்பட்டது 12 லட்ச ரூபாய் என்று குறிப்பிட்டால், பாக்கித் தொகை என்ன ஆனது என்று எனக்குத் தெரியவில்லை. இந்தக்கணக்கில் குற்றம் இருக்கிறதா? குற்றம் இருக்குமானல் அது என்ன குற்றம் என்று கனம் அமைச்சர் விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எங்களுக்கு விஷயம் புரியாமல் இருக்கலாம். புரிய வைத்தால் மகிழ்ச்சியுடன் புரிந்துகொள்வோம் என்று கனம் அமைச்சருக்குச் சொல்லிக்கொள்கிறேன்.

ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட இனத்தவர்களுக்கும் ஸ்காலர்ஷிப்புகள் கொடுப்பதில் தாமதம் ஏற்படுகிறது. இந்தத் தாமதம் பே அண்ட் அக்கௌண்ட்ஸ் ஆபீஸில் ஏற்படுகிறது. அந்த ஆபீஸிலிருந்து அங்கீகாரம் மிகவும் தாமதித்து வருகிறது. அந்த ஆபீஸில் செப்டம்பர், அக்டோபர் மாதத்தில் கூட அங்கீகாரம் கொடுப்பதில்லை. அதற்கும் மேல் தாமதிக்கிறார்கள். அதுவரையில் மாணவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் பணம் கொடுக்காத வரையில் பிற்பட்ட இன மாணவர்கள் எவ்வாறு சம்பளம் கட்ட முடியும்? அவ்வளவு வசதியுள்ளவனாக இருந்தால் இவன் ஏன் பிச்சைக்கு வருகிறான்? சம்பளம் கட்ட வக்கில்லாமல் தானே பிச்சைக்கு வருகிறான்? இவனுக்கு ஸ்காலர்ஷிப் பணம் பிறகு வந்து சேரும் என்று நம்பி இவனுக்கு எவனாவது பணம் கடன் கொடுக்கிறானா? அதுவும் இல்லை. இந்த நிலையில், மாணவன் புழுவாகத் துடித்து அவன் உயிரே ஊசலாடிக்கொண்டிருக்கும்போதுதான் அவனுக்கு பணம் போய்ச் சேருகிறது. மார்ச் மாதம் வந்து விடுகிறது. அவன் ஆண்டு இறுதிப் பரீட்சைக்குப் போக வேண்டும். அதற்குள் சம்பளத்தைக் கட்டுவதற்கு அவன் கடன் வாங்கியிருக்கிறானே என்னமோ, தெரியாது; கடன் கொடுத்த எத்தனைபேர் அவன் கழுத்தை நெரித்துக் கொண்டிருக்கிறார்களோ, தெரியாது. இதற்கு, ஹரிஜன இலாகாவின் பேரில் குற்றம் சொல்வதற்கில்லை. ஸ்காலர்ஷிப் விண்ணப்பங்களை அங்கீகரிப்பதில் பே அண்ட் அக்கௌண்ட்ஸ் ஆபீஸில் ஏற்படும் தாமதத்தை தவிர்க்க வேண்டும். ஹரிஜனங்களின் விண்ணப்பங்களை அந்த ஆபீஸில் "ஏமெர்ஜெண்ட்"-ஆக கவனிக்கவேண்டுமென்று அந்த ஆபீஸருக்கு அரசாங்கத்தார் உத்தரவு போடவேண்டும். எப்படியாவது ஹரிஜனங்களுக்கும் பிற்பட்டவர்களுக்கும் ஸ்காலர்ஷிப் பணம் துரிதமாகக் கிடைக்கச் செய்வதற்கு அரசாங்கத்தார் ஏற்பாடு செய்யவேண்டும்.

ஸ்காலர்ஷிப் விஷயத்தில் இன்னும் சில சங்கடங்கள் இருக்கின்றன: இந்த அரசாங்கத்தார் பணம் கொடுக்காவிட்டால் இந்திய அரசாங்கத்தார் பணம் கொடுப்பதாகச் சொல்லப்படுகிறது. இதன் காரணமாகவும் தாமதம் ஏற்படுகிறது. தாமதத்தின் காரணமாக பிள்ளைகளின் படிப்பு கெடுகிறது. ஹரிஜனங்களுக்காகவும் பிற்பட்ட இனத்தவர்களுக்காகவும் அரசாங்கத்தார் எத்தனையோ லட்சம் ரூபாய் செலவழிக்கிறது. இவ்வளவு பணம் செலவழிக்கும்போது அந்தப் பணத்தின் பயனை அவர்கள் காலா காலத்தில் அடையமுடியாததால், அரசாங்கத்திற்கு கெட்ட பெயர் வருகிறது. ஆகவே ஸ்காலர்ஷிப்புகளும் மற்ற நிதி உதவிகளும் இவர்களுக்கு காலாகாலத்தில் கிடைக்கும்படி சர்க்கார் செய்யவேண்டும்.

இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். பலர் ஹரிஜன நல இலாகா ஆபீசிற்கு சென்று சிப்பந்திகளை அடிக்கடி பார்த்து அவர்களுக்கு தொந்தரவு கொடுக்கிறார்கள். இது எனக்கு நேரிடையாகத் தெரியும். நான் ஒரு தடவை அந்த ஆபீஸிற்குப் போக வேண்டியிருந்தது. அங்கே சென்று பலர் அங்குள்ள சிப்பந்திகளிடம் "எனக்கு ஸ்காலர்ஷிப் அனுமதிக்கப்பட்டு விட்டதா?" என்று அடிக்கடி கேட்கிறார்கள். இவ்வாறு சாதாரண சிப்பந்திகளுக்கு அடிக்கடி தொல்லை கொடுக்கிறார்கள். இதன்

[Srimathi T. N. Anandanayaki] [24th March 1958

காரணமாக ஒரு தடவை ஒரு சிப்பந்திக்கும் ஒரு மாணவருக்கும் குத்துச் சண்டை ஏற்பட்டது. அது சம்பந்தமாக இந்த சபையிலுள்ள ஒரு கனம் அங்கத்தினர் நீதிமன்றத்திற்குச் சென்று சாட்சி சொல்ல வேண்டியிருந் தது. கனம் அங்கத்தினர்களோ மற்றவர்களோ அந்த ஆபீஸிலுள்ள சாதாரண சிப்பந்திகளுக்கு தொல்லை கொடுக்கக்கூடாது. ஏதாவது விசா ரிக்க வேண்டுமானால் நேரே டைரக்டரிடமோ, பி.எ.-யிடமோ சென்று பேச லாம். சாதாரண சிப்பந்திக்கு ஏற்பட்ட தொல்லையின் விளைவாக நடந்த குத்துச் சண்டையைப் பற்றி குறிப்பிட்டேன். '**To discuss the discourteous behaviour of the Director and the department.**' என்று குறிப்பிட்டு இந்த சபையில் ஒரு வெட்டுப் பிரேரபணை வந்தது. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். மேலும் "**discourteous**" என்ற வார்த்தையை அதில் என் போட்டார்கள் என்று தெரியவில்லை. அர்த்தத்தை சரிவர கவனிக்காமல் அந்த வார்த்தையைப் போட்டிருக்கிறார் கள் என்று நினைக்கிறேன். இப்போது ஹரிஜன நல இலாகா பல நல்ல காரியங்களைச் செய்து வருகிறது. அந்த இலாகாவை எல்லோரும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். 1951–52-ல் எல்லாம் ஹரிஜன நல இலாகா என் றால் என்ன என்று பலருக்குத் தெரியாது.

**Sri A. GOVINDASAMY** : கனம் உப தலைவர் அவர்களே, வெட்டுப் பிரேரணையை "மூவ்" பண்ணாமல் இருக்கும்போது, அதைக் குறித்து சட்ட சபையில் பேசலாமா என்று தங்களிடமிருந்து அறிய விரும்பு கிறேன்.

**DEPUTY SPEAKER** : வெட்டுப் பிரேரணை கொடுக்கப்பட்டிருந்து, வெட்டுப் பிரேரணை "சர்க்குலேட்" செய்யப்பட்டது. அது கனம் அங்கத் தினர்களுக்கு "சர்க்குலேட்" செய்யப்பட்ட பிறகு, சபையில் அதை "மூவ்," பண்ணுவிட்டாலும், அதைப்பற்றி பேசலாம்.

**Srimathi T. N. ANANDANAYAKI** : ஆகையால், இந்த இலாகா வைப் பொறுத்தவரையில் இது ஓரளவு நன்றாக நடந்து வருகிறது. அதை முன்னேற்றத்திற்குக் கொண்டு போக வேண்டுமானால், கனம் அமைச்சர் அவர்கள் பிற்பட்ட இனத்தவர்களுடைய நலத்திற்காக அதிகமாக தொகை ஒதுக்கி நல்ல முறையில் இந்த இலாகா செயல்பட உதவ வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகின் றேன்.

I only referred to one of the cut motion. I went through. It may pertain to this incident because I was there.

**DEPUTY SPEAKER** : I will answer. The hon. Member need not answer. They have been circulated and so the Members are at liberty to refer to them.

* **Sri V. K. KOTHANDARAMAN** : கனம் உப சபாநாயகர் அவர் களே, கனம் அங்கத்தினர் ஜெகன்னாதன் அவர்கள் பிரேரேபித்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். (இத்தரு ணத்தில் மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்) இப்பொழுது ஹரிஜன முன் னேற்றத்தைப்பற்றி ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும், எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்களும் மிக தெட்டத் தெளிவாக அதில் இருக்கும் குறைபாடு களை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். "எதிர்க் கட்சியில் இருக்கக்கூடியவர் கள் எப்பொழுதும் எதிர்ப்பாட்டுத்தான் பாடிக்கொண்டிருப்பார்கள் ; நல்லது இருப்பதை அவர்களால் பார்க்க முடியாது" என்று சொல்ல லாம். ஆனால், நான் சொல்லுகிறேன். எல்லோரும் ஒரே பாட்டைத்தான் பாடிக்கொண்டிருக்கிறார்கள் என்று. ஆனால், ஒரு வித்தியாசம் இருக் கிறது. எதிர்க்கட்சியிலே இருக்கக்கூடியவர்கள், "நாங்கள் எதிர்க்கி றோம்" என்று சொல்லிவிட்டு அதில் இருக்கும் குறைபாடுகளை எடுத்துச் சொல்வார்கள். ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள், "நாங்கள் மனமார வரவேற்கிறோம்" என்று சொல்லி, அவர்கள் தொகுதியிலே இருக்கும் கோரிக்கைகளை முழுக்க முழுக்க எடுத்துச் சொல்லுகிறார்கள். ஆனால்,

24th March 1958] [Sri V. K. Kothandaraman]

அதை முழுக்க முழுக்க மனதார ஆதரித்து, அதில் எந்தக் குறைபாடும் கிடையாது என்று சொன்னவர்கள் ஒருவரும் கிடையாது. இதைத்தான் நாம் பார்க்கிறோம்.

ஆகவே, இப்பொழுது உண்மையிலேயே ஹரிஜன முன்னேற்றத்திற்காகவேண்டி, சர்க்கார் ஓரளவு ஏதோ பணத்தை ஒதுக்கி நல்லது செய்யக்கூடிய அளவுக்கு செய்து வருகிறார்கள் என்பதைப் பொறுத்தவரையிலே வரவேற்கக்கூடியதுதான். ஆனால், சாகும் தருவாயிலிருக்கும் ஒருவனுக்கு பால் சோறு கொடுக்கிறேன் என்று சொல்வதைப்போல், "அதைத் கொடுத்தோம்; இதைக் கொடுத்தோம்" என்று சொல்வதிலே பிரயோஜனம் இல்லை. உண்மையிலேயே ஆயிரக்கணக்கான வருஷங்களாக அவர்கள் கஷ்டப்பட்டு வருகிறார்கள். மனித சமுதாயத்திற்கு ஜீவநாடியாகவும், முதுகெலும்பு போலவும் இருந்து, உணவு உற்பத்தியைப் பெருக்கக்கூடியவர்கள் தாழ்த்தப்பட்ட மக்கள். ஜனங்களுக்கு நோய் நொடி ஏற்படாமல் காப்பாற்றக்கூடிய சுகாதார தொழிலாளர்களாக இருப்பவர்களும் தாழ்த்தப்பட்டவர்கள்தான். இதுபோன்ற பல துறைகளிலே மனித சமுதாயத்திற்கு பாடுபடக்கூடியவர்கள் தாழ்த்தப்பட்டவர்கள் என்று சொல்லும் அதே நேரத்தில் அவர்களுடைய வாழ்க்கை ஒதுக்குப் புறங்களிலும், மரத்தடியிலும், சாக்கடை ஓரங்களிலும் இருக்கக்கூடிய அளவிற்கு இன்றைக்கு நிலைமை இருக்கிறது.

நாம் இங்கே குறை கூறுவது டைரக்டர் திருவாளர் முத்திருளாண்டியை அல்ல. சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்? அதுபோல நாம் இங்கே எந்த அளவுக்கு பணம் ஒதுக்குகிறோமோ அந்த அளவுக்குத் தான் அவர் அங்கே பணம் கொடுப்பார். அதுபோல்தான் நாம் கனம் அமைச்சர் திரு. கக்கன் அவர்களைப்பற்றி குறை கூறுவதாக நினைக்கக்கூடாது. அவர் என்ன செய்வார்? அவரும் இதற்காக பணம் நிறைய ஒதுக்கவேண்டுமென்று போராடலாம். ஆனால், அங்கேகூட செல்வாக்கு படைத்த அமைச்சர்கள் "நீங்கள் கேட்பது சரியில்லை" என்று அவரை அப்படியே அமுக்கி உட்கார வைக்கலாம். அந்த அளவுக்கு காபினெட்டிலே இருக்கலாம். இம்மாதிரி சூழ்நிலை, ஏற்றத்தாழ்வு, பாகுபாடு ஒவ்வொரு துறையிலும் காபினெட்டில் மட்டுமல்லாமல் கிராமத்திலும் மற்ற துறைகளிலும் இருந்துகொண்டு வருகிறது. இந்த நிலைமையிலே இன்றைக்கு ஹரிஜனங்கள் முன்னேறக்கூடிய தன்மையிலே இருக்க வேண்டுமானால், ஏதோ சில பணத்தை ஒதுக்கிவிட்டு, அதன் மூலமாக அவர்கள் முன்னேறிவிடுவார்கள் என்று நினைத்தால் அதற்கு இன்னும் எத்தனை நூற்றுக்கணக்கான வருஷங்கள் ஆகுமோ என்று இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவிக்கவேண்டியிருக்கிறது. ஆனால், இந்த அளவு பணம் ஒதுக்கவில்லையென்றாலும் அவர்களுடைய முன்னேற்றத்திற்காக வேண்டி, அவர்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்காக வேண்டி, சர்க்கார் உடனடியாக நிலச்சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டுவந்து, இன்றைக்கு சர்க்காருக்குச் சொந்தமாக இருக்கும் லட்சக்கணக்கான தரிசு நிலங்களை தாழ்த்தப்பட்ட மக்களுக்கு 5 அல்லது 10 ஏக்கர் வீதம் கொடுத்து அதன் மூலமாக விவசாயம் செய்யக்கூடிய அளவுக்கு வசதி செய்து கொடுத்தால், இன்றைக்கு ஹரிஜனங்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுங்கள், உத்தியோகங்கள் கொடுங்கள் என்று கேட்க வேண்டிய அவசியம் இல்லை. அவர்கள் விவசாயத் துறையில் பாடுபட்டு, பெரிய அளவுக்கு முன்னேறி வந்து, அவர்களை மற்றவர்கள் நம்பி வாழக்கூடிய அளவுக்கு முன்னேறி வர முடியும்.

ஆனால், இன்றைக்கு உள்ள நிலைமை என்ன? இருப்பதற்கு வீடு இல்லை, என்ற நிலைமை பல இடங்களில் இருக்கிறது. நூற்றுக்கணக்கான மனுக்களும், கம்ப்ளெயிண்டுகளும் வந்துகொண்டிருக்கின்றன. இன்றைக்கு தரிசு நிலங்களில் வீடு கட்டிக்கொண்டிருக்கும் தாழ்த்தப்பட்ட மக்களை அந்த இடத்திலிருந்து விரட்டியடிக்கக்கூடிய அளவுக்கு இன்றைக்கு நிலைமை இருக்கிறது. அது மட்டும் அல்ல. இன்னும் பல கிராமங்களிலே அவர்கள் 15 முதல் 40 வருஷங்கள் வரை விவசாயம் செய்துகொண்டிருந்தாலும், மேடு பள்ளங்களைத் திருத்தி, பக்குவப்படுத்தி வைத்துக்கொண்டிருந்தாலும் அந்த நிலத்தை வைத்துக்கொண்டிருந்ததற்காக நூற்றுக்

[Sri V. K. Kothandaraman] [24th March 1958

கணக்கான ரூபாய் அபராதம் விதிப்பது மூலமாக அவர்கள் பேரில் அடக்கு முறை கொண்டுவருவதும், அந்த நிலத்தைவிட்டு ஓட்டக்கூடிய அளவுக்கு
12–30 p.m. நிலைமை இருக்கிறது. அந்தத் தரிசு நிலங்கள்கூட குட்டைப் புறம்போக்கு, தோப்புப் புறம்போக்கு என்று நூற்றுக்கணக்கான புறம்போக்குகள் இருப்ப தாகச் சொல்லப்படுகிறது. ஆனால், இன்றைக்கு உயர்ந்த ஜாதி என்று சொல்லக்கூடியவர்கள் அதே புறம்போக்கிலே விவசாயம் செய்கிறார்கள் என்றால், பத்து வருஷம் விவசாயம் செய்துகொண்டிருந்தால்கூட உடனே பட்டா செய்யப்படுகிறது. அதே புறம்போக்கில் தாழ்த்தப்பட்டவர்கள், 20 வருஷம், 30 வருஷம் விவசாயம் செய்துகொண்டிருந்தால்கூட விரட்டப்படு கிறார்கள். இம்மாதிரி நிலைமை இருக்கிற காரணத்தால் உடனடியாக உண்மையிலேயே தாழ்த்தப்பட்ட மக்களுக்கு நல்லது செய்யவேண்டும் என்ற எண்ணம் இருக்குமானால், இன்றைக்கு, தனிப்பட்டவருக்கு சொந்த நிலமாக இருந்தாலும் சரி, இனும் ஜாகாவாக இருந்தாலும் அது புறம் போக்கு நிலமாய் இருந்தாலும் சரி, கோயில் மான்யமாக இருந்தாலும் சரி அதில் வீடு கட்டிக்கொண்டிருக்கிறவர்களை அதிலிருந்து அப்புறப்படுத்தக் கூடாதென்று சட்டம் கொண்டுவந்திருக்கவேண்டும். உடனடியாக நிலச் சீர்திருத்தத்தைக் கொண்டுவந்து தரிசு நிலங்களை பட்டா செய்யக்கூடிய அளவு சர்க்கார் கொடுப்பதற்கு முன்வந்தால் உண்மையில் தாழ்த்தப்பட்ட மக்களுடைய பிரச்னையை நாம் தீர்த்தவர்கள் ஆவோம். அதுவும் அரசாங் கத்தார் இன்றைக்கு ஹரிஜன மக்களுக்காக வேண்டி ஹாஸ்டல்கள் திறப்ப தாக சொல்லப்படுகிறது. அதிலுங்கூட இன்றைக்கு காங்கிரஸ் கட்சியைப் பலப்படுத்திக்கொள்ளக்கூடிய தன்மையிலேதான் இது உபயோகப்படுத்தப் படுகிறது என்பதை இந்த நேரத்தில் பலமாக சொல்ல ஆசைப்படுகிறேன். எதற்காகச் சொல்கிறேன் என்றால், எங்கெல்லாம் ஹாஸ்டல் இருக்கிறதோ அங்கெல்லாம் காங்கிரஸ்காரர்களே மட்டிலும்தான் அந்தக் கமிட்டியில் போடப்படுகிறது. மற்றவர்களைப் போடுவதற்கு எதற்காக பயப்படுகிறார்களோ தெரியவில்லை. அந்த அளவு நிலைமையைப் பார்க்கும்போது நாம் எதைப் பார்க்கவேண்டியிருக்கிறது ? உண்மையிலேயே கட்சியை வளர்ப்பதற்கு அதைக் கருவியாக உபயோகப்படுத்துகிறார்கள். அதேபோல் தாழ்த்தப் பட்டவர்கள் பல இடங்களில் ஹாஸ்டலை வைத்து நடத்த முன்வந்தால், அந்த ஹாஸ்டலை உடனுக்குடன் அங்கீகாரம் செய்து அதற்காகப் பணம் ஒதுக்குவதில்லை. உதாரணமாகச் சொல்லவேண்டுமானால் இன்றைக்கு போளூர் தாலூகாவில் ஒரு ஊரில் 1953-ம் ஆண்டிலிருந்து ஹரிஜன அனாதை விடுதியை நவநீதஅம்மாள் என்பவர் நடத்திக்கொண்டுவருகி றார்கள். அதைத்தவிர, ஹையர் எலிமெண்டரி ஸ்கூல் ஒன்றையும் நடத்தி வருகிறார்கள். ஹையர் எலிமெண்டரி ஸ்கூலுக்கு மட்டும் கிராண்டு கொடுக் கப்படுகிறது. அனாதை விடுதி ஹாஸ்டலுக்கு இதுவரை பணம் ஒதுக்கப்பட வில்லை என்ற கம்ப்ளெயிண்ட்டை முந்தாநாள் தான் என்னிடம் வந்து சொன்னார்கள். "இம்மாதிரி கம்ப்ளெயிண்ட் இருந்தால், அதைப்பற்றி உடனுக்குடன் எழுதிக்கொடுங்கள். நாங்கள் உடனே தீர்த்துவிடுகிறோம்" என்று அமைச்சர்கள் சொல்லுகிறார்கள். அப்படி சொல்லியிருந்தாலும் அவ்வப்போது வரும் புகார்களையெல்லாம் நாம் அடிக்கடி அமைச்சர் களிடம் கொண்டுபோவதும், அவைகளையெல்லாம் அமைச்சர்களே தீர்க்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதும் தவறு என்பதை உணர்கிறோம். இருந்தாலும், கீழே இருக்கும் அதிகாரிகள் எந்த அளவுக்கு நடக்கிறார்கள் என்பதைப்பற்றி இங்கே எடுத்துச்சொல்லப்படுகிறது என்று சொன்னால், அவைகளைப்பற்றி உடனடியாக கவனிக்கவேண்டும். அதிலும் குறிப்பாக தாழ்த்தப்பட்ட மக்கள் கிராமப் புறங்களில் இருக்கக்கூடியவர்கள் இன்றைக்கு ஜாதி இந்துக்களால் கொடுமைப்படுத்தப்படுவது மட்டுமல்ல ; இன்றைக்குப் போலீஸ்காரர்களால் அதைவிட மிக மோசமாக கொடுமைப்படுத்தப்படு கிறார்கள். மூன்று மாதங்களுக்கு முன்னால் ஒரு தாழ்த்தப்பட்ட மாணவன் எதோ திருடி விட்டான் என்ற காரணத்திற்காக வேண்டி, "லாக்கப்பில்" வைத்து கொலை பண்ணியிருக்கிறார்கள். அதைப்பற்றி கேட்டால், லாக்கப்பில் இருக்கும்போதே தூக்குப் போட்டுக் கொண்டான் என்று சொல்லப் படுகிறது. இது சர்வசாதாரணமாகப் போய்விட்டது. ஒவ்வோரு போலீஸ் ஸ்டேஷனிலும் இம்மாதிரி லாக்கப்பில் வைப்பது என்பது சகஜம். அப்படி வைக்கப்பட்ட நபர் இறந்து விட்டால், எதோ பவுடர் சாப்பிட்டு இறந்து விட்டான் என்றோ, காக்காய் வலிப்பால் இறந்துவிட்டான் என்றோ,

24th March 1958] [Sri V. K. Kothandaraman]

தூக்குப் போட்டுக் கொண்டுவிட்டான் என்றே சொல்லப்படலாம். காக்காய் வலிப்பால் இறப்பவனும், தூக்குப் போட்டுக்கொண்டு இறக்கவேண்டு மென்று நினைப்பவனும் பவுடர் சாப்பிட்டு இறப்பவனும், இம்மாதிரி லாக்கப்பில் வைக்கப்பட டிருக்கும்போதுதானா சாகவேண்டும் ?

இந்த அளவுக்கு நிலைமை இருக்கிறதென்று சொன்னால் இதையெல்லாம் சர்க்கார் சொல்லக்கூடிய நேரத்தில் இப்படித்தான் சொல்வார்கள். ஆகை யால் நாங்கள் இதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ள முடியாது என்று சொல்லிக்கொண்டிருப்பதனால் நிலைமை மோசமாகப் போய்க் கொண்டிருக் கிறது. தாழ்த்தப்பட்ட மக்களை உண்மையில் காப்பாற்றவேண்டுமென்ற எண்ணம் இருக்கக்கூடியவர்கள் தாழ்த்தப்பட்டவர்களை எந்த முறையில் காப்பாற்றுவது ? அருந்ததியர்கள் என்று ஒரு சாதியார். மின்சாரம் வந்துவிட்டது. அவர்கள் தொழில் நசித்துவிட்டது. அவர்களுடைய நிலைமையை கவனித்தாகவேண்டும். ஆகவே எந்தப் புறம்போக்கு நிலமாக இருந்தாலும், தரிசு நிலமாக இருந்தாலும் அத்தனை நிலங்களையும் உடனடியாக தாழ்த்தப்பட்டவர்களுக்கு, பின் தங்கியவர்களுக்குக் கொடுத்து உதவவேண்டும். அப்படிச்செய்வதன் மூலமாகத்தான் பொருளாதாரத் துறையில் அவர்களை முன்னேற்றம் அடையச் செய்ய முடியும். இதை 1931-ம் ஆண்டு கராச்சி மகாநாட்டிலிருந்து சமீபத்தில் நடந்த அஸ்ஸாம் மகாநாடு வரையில் வற்புறுத்தி வந்திருக்கிறோம். உடனடியாக நிலச் சீர்திருத்தம் கொண்டுவருவதன் மூலமாகத்தான் அவர்களுடைய நிலைமையை முன்னேற்ற முடியும். இதைப்பற்றிக் கவனிக்காமல் இருப்பது பற்றி நான் மிகவும் வருத்தப்படுகிறேன். ஆகவே தாழ்த்தப்பட்ட மக்களின் நலனைக் குறித்து உடனடியாக நிலச்சீர்திருத்தச் சட்டத்தைக் கொண்டு வரவேண்டும் என்பதாக நான் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**MR. SPEAKER :** இன்னும் அநேக அங்கத்தினர்கள் இந்த மானியத்தில் பேசவேண்டுமென்று விரும்புவதன் காரணமாக நான் கட்சித்தலைவர்கள் எல்லோரையும் கலந்துகொண்டு இன்று காலை சபை 1 மணி வரையில் நடக்கவும், பிறகு பிற்பகல் 3 மணியில் இருந்து 5 மணி வரையில் நடக்கவும் ஏற்பாடு செய்துள்ளேன். கனம் கக்கன் அவர்களுக்கும் இதில் ஆட்சேபணை இருக்காது என்று நினைக்கிறேன். சபை அங்கத்தினர்கள் பிற்பகல் $3\frac{3}{4}$ மணி வரையில் பேசலாம். அப்புறம் இரண்டு எதிர்க்கட்சித் தலைவர்கள் பேசுவார்கள். அதற்குப் பிறகு மந்திரி பேசுவார். இப்போது ஸ்ரீ அருணாசலம் பேசவேண்டும் . . . ஸ்ரீ அருணாசலம் சபையில் இல்லை. கனம் அங்கத்தினர்களுக்கு ஒன்று சொல்ல விரும்புகிறேன். கட்சி கொரடா மூலமாகப் பெயர் கொடுத்தபின்னர் நான் கனம் அங்கத்தினரைக் கூப்பிடும் வரையில் ஆசனத்தில் அமர்ந்திருக்கவேண்டும். இரண்டு முறை ஸ்ரீ அருணா சலம் அவர்களைக் கூப்பிட்டுவிட்டேன். அவர் இல்லாத காரணத்தினால் அவரது சான்ஸ் போய்விட்டது. இனி இப்படியின்றி பெயர் கொடுத்த அங்கத்தினர்கள் பெயர் கூப்பிடும் வரையில் இடத்திலேயே இருக்க வேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன்.

* **SRI T. P. ELUMALAI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஹரிஜன முன்னேற்ற மானியத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல பிரியபடுகிறேன். ஹரிஜன மானியம் என்றாலே எல்லோரும் ஆதரிக்கக்கூடிய மானியமாகவும் எல்லோரும் வரவேற்கக்கூடிய மானியமாக அது இருக்கிறது. குறிப்பாக அதிகமான அங்கத்தினர்கள் இதில் கலந்து கொள்வதற்கு வாய்ப்பு அளிக்கவேண்டும் என்பதற்காக இந்த மானியத்திற்கு அதிக நேரம் ஒதுக்கியிருப்பது இந்த சட்ட சபையில் ஆதரவு இதற்கு இருக்கிறது என்பதைத் தெரியப்படுத்துகிறது. இருந்தாலும் அதேமுறையில் எதிர்க்கட்சியில் உள்ளவர்களிடமிருந்தும் வெளியிலிருந்தும் இந்த ஆதரவு வரவேண்டும். ஏனென்றால் இங்கே பேசிய பல அங்கத்தினர்கள் சட்டம் போதாது, காங்கிரஸ் கட்சி இந்தத் தாழ்த்தப்பட்ட மக்களுடைய முன்னேற்றத்திற்காகச் செய்கின்ற காரியங்கள் போதாது, தவிர செய்கிற காரியங்களும் அவர்களது கட்சியின் செல்வாக்கை அதிகப்படுத்திக் கொள்வதாகத்தான் இருக்கிறது என்பதாக வெல்லாம் பேசினார்கள். ஆனால் எத்தனை சட்டங்களைப் போட்டாலும் கூட

[Sri T. P. Elumalai] [24th March 1958

எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லாம் வெளியிலும் சர்க்கார் கட்சியுடன் ஒத்துழைத்தால்தான் ஹரிஜனங்களுடைய நிலைமை உண்மையிலேயே முன்னேற்றம் அடையும் என்று நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

ஐந்தாண்டுத் திட்டங்கள் வந்தன. தேசீய அபிவ்ருத்தித் திட்டங்கள் போடப்பட்டது. அந்தத் திட்டங்களிலும் ஹரிஜனங்களுக்கு முதல் சலுகை அளிக்கப்பட்டது. ஆனால் வெளியில் எதிர்க்கட்சிக்காரர்கள் ஹரிஜனங்களுக்கு என்று சில வேலைகளைச் செய்யும்போது எங்களுடன் ஒத்துழைக்காமல் நல்ல காரியங்களுக்கு முட்டுக்கட்டை போடுவதும், நடந்த காரியங்கள் பயனளிக்காமல் போகும்படியாகச் செய்வதுமான செயல்களில் தான் ஈடுபட்டார்கள் என்பது எனக்குத் தெரியும்.

குறிப்பாக ஹரிஜனச் சேரியில் விளக்கு போடவேண்டும் என்பதுதான் எல்லோருடைய அவாவும். ஆனால் அந்த வசதியை செய்து கொடுக்க முன்வரும்போது எதிர்க்கட்சியில் சிலர் முட்டுக்கட்டை போட்டார்கள். ஒத்துழைக்கவில்லை என்று குறிப்பாகச் சொல்ல முடியும். கொடுங்கையூர், மேலூர் சேரியில் மின்சார விளக்கு போடவேண்டும் என்பதாக கோரப்பட்டது. அவ்வாறே விளக்குகளும் போடப்பட்டது. ஆனால் காங்கிரஸ்காரர்கள் இந்த வேலையில் முன்னணியில் இருந்தார்கள் என்பதற்காக அந்த விளக்குகள் தொடர்ந்து எரிவதற்கு வாய்ப்பு இல்லாமல் எதிர்க்கட்சிக்காரர்கள் தங்கள் உதவியை அளிக்க முன்வராதுவிட்டார்கள். அதனால் இரண்டு மாதம் கஷ்டப்பட்டு காங்கிரஸ்காரர்கள் செலவுகளை ஒப்புக் கொண்டும், தொடர்ந்து உதவி அளிக்க முடியாத காரணத்தினால் இன்று விளக்குகள் எரியவில்லை. இவையெல்லாம் எதிர்க்கட்சித் தலைவர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ. ஆனால் ஒன்று சொல்வேன். வெளியிலும் ஹரிஜனங்களுடைய முன்னேற்றத்திற்கு அவரவர்களுடைய கட்சி ஊழியர்கள் பரிபூரண ஒத்துழைப்பையும், உதவியையும் அளிக்கவேண்டும் என்பதாக எதிர்க்கட்சித் தலைவர்கள் கேட்டுக்கொள்ளவேண்டும். அப்படிச் செய்தால்தான் உண்மையிலேயே ஹரிஜனங்கள் முன்னேற்றம் அடைவார்கள். அது இல்லாமல் அக்கட்சித் தலைவர்கள் தாழ்த்தப்பட்டவர்களுடைய முன்னேற்றத்தைப்பற்றி சபையில் பேசுவதும் வெளியில் பேசுவதும் பேச்சளவில்தான் மக்களுக்குப் பயன்படும். ஆகவே இவ்விஷயத்தில் அவர்களுடைய கட்சிகாரர்கள் எல்லாம் செயலிலும் ஒத்துழைப்பைக் கொடுக்கவேண்டும் என்பதாகச் சொல்லவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இன்றைக்கு விளக்கு வசதியை எடுத்துக் கொண்டாலும் ரோடு வசதியை எடுத்துக் கொண்டாலும், பள்ளிக்கூட வசதியை எடுத்துக் கொண்டாலும் முட்டுக்கட்டை போடும் மனப்பான்மையை விட்டொழிக்க வேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். அப்போதுதான் இருக்கக் கூடிய சட்டங்கள் ஹரிஜன மக்களுடைய முன்னேற்றத்திற்கு அதிகப்பயன் படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்போதுள்ள சட்டத்தில் சில முரண்பாடுகள் உள்ளன. நடைமுறையில் சில சிக்கல்கள் ஏற்படலாம். ஹரிஜன வெல்பேர் ஆபீசிலும் சில கோளாறுகள் இருக்கலாம். ஆனால் அந்தக் கோளாறுகளை எல்லாம் எப்படி நீக்கவேண்டும் என்பதை நாம் நன்றாக யோசித்துப் பார்க்கவேண்டும். இன்று அநேக வாரப்பத்திரிகைகள் இருக்கின்றன. தினசரிப் பத்திரிகைகள் இருக்கின்றன. அதிகாரிகளிடம் சென்று இந்தக் காரியத்தைச் செய்கிறீர்களா அல்லது உங்களைப்பற்றி கண்டித்து பத்திரிகையில் எழுதித்தள்ளட்டுமா என்று பயமுறுத்துவதைப் பார்க்கிறோம். குறிப்பாக நம் அங்கத்தினர்கள் அதிகாரிகளிடமும் குமாஸ்தாக்களிடமும், சென்று இந்தக் காரியத்தை நீங்கள் செய்யாவிட்டால் நான் சட்டசபையில் கேள்வியைப் போடுவேன், வெட்டுப் பிரேரணை கொண்டுவந்து கண்டித்து பேசுவேன் என்பதாக வெல்லாம் பயமுறுத்தி கலாட்டா செய்வது காரியங்களுக்குப் பெரிய அளவில் முட்டுக்கட்டை போடுவதாகத்தான் அமையும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

Sri T. S. RAMASWAMY PILLAI : On a point of order, Sir. The hon. Member is making allegations against some of the hon. Members of this House.

24th March 1958]

MR. SPEAKER : He has not made any specific charges against anybody.

SRI T. S. RAMASWAMY PILLAI : He said that some hon. Members intimidated the officers of the Harijan Department by saying that irregularities in the office would be brought to the notice of the Government by means of cut motions, etc., unless they appoint persons recommended by them. I would request you to rule the statement out of order or to see that the Member substantiates it.

MR. SPEAKER : இதற்கு கனம் அங்கத்தினர் என்ன பதில் சொல்கிறார் ?

SRI T. P. ELUMALAI : கனம் சபாநாயகர் அவர்களே, இங்கே ஒரு வெட்டுப் பிரேரணை கொடுத்திருப்பதைப் பார்த்தேன். அதற்கு முன்னால் சம்பந்தப்பட்ட அந்த மெம்பரைச் சார்ந்த மாணவன் அதிகாரியிடத்தில் சென்று உதவி அளிக்காவிட்டால் என் எம். எல். எ.ஐ அழைத்துக் கொண்டுவருவேன் என்று சொன்னதாகவும். பிறகு அப்படியே காரியாலயத்திற்கு மெம்பரை அழைத்துச் சென்று அங்கே ரகளையை உண்டுபண்ணியதாகவும் கேள்விப்பட்டேன். இதைக்குறித்து சொல்லாமல் அதை நினைத்துத்தான் பொதுப்படையாகப் பேசினேன்.

MR. SPEAKER : எதுவாக இருந்தாலும் சபையில் அங்கத்தினரைக் குறைகூறக்கூடாது.

SRI T. P. ELUMALAI : நான் உள்ளதைச் சொன்னேன். குறைகூறும் வகையில், அவமானப்படுத்தும் வகையில் எதுவும் சொல்லவில்லை. வேறு கட்சிகள் இந்த நாட்டை ஆள வேண்டுமென்ற கிளர்ச்சியில் காங்கிரஸ் கட்சிக்கு விரோதமாக சில ஹரிஜனங்களை அதிகமாக உபயோகப் படுத்தி வருகின்றார்கள். இதனால் ஒன்றும் தெரியாத ஒரு சிலர் வீணாக பயன் படுவதை நான் பார்க்கிறேன். இதனால் மேலும் பத்து வருஷங்களுக்கு ஹரிஜனங்களுக்கு சலுகை கொடுக்க வேண்டுமென்றிருக்கும் ஆலோசனைக்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டு விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். ஹரிஜன முன்னேற்றத்திற்கான வேலைகள் நடந்து வருகிறது. அந்த வேலைகள் தொடர்ந்து நடைபெற்று ஹரிஜனங்கள் பூர்ண முன்னேற்றம் அடைய மேலும் ஒரு பத்து வருஷங்களுக்காவது இப்பொழுதுள்ள சலுகைகளை ஸ்திரப்படுத்தவேண்டுமென்று நான் இந்த சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். அமைச்சர் அவர்களும் இது குறித்து மத்திய சர்க்காருக்கு வேண்டிய ஆலோசனைகள் கூறி இன்னும் பத்து வருஷங்களாவது இப்பொழுதுள்ள சலுகைகளை நீடிக்கவேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன். ஹரிஜனங்களுக்காக மாடுகள் வாங்கிக் கொடுக்கிறார்கள். வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்கள். மாஜி குற்றப்பரம்பரையினருக்கும் வீடுகள் கட்டிக் கொடுக்கிறார்கள். எருமை மாடுகள் எல்லாம் வாங்கிக் கொடுக்கிறார்கள். அதைப்பற்றியெல்லாம் விரிவாகச் சொல்ல எனக்கு நேரமில்லை. உதாரணமாக சிலவற்றை சொல்லிவிட்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். மாடு வாங்குவதில் பல இடஞ்சல்கள் இருக்கின்றன. மர்டுகளை சந்தையில் இருந்து வாங்கித்தான் கொடுக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். ஜில்லா அபிவிருத்தி ஆபீஸர்கள் சந்தைக்குப் போனால் அங்கு மறைமுகமாக தரகர்கள் பேசுவதை நாம் பார்க்கிறோம். ஒரு மாட்டிற்கு 50 ரூபாய் என்றிருந்தால் 75 ரூபாய் என்று சொல்லி வாங்கி, அந்த மீதி 25 ரூபாயை தரகர்கள் எடுத்துக்கொள்ளுகின்றார்கள். ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், தலைமை அதிகாரியை நம்பி பணத்தைக் கொடுக்க வேண்டும். ஆனால் உத்தியோகஸ்தர்கள், ஏழைகளின் ரூபாயில் கை வைப்பார்களேயானால் அவர்களை சட்டப்படி ஜெயிலுக்குள் தள்ளிவிட வேண்டும். இதில் சர்க்கார் கண்டிப்பாக இருந்தால் ஹரிஜன முன்னேற்றம் நல்ல முறையில் நடக்கும் என்று மான்யத்தை ஆதரிக்கின்றேன். (இச்சமயத்தில் கனம் சபாநாயகர் அடுத்த அங்கத்தினரை பேசுமாறு அழைத்தார்).

[24th March 1958

**Sri A. PERUMAL :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது இங்கு கொண்டு வரப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஹரிஜன மக்களின் நலனுக்காக நமது சர்க்கார் அக்கரை காட்டுகிறது என்று சொல்லப்படுகிறது. அது ஓரளவு உண்மை தான். ஆனால் வாயள வில்தான் அக்கரை காட்டுகிறது என்றுதான் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். காரணம், ஹரிஜனங்களுக்காக கொடுக்கப்படும் தொகை கள், தாற்காலிக கடன்கள், புயலால் பாதிக்கப்பட்ட ஹரிஜனங்களுக்கு கொடுக்கப்பட்ட புயல் லோன், இவைகளெல்லாம் நல்ல முறையில் அம் மக்களுக்கு கொடுத்து உதவவில்லை. ஹரிஜனங்களுக்காக நாங்கள் எவ்வ ளவோ செய்கிறோம். அவர்களுக்கு எவ்வளவோ சலுகைகள் காட்டு கிறோம், அவர்கள் நல்ல முறையில் வாழ்வதற்கு நாங்கள் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கிறோம் என்றெல்லாம் சர்க்கார் சொல்லுகிறார்கள், ஆனால் அவைகளெல்லாம் ஓரளவு உண்மையல்ல என்று தான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக, என் தொகுதியில், அதாவது முதுகுளத்தூரில் நடந்த கலவரங்களைப் பற்றி எனக்கு இங்கு எடுத்துச் சொல்ல சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. ஆகவே இப்பொழுது அதைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறலாமென்று நான் நினைக்கிறேன்.

**Mr. SPEAKER :** ஹரிஜன மான்யம் சம்பந்தமாக உள்ளதைத் தான் இங்கு சொல்லலாம். சம்பந்தம் இல்லாததைப்பற்றி சொல்லக்கூடாது.

**Sri A. PERUMAL :** நம் சர்க்கார் ஹரிஜனங்களுக்காக எவ்வளவோ பாடுபட்டிருக்கிறோம், ஹரிஜனங்களுக்காக நாங்கள் எவ்வளவோ கஷ்டப்படுகிறோம் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். அது உண்மையல்ல. காரணம் எங்கள் தொகுதியில் எலெக்ஷன் நடந்த போது அங்குள்ள மக்கள் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கிறார்கள். அங்குள்ள மக்கள் பட்ட கஷ்டங்களைப் பற்றி இப்பொழுது சர்க்காருக்கும், இங்குள்ள அங்கத்தினர்களுக்கும் தெரியும். நம் நாடு சுதந்திரம் பெற்று பத்து வருஷங்களாகிறது. இந்த பத்து வருஷத்தில் முதுகுளத் தூரில் எத்தனையோ தடவை எலெக்ஷன் நடந்திருக்கிறது. அவைகளில் முத்துராமலிங்கத் தேவர் அவர்களோ அல்லது அவரது கட்சியோ தவிர வேறு யாரும் வெற்றி பெற்றதில்லை. அதற்காகத் தான் சர்க்கார் இப்பொழுது அங்குள்ள மக்களை கஷ்டப்படுத்துகிறார்கள். எங்கள் தாலூகாவான முதுகுளத்தூரில் ஹரிஜனங்களும், ஜாதி ஹிந்துக்களும் எவ்வளவோ ஒற்றுமையாகத்தான் வாழ்ந்து வந்தார்கள். ஆனால் இப்பொழுது ஜாதி ஹிந்துக்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் இடையே சிறிது பகை உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. அதற்குக் காரணம் காங்கிரஸ் சர்க்கார் தான். ஆனால் நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். நம் அரசாங்கம் எவ்வளவு முயற்சி செய்தாலும் முதுகுளத்தூரில் முத்து ராமலிங்கத் தேவர் அவர்களின் செல்வாக்கை யாராலும் குறைக்க முடியாது. அப்படி மிகவும் செல்வாக்குள்ள ஒருவரிடம் நம் சர்க்கார் இப்பொழுது நடந்து கொள்ளும் விதம் மிகவும் மோசமாகத் தான் இருக்கிறது. அடுத்தபடியாக, ஹரிஜனங்களுக்காக நாங்கள் எவ்வளவோ உதவி செய்கிறோம், அவர்களுக்காக நாங்கள் வீடுகள் கட்டிக் கொடுக் கிறோம், அவர்களுக்கு மாடு வாங்கிக் கொடுக்கிறோம், அவர்களுக்கு நாங்கள் கடன் உதவி அளிக்கிறோம், இப்படியெல்லாம் நாங்கள் செய்தும் கூட நீங்கள் சர்க்காரை குறை கூறுகிறீர்களே என்று சர்க்கார் கேட்கலாம். நானும் ஒரு ஹரிஜன அங்கத்தினர் தான். எங்கள் தொகுதியில் ரொம்ப அநீதிகள் நடக்கின்றன. என் சொந்தக் கிராமத்தில் ஒரு விவசாயிக்கு, ப்ளாக் டெவலப்மெண்டில் இருந்து 500 ரூபாய் கொடுத்தார்கள், புயலால் பாதிக்கப்பட்ட கிணற்றை திரும்பத் தோண்டுவதற்காக. அந்த 500 ரூபாயை வாங்க 100 ரூபாய் செலவு செய்ய வேண்டி வந்தது. அதை வாங்கும்போது, சர்க்காரின் ஆறும் நம்பர் பாரத்தில் பத்து வருடத் தவணை என்று போட்டிருந்தது. ஆனால் அடுத்த வருடத்தில் அதை ஒரே வருடத்தில் கட்டும்படி அதிகாரிகள் கேட்டார்கள். அதற்கு முன்னால் கொடுக்கும்பொழுது ஒரு வருஷத்தில் திருப்பி கொடுக்கவேண்டும் என்று சொன்னால் என்ன?

24th March 1958] [Sri A. Perumal]

பத்து வருடத்திற்கு தவணை என்று கடன் கொடுத்துவிட்டு ஒரே வருடத்தில் திரும்ப கொடுக்கவேண்டும் என்று சொல்வதைப் பார்த்து நான் வருந்துகிறேன். அடுத்தபடியாக ஹரிஜன மாணவர்களுக்கு இலவசமாக ஹாஸ்டல் நடத்தப்பட்டு வருகிறது. சில இடங்களில் இவர்களுக்கு கொடுக்கப்படுகிற பணத்தை சரியானபடி மாணவர்களுக்கு கொடுப்பதில்லை. இதை நான் என் சொல்கிறேன் என்றால், குறிப்பாக கமுதியில் ஒரு ஹரிஜன ஹாஸ்டல் இருக்கிறது. அங்கு 67 மாணவர்கள் படிக்கிறார்கள். அந்த மாணவர்களிடமிருந்து அங்குள்ள ஹாஸ்டல் செக்ரடரி 50 ரூபாய் வீதம் முதலாவது வாங்கிக்கொண்டு சர்க்கார் பணம் வந்த பிறகு திரும்பத் தந்து விடுகிறோம் என்று சொல்லி வாங்குகிறார்கள். ஆனால் இவ்விதம் வாங்கி ஐந்தாறு வருடங்கள் ஆகியும் இதுவரை அந்தப் பணத்தை திரும்பக் கொடுக்கவில்லை. இப்படியாக அந்த செக்ரடரி பணத்தை சேகரித்து பெரிய பணக்காரராகிவிட்டார். இதை சர்க்கார் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக அதே தொகுதியில் கமுதியில், வெள்ளைபுரம் ஊரில் ஒரு ஹரிஜன காலனி கட்டினார்கள். ஏறக்குறைய நூறு வீடுகள் கட்டினார்கள். அந்த வீடுகளில் இரண்டு மூன்று மாதங்களில் 50 வீடுகளை கட்டி விட்டார்கள். அந்த வீடுகளை கட்டுவதற்கு விறகுகளை வைத்து காளவாசல் வைக்காமல் புல் பூண்டுகளை வைத்து செங்கல்களைச் சுட்டார்கள். அந்த செங்கல்களை அந்த இடத்திலிருந்து வீடுகள் கட்டக்கூடிய இடத்திற்கு கொண்டு சேர்ப்பதற்கு முன்பாகவே பாதி செங்கல்கள் உடைந்து போய் விட்டது. அந்த நொறுங்கி போன செங்கலை வைத்து வீடும் கட்டி விட்டார்கள். வெறும் மண்ணையும் சேர்த்து சாந்தாக வைத்து கட்டி விட்டார்கள். அதே மாதிரி தான் பனம்பட்டியல்களை வாங்கி, தார் அடித்து கருப்பாக்கி அதை மேல் கூறைகளுக்கு உபயோகித்துக்கொண்டார்கள். ஓட்டின் விலை 250 ரூபாய் விலையாக இருக்கும்பொழுது ஏதோ 35 ரூபாய் விலையில் ஓட்டை வாங்கி வந்து போட்டார்கள். ஒரு நாள் நான் கமுதியிலிருந்து ஊருக்கு வரும்போது அந்த வீட்டில் மழைக்கு ஒதுங்கி யிருந்தேன். நான் அங்கு தங்கி யிருக்கும்பொழுதே மளமளவென்று மேலேயிருந்து தண்ணீர் இறங்கியது. இந்த மாதிரி சர்க்கார் கொடுக்கும் மான்யத்தை செலவு செய்கிறார்கள். இதை மாற்றி ஒழுங்கான முறையில் செலவு செய்ய ஏற்பாடு செய்யவேண்டும். சரியான முறையில் செலவு செய்யாத அதிகாரிகளை தண்டிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனது சிற்றுரையை முடித்து கொள்கிறேன்.

* Sri P. G. MANICKAM : மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, இந்த மான்யத்தை ஆதரித்து சில சங்கதிகள் சொல்ல விரும்புகிறேன். சர்க்கார் கட்சி அங்கத்தினர்களாகிய நாங்கள் பேசும் பொழுது கவர்ன்மெண்டை குறை கூறி பேசுகிறோம் என்று ஒரு சில அங்கத்தினர்கள் தெரிவித்தார்கள். அது தவறு என்று சொல்ல விரும்புகிறேன். காரணம் இந்த பக்கத்திலுள்ள நாங்கள் சொல்லுவது குறைகளை எடுத்துச் சொல்லுவதற்காக அல்ல. இந்த மான்யத்தை இந்த வருஷ காலத்திலேயே செலவு செய்யப்பட வேண்டும். அதற்காக இன்னின்ன காரியங்களை செய்யவேண்டும் என்று கூறி, இன்னின்ன காரியங்களை எடுத்துக் கொள்ள வேண்டும் என்கிற முறையில் எங்கள் காரியங்களைச் சொல்லுகிறோமே தவிர குறை கூறுவதற்காக அல்ல என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். நான் எங்கள் தொகுதியை பொறுத்த வரை ஒன்றிரண்டு விஷயங்களை எடுத்துக் கூற விரும்புகிறேன். அதிலும் முக்கியமாக ஒரு விஷயத்தை கவர்ன்மெண்டாருடைய பார்வைக்கு கொண்டு வர விரும்புகிறேன். வீடுகள் கட்டிக்கொள்வதற்கு வீடு மனை கொடுக்கிற விஷயத்தைப் பற்றி மத்திய சர்க்கார் உள்நாட்டு மந்திரி பந்த் அவர்கள், பிப்ரவரி மாதத்தில் நடந்த ராஜ்ய பிற்பட்ட வகுப்பினர் மந்திரிகள் மகாநாட்டில் சொன்னார், ஒவ்வொரு ஹரிஜன குடும்பத்திற்கும் சொந்தமாக ஜாகை வைத்துக்கொள்வதற்கு நிலம் இருக்கவேண்டும். அப்போதுதான் சொந்த வீடு கட்டி சுதந்திரமாக இருக்க முடியும், என்று சொன்னார். இதையே தான் ஹரிஜனங்களாகிய நாங்கள் கவர்ன்மெண்டாருக்கு முக்கியமாக சொல்ல விரும்புகிறோம். அந்த மகாநாட்டில் ஆந்திராவிலிருந்து வந்த மந்திரி அவர்கள் பேசும்பொழுது அவர் குறிப்பிட்டிருக்கிறார், ஆந்திர

[Sri P. G. Manickam] [24th March 1958

தேசத்தில் 6 லட்ச ஹரிஜன மக்களுக்கு வீடுகள் தேவையாகயிருக்கிறது. இதற்கு மத்திய சர்க்காரிலிருந்து வருடா வருடம் 6 லட்ச ரூபாய் தான் ஒதுக்கியிருக்கிறார்கள். இந்த முறையில் எல்லா ஹரிஜனங்களுக்கும் வீடு மனை வாங்க வேண்டுமென்றால் 100 வருஷங்கள் ஆகும், இதனால் காரியம் நடைபெறாது என்று அவர் தெரிவித்திருக்கிறார். இதை சர்க்காருடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். சென்ற ஐந்தாண்டு திட்டத்திலும் நமது சென்னை மாகாணத்திற்கு ஒரு குறிப்பு எடுக்கப்பட்டது. அதில் ஐந்து லட்சம் வீடுகள் கட்டப்பட வேண்டும் என்று இருந்தது. அதற்காக வேண்டிய தொகை ஒதுக்க வேண்டும் என்றும் புள்ளி விவரங்கள் இருக்கிறது. இதிலும் உள்நாட்டு மந்திரி அவர்கள் சொல்லியிருப்பதை நாம் கவனிக்கவேண்டும். அதாவது இதற்கென்று ஒதுக்கப்படும் பணத்தை நல்ல வழியில் அந்தந்த வருடத்திலேயே செலவு செய்தால்தான் மேலும் அதிகத் தொகை பெறலாம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். மேலும் எல்லா ராஜ்ய சர்க்கார்களுக்கும் மத்திய சர்க்கார் ஒரு அறிக்கை அனுப்பியிருக்கிறது. அதாவது முக்கியமாக ஹரிஜனங்களுக்கு வீட்டு மனைகள் கொடுக்கும் விஷயமாக ஒரு குறிப்பு எடுத்து அனுப்பினால் அதைப்பற்றி நாங்கள் கவனிக்கிறோம் என்று மத்திய அரசாங்கம் எல்லா ராஜ்ய அரசாங்கங்களுக்கும் அறிக்கை அனுப்பியிருக்கிறது. ஆகவே நமது சர்க்கார் இந்த வீட்டு மனைகள் விஷயமாக வேண்டிய தகவல்களை மத்திய சர்க்காருக்கு தெரியப்படுத்த வேண்டும். எப்படியாவது இந்த ஆண்டுக்கு ஒரு கோடி ரூபாயாவது மத்தியசர்க்காரிடமிருந்து பெறுவதற்கு இந்த ராஜ்ய சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய பிர்க்காவில் இந்த வீட்டு மனைகள் விஷயமாக, குறிப்பாக பவானி தாலூகாவில் இருக்கிற 60 சேரிகளும் ஜாதி இந்துக்களுடைய பெயரில் தான் பட்டா இருந்து கொண்டு வருகிறது. இந்த சேரியும் பத்து இருபது வருஷமாக இருந்து கொண்டு வருகிறது. இந்த சேரிகள் ஜாதி இந்துக்களுடைய பெயரில் பட்டா இருந்து வருவதினால் இவர்கள் அடிமை போன்று வாழ வேண்டியிருக்கிறது. இதை மாற்றுவதற்கு கவர்ன்மெண்டார் வேண்டிய முயற்சியும் எடுத்து வருகிறார்கள். இதை மாற்றி இவர்கள் பேரில் ஆர்ஜிதம் செய்து கொடுப்பதற்கு ஹரிஜன நல இலாகா மந்திரி அவர்கள் பெரு முயற்சி எடுத்து வருகிறார்கள் என்பதை நாங்கள் அறிவோம். இருந்தாலும் இதை உடனடியாக கவனத்தில் எடுத்துக்கொண்டால் மிக நலமாக இருக்கும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் மேட்டூர் வாய்க்கால் பாசன ஏரியாவில் 19 சேரிகள் நீர்க்கசிவினால் பாதிக்கப்பட்டு இருக்கின்றன. இதைப் பற்றி மந்திரி அவர்களிடம் ஒரு அறிக்கையும் கொடுத்திருக்கிறோம். 8 சேரிகளிலே குறைந்தது 494 வீடுகள் சேதமுற்று இருக்கின்றன. அவர்களுக்கு 38 ஏகர் 68 செண்ட் நிலம் தேவை. 100 ரூபாய் "ஸப்சிடி" கொடுக்கவேண்டிய அளவிலே 49,400 தேவைப்படும் என்று புள்ளி விவரங்களை கொண்டு ஒரு அறிக்கையைக் கூட கனம் மந்திரி அவர்களிடத்தில் கொடுத்திருக்கிறோம். அதன் மேல் தக்க நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்று நினைக்கிறேன்.

வருங்காலத்திலே கிராம பஞ்சாயத்து போர்டுகள்தான் ராம ராஜ்யத்திற்கு அடிகோலாக இருக்கப்போகின்றன. இனி மேல் கிராம பஞ்சாயத்து போர்டுகள், பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாகத் தான் எல்லா வேலைகளும் நடக்கப் போகின்றன. கிராம பஞ்சாயத்துக்களிலும், ஸ்தல ஸ்தாபனங்களிலும், ஷெட்யூல்டு வகுப்பினருக்கும், ஷெட்யூல்டு மலை ஜாதியினருக்கும், ஜனத்தொகை அடிப்படையிலே ஸ்தானங்கள் ஒதுக்கப்படவேண்டுமென்று, மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஷெட்யூல்டு வகுப்புகளின் கமிஷனர் சொல்லியிருக்கிறார். இது நாம் மிகவும் கவனிக்கவேண்டிய விஷயம். இப்பொழுது எந்த முறையில் ஸ்தானங்கள் ஒதுக்கப்படுகின்றன என்றால், மொத்தம் 12 பேர்கள் இருந்தால், அதிலே பிச்சை கொடுப்பது போல ஒரு ஹரிஜன் இருப்பார். இதற்காக மத்திய சர்க்காரால் ஏற்படுத்தப்பட்ட கமிஷனர், ஜனத்தொகை விகிதாசாரப்படி ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டுமென்று சொல்லுகிறார். இனிமேல் கிராம பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன்கள் தான் எல்லா வேலைகளையும் கவனிக்கப்போவதால், ஜனத் தொகை அடிப்படையிலே ஸ்தானங்களை ஒதுக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

24th March 1958] [Sri P. G. Manickam]

நான் காங்கிரஸ் கட்சியை மட்டுமில்லாமல் எல்லாக் கட்சிக்காரர்களையும் ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். கலப்பு மணம் அத்தியாவசியம் என்று காங்கிரஸ் கட்சிக்காரர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்கள், மற்றும் எல்லாக் கட்சிக்காரர்களும் ஒத்துக்கொள்ளுகிறார்கள். எல்லோரும் அதை ஆதரிக்கிறார்கள். அப்படி கலப்பு மணம் செய்துகொள்ள எந்த ஜாதி ஹிந்துக்கள் முன் வருகிறார்களோ, அவர்களுக்கு சர்க்கார் ஒரு போனஸ் கொடுக்க வேண்டும். மேலும் உத்தியோக உயர்வும் கொடுக்கப்படும் என்று அறிவிக்கவேண்டும். அவர்களுடைய வாழ்க்கையை உயர்த்த என்னன்ன தேவையோ அதையெல்லாம் செய்து கொடுக்க பட்ஜெட்டில் பணம் ஒதுக்கி, அதற்காக ஒரு சட்டத்தையும் இயற்றும்படியாக சர்க்காரை மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது நம்முடைய ராஜ்ய சர்க்காருடைய முயற்சிகளினால், ஹரிஜனங்களில் அநேகம் பேர் படித்தவர்கள் இருக்கிறார்கள். எட்டாவது வகுப்பு வரையிலும் படித்தவர்கள் இருக்கிறார்கள். எஸ். எஸ். எல். ஸி. வரையிலும் படித்தவர்கள் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் எல்லோரும் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, பியூன் வேலையிலிருந்து என். ஜி. ஓ. உத்தியோகஸ்தர்கள் வரைக்கும் எத்தனை ஸ்தானங்கள் காலி ஆகிறதோ அவைகளில் 100 க்கு 50 சத விகிதம் ஹரிஜனங்களுக்கு என தனியாக ஒதுக்கப்பட்டு வேலை கொடுக்கப்பட்டால், அவர்கள் பொருளாதாரத் துறையில் முன்னேற முடியும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதே போன்று கல்வித் துறையிலும் முன்னேறவேண்டும். ஆரம்பக் கல்வியை எடுத்துக் கொண்டால், இப்பொழுது இருக்கிற மாணவர்களிலே அதாவது 6 வயது முதல் 14 வயது உள்ளவர்களிலே, படிக்காதவர்கள் குறைந்த பட்சம் 100-க்கு 90 பேர்கள் ஹரிஜனங்களிடையே இருப்பார்கள் என்பது புள்ளி விவரம் எடுத்துப் பார்த்தால் தெரிய வரும். ஆகவே படிப்பதற்குறிய வசதிகளை கல்வி இலாகா மூலமாகவும், ஹரிஜன வெல்பேர் பண்டில் ஒதுக்கப்படுகிற தொகையிலிருந்தும் செலவழிக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். ஹரிஜன வெல்பேர் பண்டில் மத்தியான உணவுக்காக ஒதுக்கப்படும் தொகையில் பெரும் பகுதி செலவழிக்கப்படாமல் இருப்பதாகத் தெரிய வருகிறது. ஆனால் இது எவ்வளவு தூரம் உண்மை என்பதற்கு புள்ளி விவரம் இல்லை. அப்படி செலவழிக்காமல் பணம் இருக்குமேயானால், அதை எலிமென்டரி ஸ்கூல்களிலே படிக்கும் மாணவர்களுக்கு மத்தியான சாப்பாட்டிற்காக ஒதுக்கினால் நல்லது. காரணம் என்னவென்றால், இப்பொழுது மத்தியானச் சாப்பாடு ஒரு சில இடங்களில் தான் போடப்படுகிறது. எந்தெந்த இடங்களில் ஜாதி ஹிந்துக்கள் பணம் கொடுக்க முன் வருகிறார்களோ அந்த இடங்களில் மத்தியான சாப்பாட்டிற்காக ஒதுக்கப்படும் தொகையையும் சேர்த்து, மாணவர்களுக்கு மத்தியான சாப்பாடு போடப்பட்டு வருகிறது. இந்த ஹரிஜன வெல்பேர் பண்டில் ஏதாவது தொகை மீதி இருந்தால் அதை ஹரிஜன மாணவர்கள் எங்கெங்கு படிக்கிறார்களோ அங்கே யெல்லாம் அவர்களுக்கு மத்தியான சாப்பாடு அளிப்பதற்காக ஒரு சிறு பகுதியை ஒதுக்கினால் நல்லது என்று தெரிவித்துக்கொள்கிறேன். அப்படிச் செய்தால் ஆரம்பக் கல்வித் துறையிலும் ஹரிஜனங்கள் முன்னுக்கு வர முடியும்.

அடுத்தபடியாக, ஹரிஜனங்களில் "அருந்ததியினர்" என்ற ஒரு பகுதியினர் இருக்கிறார்கள். அவர்கள் இன்றைய நிலையில் மிகவும் பிற்போக்கு ஜாதியினராக இருக்கிறார்கள். அவர்களுடைய முன்னேற்றத்திற்காக சர்க்கார் எத்தனையோ காரியங்களைச் செய்து வருகிறார்கள். குறிப்பாக தோல் சம்பந்தமான தொழில்களை **(Leather Industries)** விருத்தி செய்வதற்கு சர்க்கார் பலவிதமான வழிகளைக் கையாண்டு வருகிறார்கள். இந்த அருந்ததியினருடைய தொழிலும் அதுவே, அவர்களுக்கு தொழில் செய்ய வேண்டிய வசதிகளைக் கொடுக்க வேண்டும். உண்மையாகவே இந்த அருந்ததி வகுப்பினர் மற்ற ஆதித் திராவிடர் நிலைக்கு உயரும்போது தான், மகாத்மா காந்தியடிகள் சொன்னது போல். சுயராஜ்யத்தின் பலனை நாம் காண முடியும். இவர்களின் முன்னேற்றத்திற்காக வேண்டிய தொகையை பட்ஜெட்டில் ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

[24th March 1958

*SRI M. C. MUTHUKUMARASWAMY: கனம் சபைத் தலைவர் அவர்களே, இன்று சபை முன்பு வைக்கப்பட்டிருக்கும் இந்த ஹரிஜன மான்யத்தை முழு மனதுடன் ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். ஹரிஜன முன்னேற்றத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் தொகையானது கடந்த ஆண்டுகளிலே இருந்ததை விட அதிகமாகவே இருக்கிறது என்று சொல்வது மிகையாகாது. அதுவும் குறிப்பாக எங்கள் மதிப்பிற்குறிய அமைச்சர் பெருமான் இருக்கும்பொழுது அதிகமாக இருக்கிறது என்பதை நினைக்கும்பொழுது நான் உண்மையிலே மகிழ்ச்சி அடைகிறேன். இதோடு நில்லாது, இன்னும் கோடிக்கணக்கான ரூபாய்களை அவர்கள் பெறுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. ஏனென்றால் முன்னிருந்த அமைச்சர்கள் ஏறக்குறைய நகரவாசிகளாக இருந்ததால் மக்களுடைய குறைபாடுகளை அவ்வளவு தூரம் கவனித்தார்கள் என்று சொல்ல எனக்குத் தைரியம் வரவில்லை. ஆனால் எங்கள் மதிப்பிற்குறிய ஹரிஜன அமைச்சர் குடிசையிலேயே வாழ்ந்து, ஹரிஜன மக்களுடைய நிலைமையை உணர்ந்திருப்பதனால், அவர்களுக்காக ஒதுக்கப் பட்டிருக்கும் மான்யத் தொகை "போதாது, போதாது" என்று சொல்லி அதிகமாக வாங்கி விடுவார்கள். இந்த மான்யத்தில் ஹரிஜன மாணவர்கள் படிப்பதற்கும், அவர்களுக்கு உணவு அளிப்பதற்கும், இன்னும் ஹரிஜன மக்களுக்கு வீடுகள் கட்டுவதற்கும் தான் அதிகமான பணம் ஒதுக்கப்பட்டி ருக்கிறது. ஆனால் இதை நியாயப்படி பிரித்துப் பார்த்தால் இந்த மாகாண த்தில் இருக்கிற ஜனத்தொகைக்கு தகுந்தாற்போல் இருக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்று தான் சொல்லவேண்டும். நம் மாகாணத் திலே இருக்கிற ஹரிஜன மக்களுக்கு, ஆளுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுத் தால் கூட, அது போதாது என்று தான் நான் கருதுகிறேன். அதிகமாக மேலும் தொகை ஒதுக்குவார்கள் என்ற நம்பிக்கையுடன் இதை விட்டு விடுகிறேன். ஆதி திராவிட மக்களுக்கு உபகாரச் சம்பளம் கிடைக்கிறது. பல இடங்களில் நான் சுற்றிப் பார்த்தேன். அங்கு இருக்கும் மாணவர் களுக்கு ஸ்காலர்ஷிப் பாரங்கள் கூட காலத்தில் கிடைப்பதில்லை. நான் சமீபத்தில் "டைரெக்டர் ஆப் ஹரிஜன் வெல்பேர்" ஆபீசிற்கு சென்று இதைப் பற்றி விசாரித்த போது இந்த பாரங்கள் "பிரிண்டிங்கில்" இருப்ப தாகச் சொன்னார்கள். இதைக் கேட்க மிகவும் வருத்தமாயிருந்தது.

கல்லூரி விஷயத்தில் ஸ்காலர்ஷிப் கொடுப்பதைப்பற்றி ஒரு குழப்பம் இருந்து வருகிறது. மத்திய சர்க்கார் அந்த சலுகையை கொடுப்பதா அல்லது மாகாண சர்க்கார் கொடுப்பதா என்ற குழப்பம் இருக்கிறது. இந்த குழப்பத்தை அமைச்சர் அவர்கள் போக்குவதற்கு ஏற்பாடு செய்வார் என்று நம்புகிறேன்.

நம் நாட்டில் தீண்டாமை ஒழிந்து விட்டது என்று சொல்லுகிறார்கள். அதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. தீண்டாமை இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கிறது. நம் நாட்டில் பல ஆலயங்கள் இருக்கின்றன. அவைகள் சர்க்காரின்கீழ் இருக்கின்றன. நம் மகாணத்தில் மொத்தம் 60, 65 ஹரிஜனங்கள்தான் இந்த ஆலயங்களில் வேலை செய்கின்றனர் என்று அமைச்சர் தந்த பதிலிலிருந்து தெரிந்து கொண்டேன். 12,000 ஆலயங்கள் இருக்கும் மாகாணத்தில் 65 பேர் தான் இருக்கின்றனர் என்றால் அது மிகவும் குறைவு என்று சொல்ல ஆசைப்படுகிறேன். "நன்றி மறப்பது நன்றன்று, நன்றல்லது, அன்றே மறப்பது நன்று" என்று குறளைக் குறிப்பிட்டு சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். ஆதி திராவிட மக்கள் நன்றி மறந்தவர்கள் என்று சொல்வது தவறு என்பதை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். உலகம் தோன்றிய காலத்தி லிருந்து உழைத்து, உழைத்து உருக்குலைந்து, குடியிருப்பதற்குக்கூட வீடு இல்லாமலிருக்கும்போது நன்றி மறந்தவன் என்று சொல்வது சரியல்ல. அவனுக்கு மட்டும் உணர்ச்சி இருக்குமானால் என்ன நடை பெறும், என்ன நிலைமை ஏற்படும் என்று சொல்ல முடியாது.

பதினைந்து வருஷங்களுக்கு முன்பு இருக்கக்கூடிய சர்க்கார் ரிகார்டை வேண்டுமானாலும் எடுத்து பரிசீலனை செய்து பார்க்கட்டும். நன்றிகெட்ட வர்கள் யார் என்று, அவர்களைப்பற்றி குற்றம் குறைகள் ஏதாவது இருக்

கிறதா என்று பார்க்கட்டும். சில அங்கத்தினர்கள் அவர்களைப் பற்றி இழிவாகப் பேசினது வருந்தத்தக்கது இனிமேலாவது அம்மாதிரி பேசாமல் இருக்குமாறு அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆதித்திராவிடர்களுக்கென்று உத்தியோகத்தில் 15-16 ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நமது தமிழ் நாட்டு முனிசிபாலிடிகளில் ஹரிஜனங்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள். இதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பத்து வருஷத்திற்கு ஹரிஜனங்களுக்கு சலுகை கொடுக்கப் பட்டிருக்கிறது. இப்பொழுது அந்த காலம் முடிவடைய இருக்கிறது. என்னைக் கேட்டால் இந்த 10 வருஷங்கள் போதவே போதாது என்று தான் சொல்வேன். ஆதிதிராவிடர்கள் சரியானபடி முன்னுக்கு வர வேண்டுமானால் குறைந்த பட்சம் 30 வருஷங்களுக்காவது இந்த சலுகையை நீடிக்க வேண்டும். இதை அமைச்சர் அவர்கள் மத்திய சர்க்காருக்கு வலியுறுத்தும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

என்னுடைய ஜில்லாவான தஞ்சை ஜில்லாவில் பண்ணையாள் பாதுகாப்பு சட்டம் அமுலில் இருக்கிறது. அங்கு சட்டம் இருக்கிறதே தவிர ஆட்கள் யாரும் இல்லை. நான் சமீபத்தில் சில இடங்களைச் சுற்றிப் பார்த்தேன். மூன்று கிராமங்களில் பண்ணையாட்கள் இருக்கிறார்கள். சர்க்காரின் புள்ளி விவரப்படி தஞ்சாவூரில் 33 லட்சம் மக்கள் இருக்கிறார்கள். இதில் ஆதிதிராவிடர் 8 லட்சம் பேர்கள். 100-க்கு 1 அல்லது 2 பேர் தான் உத்தியோகத்தில் இருக்கிறார்களே தவிர மற்றவர்கள் வேலை இல்லாமல் இருக்கிறார்கள். அமைச்சர் இந்த விஷயத்திலே நிச்சயம் நடவடிக்கை எடுத்துக்கொள்வார் என்று நினைக்கிறேன். ஆதித்திராவிடர்களுடைய நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. " ஒரு நாடு சிந்திக்க தொடங்கிவிட்டால் அதன் வேகத்தை யாரும் தடுக்க முடியாது " என்று பெரியவர்கள் சொல்லியிருப்பதை நான் இப்பொழுது ஞாபகப்படுத்த விரும்புகிறேன். தற்பொழுது அவர்களுக்கு உழைப்பதற்கு, பண்ணைகளில் வேலை செய்வதற்கு வாய்ப்பு இல்லை. ஆகையால் இந்த விஷயத்தை சரியாக பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

எங்கள் தஞ்சாவூர் ஜில்லாவில் ஆதிதிராவிடர்கள் குடியிருப்பதற்கு வீட்டு வசதி இல்லாமல் இருக்கிறார்கள். நத்தம், புறம்போக்கு முதலிய இடங்களில் கூட இவர்கள் வீடு கட்டிக்கொள்ள முடியாமல் இருக்கிறார்கள். ஏனென்றால் ஷை புறம்போக்காக இருந்தும் அதற்கு விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் இந்த விஷயத்தை பரிசீலனை செய்து சர்க்கார் புறம்போக்கு முதலிய இடங்களை ஒதுக்குவதற்கு உடனடியாக ஒரு சட்டம் இயற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம் நாட்டில் பல தொழில் ஸ்தாபனங்கள் இருக்கின்றன. மில்கள் இருக்கின்றன. பஸ் நிலையங்கள் இருக்கின்றன. இவைகளுக்கெல்லாம் சர்க்கார்தான் லைஸன்ஸ் கொடுக்கிறார்கள். ஒவ்வொரு தொழில் ஸ்தாபனத்திலும், 100-க்கு 15 அல்லது 20 ஆதிதிராவிடர்களுக்கு வேலை கொடுத்தால்தான் லைஸன்ஸ் கொடுக்கப்படும் என்று ஏற்பட்டால் கல்வித் துறையில் ஹரிஜனங்கள் முன்னேறியிருப்பது போல் தொழில் துறையிலும் அவர்கள் முன்னேறுவதற்கு வாய்ப்பு இருக்கும். அப்படியெல்லாம் கட்டாயப்படுத்துவதற்கு முடியாது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். மதுவிலக்கு விஷயத்தில் 18 கோடி ரூபாய் வருமானத்தையும் புறக்கணித்துவிட்டு சமூகம் நன்மை அடைய வேண்டும் என்ற ஒரு கொள்கை இருப்பதுபோல் ஆதிதிராவிடர்களுக்கும் நன்மை செய்யக் கூடியபடி உத்தியோகவிஷயத்திலும், சட்டத்தில் இடம் செய்யவேண்டும் என்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

நகரங்களில் வருஷத்துக்கொருமுறை ஜாதி அடிப்படையில் தலைவரை தேர்ந்தெடுப்பதுபோல் முனிசிபாலிடிகளிலும் இம்மாதிரி " ரொடேஷன்" முறையை கொண்டு வந்தால் நலமாக இருக்கும். அதனால் ஆதித்திராவிடர்களுக்கும் தலைவர் பதவிக்கு வருவதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படும். மாயவரம், சீர்காழி, தஞ்சாவூர் முதலிய இடங்களில் இம்மாதிரி ஏற்பாடு இருந்தால் ஆதித்திராவிடர்களுக்கு மிகவும் திருப்தியாக இருக்கும். சர்க்கார் இந்த விஷயத்தை பரிசீலனை செய்து அமுலுக்கு கொண்டு வருவார்கள் என்று சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

[24th March 1958

1 p.m. MR. SPEAKER : இந்த சபையை மாலை 3 மணி வரை ஒத்தி வைக்கிறேன்.

**(After lunch—3 p.m.)**

SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, 1958–59-ம் ஆண்டு மானிய கோரிக்கையின் மீது . . .

SRI T. S. RAMASWAMY PILLAI : On a point of order Sir, It was announced by the Hon. Speaker that the Hon. Minister concerned would place a statement on the table of the House just before he moved his Demand for Grant. But that statement has only just now been placed on the Table of the House and those hon. Members who have already spoken have had no opportunity to go through it. Is that in order ?

DEPUTY SPEAKER : The Hon. Minister will explain it.

THE HON. SRI P. KAKKAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஆரம்பத்திலேயே இந்த அறிக்கையை வாசித்துக் கொடுக்க முடியவில்லை. அப்பொழுது இது தயாராகவில்லை. இதில் உள்ளதையே தான் இதற்கு முன்பு பேசிய அங்கத்தினர்கள் பேசியிருக்கிறார்கள். ஆரம்பத்தில் இதை வாசிக்கவில்லையென்றாலும் அதிலுள்ள பொருளை எல்லா அங்கத்தினர்களும் உணர்ந்திருக்கிறார்கள், அதைப்பற்றிதான் பேசினார்கள். இன்னும் பேசக் கூடியவர்கள் அதைப் பற்றிதான் பேசு வார்கள். அரசாங்கம் செய்கின்ற வேலைகள் எல்லாமும் அவர்களுக்குத் தெரிய வேண்டும் என்பதற்காகத்தான் இப்பொழுது இந்த அறிக்கை அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இனிமேல் பேசுகிறவர்களுக்கு இது உதவியாக இருக்கும்பொருட்டுதான் இப்பொழுது இது கொடுக் கப்பட்டிருக்கிறது. அதன் மீது எல்லோரும் பேசுவார்கள் என்றும் நினைக் கிறேன்.

DEPUTY SPEAKER : There was some delay in preparing the note. Now it has been placed on the table of the House. Hon. Members may go through it.

SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே 1958–59-ம் ஆண்டினுடைய ஹரிஜன மான்யக் கோரிக்கையின் மீது சட்ட மன்ற உறுப்பினர் தோழர் ஜெகந்நாதன் அவர்கள் கொண்டு வந்துள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகளைப் பேச ஆசைப்படுகிறேன். இந்த மானியத்தின் கீழ் எவ்வளவோ அதிகப்படியான தொகையை ஒதுக்கி வைக்கிறார்கள். அப்படி ஒதுக்கி வைத்தும் உண்மையிலேயே அவ்வளவு தொகையும் ஹரிஜனங்களுக்குச் செலவு செய்யப்படுகிறதா என்று பார்த்தால் உண்மையிலேயே அவ்வளவு தொகையும் ஹரிஜனங்களுக்குச் செலவு செய்யப்படுவது இல்லை. அதன் மூலம் ஹரிஜன மக்கள் பயன்படுவதாக இல்லை. இந்த மானியக் கோரிக்கையின் பூரா தொகையும் காங்கிரஸ் கட்சியினுடைய நலனுக் காகவும், காங்கிரஸ் கட்சி தன்னுடைய கட்சியை வளர்ப்பதற்காகவும் பயன் படுகிறதே தவிர உண்மையிலேயே அது ஹரிஜனங்களுக்கு பயன் படுவதாகவே இல்லை என்பதை இந்தச் சட்ட மன்றத்தின் மூலமாக நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கு உதாரணமாக வட ஆற்காடு மாவட்டத்தில் நடந்திருக்கக்கூடிய சில வேலைகளை எடுத்துக்காட்ட முடியும். அங்கு நடைபெற்றிருக்கக்கூடிய சில குறைபாடுகளை எடுத்துச் சொன்னால் இது நன்றாக விளங்கும். 1957-ம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து 1957-ம் ஆண்டு டிசம்பர் மாதம் முடிவுவரையிலுள்ள வரவு செலவு கணக்கை எடுத்துப் பார்த்தால் நான் சொல்வது சரியாக இருக்கிறது என்று தெரியவரும். அந்தக் கணக்கில் என்ன சொல்லி யிருக்கிறது என்றால் பொது கிணறுகள் வெட்டும் திட்டத்தின் மூலம்

21,500 ரூபாய் சர்க்காரால் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் செல வழிக்கப்பட்ட தொகை 6,634 ரூபாய். சுகாதார வசதிக்காகவும் கிணறுகள் ரிப்பேர், ரோடுகள் ரிப்பேர் முதலிய வசதிகளுக்குகாக சர்க்காரால் அனு மதிக்கப்பட்ட தொகை ரூ. 34,400, ஆனுல் செலவழிக்கப்பட்ட தொகை ரூ. 28,571. மத்தியான உணவுக்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 4,41,800. ஆனுல் செலவழிக்கப்பட்ட தொகை ரூ. 1,05,879. பள்ளிக்கூடம் கட்டிடம், பராமரிப்பு முதலியவைகளுக்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 28,700, செல வழிக்கப்பட்ட தொகை ரூ. 14,082. அதைப் போலவே உபகராச் சம் பளத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 13,000, செலவழிக்கப்பட்ட தொகை 12,908 ரூபாய். அதைப்போலவே நில ஆர்ஜிதம் செய்வதற்கு சர்க்காரால் ஒதுக்கி வைக்கப்பட்ட தொகை ரூ. 30,000, செலவழிக்கப்பட்ட தொகை ரூ. 10,526. இந்த அளவில் இருக்கிறது அவர்களுடைய செலவு விவரம். சர்க்காரால் அனுமதிக்கப்பட்ட தொகை அதிகம் ஆனுல் செலவழிக்கப் பட்ட தொகை மிகவும் குறைவாக இருக்கிறது. இதைப் போலவே ஒவ்வொரு வருஷமும் வட ஆற்காடு மாவட்டத்தில் தொகையை ஒதுக்கி வைத்துவிட்டு திரும்பத் திரும்ப அதை திருப்பிப் பெற்றுக்கொள்வதாகவே இருக்கிறது. இந்த அளவில்தான் வரவு செலவு திட்டத்தில் செலவுகள் செய்யப்பட்டிருக்கின்றன. பல லட்சக்கணக்கான ரூபாயை ஒதுக்கி வைத்துவிட்டு அதை பூராவும் செலவழிக்காமல் திரும்பவும் எடுத்துக்கொள்ளப்படுகிறது. இந்த அளவில் இருக்கிறது சென்னை மாநில சர்க்காருடைய வரவு செலவு கணக்கு, நிலைமை இப்படி இருக்கிறது என்ருல் இந்த சென்னை சர்க்காருடைய போக்கை சொல்லித்தான் முடியுமா ?

அடுத்தபடியாக சொல்லும்போது செலவழிக்கப்படும் தொகையெல் லாம் எங்கு செலவழிக்கப்படுகிறது என்ருல் எந்தந்த இடத்தில் காங்கிரஸ் கட்சி தோழர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்களோ அந்தந்த இடங்களில் தான் செலவு செய்து வருகிருர்கள். வேண்டுமானுல் கனம் அமைச்சர் அவர்களுக்கே இந்தப் புள்ளி விவரங்களைக் கொடுக்கிறேன், அவர்களே பார்த்துக்கொள்ளட்டும். எவ்வளவு தொகை ஒதுக்கியிருக்கிருர்கள் என் பதையும் எவ்வளவு தொகை செலவு செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் எந்தந்த இடங்களில் அவைகளை செலவு செய்திருக்கிருர்கள் என்பதையும் அவர்களே பார்த்துக்கொள்ளலாம். எந்தந்த இடங்களில் காங்கிரஸ்காரர் கள் வெற்றி பெற்றிருக்கிருர்களோ அந்த இடங்களில்தான் அந்த தொகை செலவு செய்யப்பட்டிருக்கிறது. மற்ற இடங்களில் இல்லை. இதைப்பற்றி நான் மீட்டிங்கில் கூட கேட்டேன். எந்தந்த இடங்களில் திராவிட முன்னேற்ற கழக தோழர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்களோ அந்த இடங்களிலெல்லாம் 144 சட்டத்தின் கீழ் உத்தரவு போட்டிருக் கிருர்கள். எந்தந்த இடங்களில் திராவிட முன்னேற்றக் கழக தோழர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்களோ அந்தந்த இடங்களில் செலவு செய்யவே இல்லை. கனம் அமைச்சர் அவர்கள் வேண்டுமானுலும் வந்து பார்க் கட்டும், நான் காட்டத் தயாராகவும் இருக்கிறேன். ஒரு வருஷத்திற்கு முன்னதாக களம்பூரில் உள்ள அருந்ததியர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுக்க வேண்டும் என்று கேட்கப்பட்டது. இது வரையிலும் அவர் களுக்குக் கட்டிக் கொடுக்கப்படவில்லை. அதை கவனித்து உடனடியாக கட்டிக்கொடுக்கிருேம் என்று சொன்னுர்கள், இன்னும் கட்டிக்கொடுக்க முன் வரவில்லை. ஆனுல் அதற்குப் பிறகு மற்ற இடங்களில் பல வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கின்றன. எந்தந்த இடங்களில் அதிக மாக காங்கிரஸ்காரர்கள் வெற்றி பெற்றிருக்கிருர்களோ அந்த இடங்களில் தான் கட்டிக்கொடுக்கப்பட்டிருக்கிறது. திராவிட முன்னேற்ற கழகத் தோழர்கள் வெற்றி பெற்ற இடங்களில் சிலருக்கு கடன் கொடுத்திருக் கிருர்கள். அப்படி கடன் வாங்கியவர்கள் யார் என்று பார்த்தால் அவர்கள் எல்லோரும் காங்கிரஸ் கட்சிக்கு உழைத்தவர்களாகவும், தேர்தலில் காங் கிரஸ் கட்சிக்கு உதவி செய்தவர்களாகவும்தான் இருப்பார்கள். காங்கிரஸ் கட்சிக்கு உழைத்த ஒவ்வொருவருக்கும்தான் கடன் கொடுக்கப்பட்டி ருக்கிறது. காங்கிரஸ் வளர்ச்சிக்கு யார் பாடுபடுகிருர்களோ அவர்களுக்குத் தான் கடன் கொடுக்கப்பட்டிருக்கிறது. கட்சிசார்பற்ற முறையில் ஜன நாயக முறையில் ஆட்சி நடக்கிறது என்று மட்டும் சொல்லுகிருர்கள்.

[Sri S. M. Annamalai] [24th March 1958

ஜனநாயக அடிப்படையில் ஏதாகிலும் கடன் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். வேண்டு மென்றால் அதை எடுத்துக்காட்ட முடியும். அப்படி இல்லை என்றால் கனம் அமைச்சர் அவர்கள் அதை சட்ட மன்றத்தின் மூலமாக விளக்க வேண்டும். ஆனால் சொல்லுகிறார்கள் கட்சி மனப்பான்மையில் ஆட்சியை நடத்தவில்லை என்று. எல்லா மக்களுக்கு நன்மையைச் செய்கிறோம் என்று சொல்லிக்கொண்டு அந்த அடிப்படையில் நடக்கவில்லை என்பதை என்னால் எடுத்துக்காட்ட முடியும். தங்களுடைய கட்சியின் வளர்ச்சிக்காகத் தான் ஒதுக்கப்படும் பணத்தை, அது கோடிக்கணக்காக இருந்தாலும், லட்சக்கணக்காக இருந்தாலும், செலவுசெய்து வருகிறார்கள். இப்படிப் பட்ட பல குற்றங்களை என்னால் சொல்ல முடியும். அப்படிச் சொல் வதற்கு வேண்டிய அவகாசம் இப்பொழுது எனக்குக் கிடையாது. கனம் அமைச்சர் வேண்டும் என்று என்னை அழைத்து தனிப்பட்ட முறை யில் கேட்டால் அப்படிப்பட்ட குற்றங்களை எடுத்துக்காட்ட முடியும்.

அதற்கு அடுத்தப்படியாக விவசாயிகளுக்கு கூலியை நிர்ணயம் செய்ய வேண்டும். அங்கங்கே சில வீடுகளைக் கட்டிக் கொடுத்தும் கிணறுகளை வெட்டிக்கொடுத்தும் வந்தால் மட்டும் அவர்கள் முன்னேற்றமடைந்துவிட மாட்டார்கள். உண்மையிலேயே அவர்கள் முன்னேற்றமடைய வேண்டுமானால் அவர்கள் பொருளாதாரத் துறையில் முன்னேற்றமடைய வேண்டும். விடு கட்டிக்கொடுப்பதன் மூலமாகவும் கிணறுகள் வெட்டிக் கொடுப்பதன் மூலமாகவும் அவர்கள் முன்னேற்றமடைந்துவிடமாட்டார் கள். வீடுகள் கட்டுவது எங்கே என்று பார்த்தால் எங்கே செல்வாக் குள்ளவர்கள் இருக்கிறார்களோ அந்த இடங்களில்தான் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன, கிணறுகள் வெட்டிக்கொடுக்கப்படுகிறது. ஆனால் விவ சாயக் கூலி உண்மையிலேயே உயராமல் இருக்கிறது. அதற்குக் காரணம் அவர்களுடைய கூலியை நிர்ணயம் செய்ய வில்லை. கட்டப்பட்ட வீட்டில் படுத்துக்கொண்டு தூங்கிவிட்டு முழித்துக்கொண்டு அண்ணாந்து பார்த்தால் அவனுடைய பசி தீர்ந்துவிடாது. இவைகளைச் செய்வதால் உண்மையிலேயே ஹரிஜனங்களுக்கு நன்மை செய்வதாக ஆகாது. அவர் கள் உண்மையிலேயே முன்னேற்றமடைய வேண்டுமானால் அவர்கள் பொருளாதார அடிப்படையில் உயர வேண்டும். அதற்கு அவர்களுக்கு கூலி நிர்ணயம் செய்ய வேண்டும். முதல் ஐந்தாண்டு திட்டத்தில் திட்டக் கமிஷன் இதைப் பற்றி திட்ட வட்டமாக சொல்லியிருக்கிறது. விவசாயிகளுக்கு கூலி நிர்ணயம் செய்ய வேண்டும் என்று அவர்கள் சொல்லி இருக்கிறார்கள். அதை ஏன் இன்னும் செய்ய முன் வரவில்லை? முன் வருவதற்கு தயங்க வேண்டிய காரணம் என்ன?

அடுத்தப்படியாக பஞ்சமா தரிசு நிலங்கள் இருக்கின்றன. அவைகளை ஹரிஜனங்களுக்குக் கொடுக்க முன் வரவேண்டும். அப்படிக் கொடுக்க வேண்டும் என்று எவ்வளவோ மனுக்கள் வந்தும் இன்னும் அவர் களுக்கு அதைக் கொடுக்க அரசாங்கம் முன் வரவில்லை, அதற்குக் காரணம் என்ன? இரண்டு வருஷங்களாக இதைப்பற்றி சொல்லியும் மனுக்கள் கொடுத்தும் இன்னும் ஹரிஜனங்களுக்கு அதை பட்டா செய்து கொடுக் காமல் இருக்கிறார்கள். பலமுறை இதைப்பற்றி சொல்லியும் இன்னும் கால தாமதப்பட்டு வருகிறது. பத்து வருஷங்களாக அந்த நிலங்களை ஹரிஜனங்கள் பயிரிட்டு வருகிறார்கள். அப்படியிருந்தும் இன்னும் பட்டா செய்து கொடுக்கப்படவில்லை. இப்படிப்பட்ட நிலங்களை அவர்களுக்கு பட்டா செய்து கொடுப்பதுடன் அவர்கள் பொருளாதாரத் துரையில் முன்னேற்ற மடைவதற்கு வேண்டிய வசதிகளையும் செய்துகொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எவ்வளவு புறம்போக்கு நிலங்கள் இருக்கின் றனவோ அவைகளை எல்லாம் அவர்களுக்குக் பட்டா செய்துகொடுக்க வேண்டும். உடனடியாக விவசாயக் கூலியை நிர்ணயம் செய்ய வேண்டும்.

அதற்கு அடுத்தப்படியாக தாழ்த்தப்பட்ட மக்களைவிட இன்னும் அதிகப்படியாக தாழ்த்தப்பட்ட மக்களாகிய மலைவாசிகள் இருக்கிறார்கள். அப்படி பலர் ஜவ்வாது மலையில் இருக்கிறார்கள். அவர்களில் 100-க்கு 100 பேர்கள் படிக்காதவர்கள், நாகரீகமற்றவர்கள். கலையற்றவர்கள்.

24th March 1958] [Sri S. M. Annamalai]

எந்த அளவுக்கும் அவர்கள் முன்னேற்றமடையாமல் இருக்கிறார்கள் இந்தக் காலத்தில் அவர்கள் இப்படிப்பட்ட நிலைமையில் இருப்பதைத் பார்த்தால் ரொம்பவும் கேவலமாக இருக்கிறது. இதை விட இந்நாட்டில் வேறு அநீதி கிடையாது. அவர்கள் வசிக்கக்கூடிய பிரதேசங்களையும் தேசிய விஸ்தரிப்புத் திட்டத்தில் கீழ்கொண்டு வந்து அவர்களையும் முன்னேற்றமடையச் செய்ய வேண்டும். சமுதாய அபிவிருத்தி திட்டத்தின் கீழும் அவர்களுடைய பிரதேசத்தைக் கொண்டுவரவேண்டும். பலபல திட்டங்களை அவர்களுக்கு அமைத்துக்கொடுக்க இந்த சர்க்கார் முன் வர வேண்டும். அந்தந்த திட்டங்களை அவர்களுக்கு விளக்கிச் சொல்ல முற்பட வேண்டும். அவர்கள் படிப்பிலும் சரி, நாகரீகத்திலும் சரி எல்லா துறைகளிலும் அவர்கள் ரொம்பவும் பின் தங்கி இருக்கிறார்கள். இப்பேர்பட்டவர்களுக்கு பள்ளிக்கூட வசதி செய்து கொடுக்க முன் வர வேண்டும். மற்றும் எல்லா வழிகளிலும் அவர்கள் முன்னேற்றமடைவதற்கு வழி வகை செய்து தர முன் வரவேண்டும் என்று அரசியலாரை நான் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடைசியாக ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். போளூர் தாலுகாவில் வீடு கட்டும் திட்டத்தின் கீழ் பல வீடுகளைக் கட்டினார்கள். முதலில் அந்த வீடுகளை கலெக்டர் வந்து திறந்து வைத்தார். அடுத்த படியாக அதே வீடுகளை முதன் மந்திரி வந்து திறந்து வைத்தார். ஒரு முறை திறந்த வீடுகளை மறுமுறையும் திறக்க வேண்டிய அவசியம் என்ன? அதனால் எவ்வளவு பணம் செலவாகிறது என்பதையும் பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் அந்த கிராமத்தில் இரண்டு காலனிகளை திறந்து வைத்தார்களா என்று பார்த்தால் இல்லை, ஒரு காலனியைத் தான் திறந்து வைத்திருக்கிறார்கள். இதற்கு இரண்டு திறப்பு விழா கொண்டாட வேண்டுமா என்று கேட்கிறேன். மூன்றாவது முறையாக வேறு எந்த மந்திரியாவது வந்து திறக்கப்போகிறார்களோ என்னமோ? இப்படியெல்லாம் பணத்தை ஏன் விரயம் செய்யவேண்டும்.

அடுத்தபடியாக, டிரங்கு ரோடுகளின் ஓரமாக இருக்கக்கூடிய ஹரிஜன சேரிகளில்தான் வீடுகள் கட்டிக்கொடுக்கப்படுகின்றன. உட்புறத்தில் இருக்கக்கூடிய ஹரிஜன மக்கள் தங்களுக்கு வீடுகள் தேவை, தேவை என்று பல ஆண்டுகளாக சொல்லி வந்தபோதிலும், அவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கப்படவில்லை. சர்க்கார் இவைகளையெல்லாம் விளம்பரத்திற்காக செய்கிறார்களே தவிர, உண்மையிலேயே ஹரிஜனங்கள் முன்னேற வேண்டுமென்ற நோக்கத்தோடு செய்வதாக தெரியவில்லை. இந்த மான்யத்திற்காக ஒதுக்கப்படும் தொகையை ஆளும் கட்சியினரின் முன்னேற்றத்திற்காக, வளர்ச்சிக்காக பயன் படுத்திக்கொள்ளுகிறார்கள் என்று சொல்லிக்கொண்டு வெட்டுப் பிரேரணையை நான் ஆதரிக்கிறேன்.

SRI M. K. SOMASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச முன் வந்துள்ளேன். இதற்கு முன்பு பேசிய அங்கத்தினர் சரியான முறையிலே இந்த ரூபாய் செலவழிக்கப்படவில்லை, காங்கிரஸ் ஸ்தாபனத்தின் வளர்ச்சிக்கு செலவழிக்கப்படுகிறது என்று சொன்னார். ஆனால் இதனுடைய நன்மைகளை எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அனுபவிக்காமல் இருக்க முடியாது. எல்லோரும் அனுபவித்துக் கொண்டுதான் வருகிறார்கள். அது போக, இப்பொழுது ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட தொகையானது பல வழிகளிலே செலவழிக்கப்படுகிறது. இந்தத் தொகை நல்ல முறையிலே செலவழிக்கப்பட வேண்டுமென்றால், ஐந்து வருஷ ஹரிஜன சேரி அபிவிருத்தி திட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். திட்டமிட்டு வேலைகளை செய்தால்தான் ஓரளவுக்கு நல்ல பலன் கிடைக்கும். இப்படி பெரிய தொகை பல துறைகளிலே சிதறுண்டு போகுமானால், சர்க்கார் எவ்வளவு செய்தாலும், அது செய்த மாதிரி தெரியவில்லை. ஆகையால் திட்டம் போட்டு வேலை செய்தால்தான் ஓரளவுக்கு நன்றாகச் செய்த மாதிரி தோன்றும் என்பதை நான் ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

[Sri M. K. Somasundaram] [24th March 1958

அடுத்து விவசாயக் கடன்களைப் பொறுத்தவரையில் ஒரு சில இடங்களில் அது சரியான முறையில் கொடுக்கப்படுகிறது. மற்ற இடங்களில் சரியான முறையில் கொடுக்கப்படவில்லை. சிற்சில இடங்களில் இது விஷயமாக சிறு தவறுதல்கள் இருந்தபோதிலும், இனிமேலாவது இந்தக் குறைகளை நிவர்த்திப்பதற்கு அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்கும் என்று நினைக்கிறேன். முக்கியமாக, ஹரிஜனங்கள் குடியிருக்கும் நிலங்கள் இனும் நிலங்களாகவோ, அல்லது கோவில் நிலங்களாகவோ இருக்கின்றன. இதனால் அவர்கள் ஒரு இடத்தில் ஸ்திரமாக குடியிருப்பதற்கு வசதி இல்லாமல் இருக்கிறது. அந்த நிலங்களை ஹரிஜன மக்களுக்கு ஜாரி செய்து கொடுக்க சர்க்கார் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று மிகப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். ஹரிஜன மக்களாகிய கன்வெர்ட்டட் கிரிஸ்டியன்களுக்கு படிப்பு சலுகை மட்டும் கொடுக்கப்பட்டு வருகிறது. அவர்களுக்கு ஹரிஜனங்களுக்கு கொடுக்கப்படுகின்ற மற்ற சலுகைகளையும் கொடுக்கும்படி நான் மிகவும் தாழ்மையுடன் சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். பிளாக் டெவலப்மெண்டு ஏரியாவில் அநேக இடங்களில் ஹரிஜன அபிவிருத்தி திட்டம் துவக்கப்பட்டிருக்கிறது. உண்மையிலேயே மக்கள் முன்னேறவேண்டுமானால் அந்த இடங்களில் சுகாதாரம் உயர்ந்த நிலைமையில் இருக்க வேண்டும். ஒரு இடத்தில் சுகாதாரம் நல்ல முறையில் அமைந்திருந்தால்தான், அந்த இடத்தில் அபிவிருத்தி திட்டங்கள் நல்ல முறையில் நிறைவேறி மக்கள் முன்னேற முடியும். ஆகவே, சுகாதார விஷயத்தை நன்றாக கவனிக்க வேண்டுமென்று சர்க்கார் உத்தரவிடுவார்கள் என்று நினைக்கிறேன். சில இடங்களிலே அதிகாரிகள் தப்பிதமாக நடந்துகொண்டிருக்கிறார்கள். இதனால் ஹரிஜனங்களுக்கு இடையூறுகள் ஏற்படுகின்றன. அவ்வாறு இனிமேலாவது நடக்காவண்ணம் சர்க்கார் உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து பள்ளிகளில் படிக்கும் ஷரிஜன மாணவர்களுக்கு பல இடையூறுகள் ஏற்படுகின்றன. பள்ளிக்கூட மாணவர்களுக்கு ஹரிஜன நல இலாகாவின் மூலம் கல்விச் சலுகை கொடுக்கப்படுகிறது. ஆனால் அது சரியான முறையில் கொடுக்கப்படவில்லை என்று புகார்கள் வந்திருக்கின்றன. இந்த மாதத்துடன் இந்த வருஷம் முடிந்தால் கூட இன்னும் சில பிள்ளைகளுக்கு ஸ்காலர்ஷிப் போய் சேரவில்லை என்று புகார் வந்திருக்கிறது. இனிமேலாவது அது குறிப்பிட்ட நேரத்தில் கிடைக்கும்படி அமைச்சர் அவர்கள் கவனித்து ஏற்பாடு செய்யவேண்டும். தலைமை ஆசிரியர்கள் பாரங்களை ஒழுங்காக வாங்கி குறிப்பிட்ட நேரத்தில் ஆபீசுக்கு அனுப்பாததால் இவ்வளவு கஷ்டம் ஏற்படுகிறது என்று தெரிகிறது. ஆகவே, சர்க்காரிடமிருந்து பாரங்களை வரவழைத்து அந்த ஸ்தாபனங்கள் அந்த பாரங்களை மாணவர்களுக்கு கொடுத்து வாங்கி குறிப்பிட்ட நேரத்தில் அவைகள் ஆபீஸுக்கு வந்து சேரும்படி தகுந்த ஏற்பாடுகள் செய்ய வேண்டும். இதற்கான உத்தரவை அமைச்சர் அவர்கள் பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து ஹாஸ்டல்களில் மாணவர்கள் சேர்ந்துக்கொள்ளுவதில் சில தொந்தரவுகள் ஏற்படுகின்றன. முதலிலே பையன்களை சேர்த்துவிட்டு, கடைசியில் " ஓவர் ஏஜ் " என்று சொல்லி விடுகிறார்கள். அதனால் அம்மாதிரி மாணவர்கள் பரீக்ஷை எழுத முடியாமல் அவர்களுடைய படிப்பு கெட்டுப்போய் வாழ்க்கையும் கெட்டுப்போய் விடுகிறது. அம்மாதிரி இல்லாமல் முதலியேயே இதை கவனித்து மாணவர்களை சேர்க்கவேண்டும். இந்த விஷயத்தை அமைச்சர் அவர்கள் கவனித்து தக்க உத்தரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். உதாரணமாக ராமநாதபுரத்தில் விவேகாநந்தா ஹாஸ்டலில் இம்மாதிரி சில பிள்ளைகள் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் மறுபடியும் ஹாஸ்டலில் சேர்ந்து பரீக்ஷை எழுதுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அரசாங்கம் செய்வார்கள் என்று நினைக்கிறேன்.

அடுத்து வேலைக்கு மனுக்கள் போடும்போது சில மாணவர்கள் சர்டிபிகேட் வாங்குவதற்கு கஷ்டப்படுகிறார்கள். கெஜெட் ஆபீஸர்களிடமிருந்து சர்டிபிகேட் வாங்குவதற்கு அவர்களுக்கு ரொம்பவும் தொந்தரவாக இருக்கிறது. ஒரு எம்.எல்.ஏ. சர்டிபிகேட் கொடுத்தால் கூட, அதைப்

24th March 1958] [Sri M. K. Somasundaram]

பார்த்து சர்டிபிகேட் கொடுப்பதற்கு கெஜெடட் ஆபீஸர்கள் மறுத்து விடுகிறார்கள். எம்.எல்.ஏ. அல்லது மற்றவர்களிடமிருந்து சர்டிபிகேட் வாங்கிக் கொண்டு வந்தால் அதைப் பார்த்துவிட்டு கெஜெடட் ஆபீசர்கள் சர்டிபிகேட் வழங்க வேண்டுமென்று சர்க்கார் உடனடியாக உத்தரவு போட வேண்டுமாய் கேட்டுக்கொள்ளுகிறேன். கடைசி நேரத்தில் கெஜெடெட் ஆபீஸர்கள் சர்டிபிகேட் கிடைக்காததால் மனுப் போடுவதற்கு தவறி விடுகிறார்கள். இனிமேல் இம்மாதிரி கஷ்டங்கள் ஏற்படாமல் சர்க்கார் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஹாஸ்டல் விஷயமாக நான் சென்ற பட்ஜெட் விவாதத்தின் போதே பேசியிருக்கிறேன். ஒவ்வொரு ஜில்லா ஹெட்குவார்ட்டர்ஸிலும் சர்க்காரால் கட்டப்பட்ட ஹாஸ்டல் ஏற்படுத்தப்பட்டு, அவைகளில் அதிக மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டுமென்று முன்பே சொல்லியிருக்கிறேன். சர்க்கார் வருகிற வருஷத்திலாவது ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு ஹாஸ்டலை கட்டவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னும் சில பள்ளிக்கூடங்களில் ஒரே வகுப்பில் இரண்டாவது வருஷம் படிக்கும் ஹரிஜன மாணவர்களிடமிருந்து பீஸ் வாங்குவதாக தெரிய வருகிறது. அப்படி அவர்களிடமிருந்து 92 எம்.ஈ.ஆர். - படி பீஸ் வாங்கக் கூடாது என்று ஹரிஜன இலாகா டைரக்டர் அவர்களிடமிருந்து தெரிய வருகிறது. அப்படி வாங்கியிருந்தால் அந்த ஸ்தாபனங்கள் பீஸை மாணவர்களுக்கு திருப்பிக் கொடுக்கும்படி சர்க்கார் உத்தரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால், இப்படிப்பட்ட சலுகை இருந்தும், அவர்களிடமிருந்து பீஸ் வாங்குவது மிகவும் தவறான காரியமாக இருக்கிறது.

இன்னும் சில கிராமங்களில் பள்ளிக்கூடங்கள் ஏற்படாமல் இருக்கின்றன. அந்த இடங்களில் ஜில்லா போர்டுகள் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த முன்வந்தாலும், தனிப்பட்டவர்கள் பள்ளிக்கூடங்கள் நடத்துவதற்கு முன்வந்தாலும் ஹரிஜன இலாகா டிபார்டுமெண்டு அவர்களுக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொடுக்கும்படியாக சர்க்கார் உத்தரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். உதாரணமாக ஸ்ரீவைகுண்டத்தில் மூன்று ஆசிரியர்களை போட்டு தனிப்பட்டவர்கள் மானேஜ்மெண்டில் ஒரு பள்ளிக்கூடம் நடத்தப்பட்டு வருகிறது. பத்து மாதங்கள் ஆகியும் அந்தப் பள்ளிக்கூடத்திற்கு சர்க்காரிடமிருந்து அனுமதி கிடைக்கவில்லை. இது விஷயமாக ஒரு ஆசிரியர் உண்ணா விரதம் இருக்கப்போவதாக ஒரு பிரசுரம் மூலம் தெரியப்படுத்தியிருக்கிறார். ஹரிஜன மக்கள் முன்னேற்றத்திற்காக பாடுபடும்பொழுது, அவர்களுக்கு சலுகைகள் அளிக்கப்படும்பொழுது இந்தப் பள்ளிக்கூடத்திற்கு 10 மாதங்கள் ஆகியும் இன்னும் அனுமதி தரப்படவில்லை என்பதற்காக ஒரு ஆசிரியர் 1958-ம் வருஷம் மார்ச்சு மீ 29உ முதல் உண்ணா விரதம் இருக்கப் போவதாக தீர்மானித்திருக்கிறார். அப்படியிருக்குமானால், அதை உடனடியாக கவனித்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று சர்க்காரை கேட்டுக்கொள்ளுகிறேன்.

பஞ்சாயத்து போர்டு எலக்ஷன் நடக்கக்கூடிய இடத்தில் வார்டுகள் பிரிப்பதில் பல சங்கடங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஹரிஜனங்கள் இருக்கப்பட்ட இடங்களில் வார்டுகளை பலவிதமாக பிரித்து ஹரிஜனங்கள் மெம்பர்களாக வரமுடியாதபடி தடுத்துவிடுகிறார்கள். அமைச்சர் அவர்கள் இதை கவனித்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஹரிஜன இலாகாவில் வேலை பார்த்து வரும் ஹரிஜன உத்தியோகஸ்தர்களுக்கு கிளார்க் உத்தியோகத்திலிருந்து பிரமோஷன் கொடுப்பதற்கு சர்க்கார் சில நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஜாதி ஹிந்துக்களையோ அல்லது மற்ற வகுப்பினரையோதான் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஹரிஜன "வெல்பேர் ஆபீஸர்களாக" போட்டிருக்கிறார்கள். ஹரிஜனங்களில் படித்தவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். ஏன் அவர்களை இம்மாதிரி உத்தியோகங்களுக்கு நியமிக்கக்கூடாது என்று கேட்கிறேன் . . .

[24th March 1958

**DEPUTY SPEAKER** : கனம் அங்கத்தினருடைய "டைம்" ஆகிவிட்டது.

3–20 p.m. *Sri M. P. PERIASAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஹரிஜன மாண்யத்திற்காக ஒவ்வொரு வருஷமும் கொடுக்கப்பட்டுவந்த தொகையை விட அதிகமான தொகை இந்த வருஷம் கொடுக்கப்படுகிறது. கிருஸ்தவர்களாக இருக்கும் ஹரிஜனங்களுக்காகவும் இந்தப் பணத்தைச் செலவழிக்கலாம் என்றும் இந்த வருஷம் சலுகை காட்டப்பட்டிருக்கிறது. இது மிகவும் விசேஷம்தான். பல வருஷங்களாக காங்கிரஸ் அரசாங்கம் ஹரிஜன முன்னேற்றத் திட்டத்தின்கீழ் ஹரிஜனங்களுக்கு பல நன்மைகளைச் செய்துகொண்டிருக்கிறது. அவ்வாறு நல்ல காரியங்களைச் செய்துவரும் சர்க்கார், ஹரிஜன நல அதிகாரிகளை நியமிக்கும்போது, ஹரிஜனங்களுக்கு ஆதரவாகவும், ஹரிஜனங்களிடம் நல்லெண்ணம் கொண்டும் இருக்கும் ஜாதி ஹிந்துக்களை ஹரிஜன நல அதிகாரிகளாக நியமித்தால், அவர்கள் ஹரிஜனங்களாக இருக்கும் அதிகாரிகளைவிடத் திறமையாக ஹரிஜன நலக் காரியங்களைச் செய்வார்கள் என்பது என் அபிப்பிராயம். இதை நான் இப்போது அல்ல, பல ஆண்டுகளாகச் சொல்லிவருகிறேன். ஹரிஜனங்களிடம் அனுதாபம் கொண்டுள்ள ஜாதி இந்துக்களை ஹரிஜன நல அதிகாரிகளாக நியமித்தால், அவர்கள் ஹரிஜனங்களுக்காக நிலங்களை ஆர்ஜிதம் செய்யும் விஷயத்தில், ஜாதி இந்துக்களின் சம்மதத்தை வெகு எளிதில் பெற்று, சட்டத்தைப் பிரயோகிக்காமலே அவைகளை ஆர்ஜிதம் செய்து விடுவார்கள் என்பது என் அபிப்பிராயம். அதிகாரிகளாக இருப்பவர்கள் ஹரிஜனங்களாக இருந்தாலும், அவர்கள் சட்டப்படி இப்படிப்பட்ட காரியங்களைச் செய்ய முடிவதில்லை. ஏனென்றால், அவர்கள் ஹரிஜன நலக் காரியங்களைச் செய்தால், அவர்களுடைய சமூகத்திற்காகத்தானே செய்கிறார்கள் என்று பிற சமூகத்தினர் சொல்வதால், அவர்கள் அக்காரியங்களை வெற்றிகரமாகச் செய்யமுடிவதில்லை. அந்த அதிகாரிகள் ஜாதி இந்துக்களாக இருந்தால் அவர்கள் வெகு சீக்கிரத்தில் அக்காரியங்களை சுலபமாகச் செய்துவிடுவார்கள். ஆகவே ஹரிஜனங்களிடம் அனுதாபம் கொண்டுள்ள ஜாதி இந்துக்களை ஹரிஜன நல அதிகாரிகளாக நியமிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வீடு கட்டும் திட்டங்களும் இன்னும் பல திட்டங்களும் நல்ல முறையிலே நடப்பதில்லை என்பது என் அபிப்பிராயம். வீடு கட்டுவதற்காக பல வகைகளிலும் மொத்தமாக 550 ரூபாய் கொடுக்கப்படுகிறது. இது எனக்கு பிடிக்கவில்லை. சில ஹரிஜனங்களுக்கு ஏதோ கொஞ்சம்தான் பணம் கிடைக்கிறது. அதைக் கொண்டு அவர்கள் ஒன்றும் செய்யமுடிவதில்லை. மற்ற வகைகளில் கொடுக்கும் பணத்தையெல்லாம் சேர்த்து வீடு இல்லாதவர்களுக்கு வீடு கட்டிக்கொள்வதற்காக போதிய நிலங்கள் மட்டும் வாங்கிக் கொடுக்க வேண்டும். மேலும் மத்திய அரசாங்கத்தார் துளி துளியாக திட்டம் போட்டு பணம் கொடுப்பதாக இந்த அரசாங்கத்தார் சொல்லுகிறார்கள். என் பிராந்தியத்தில் நான் இருக்கும் ஊரில் 20 வீடுகள் கட்டதான் பணம் கொடுக்கும்படி ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு ஒவ்வொன்றுக்கும் 100 ரூபாய் கொடுக்கப்பட்டது. பாக்கித் தொகையை பிறகு கொடுப்பதாக அரசாங்கத்தாருக்கு சொன்னார்கள் வீட்டுக்காரர்கள். ஆனால் கடனாக இப்போது அந்த பாக்கியை கொடுக்க வேண்டாமென்று நிறுத்திவிட்டதாகத் தெரிகிறது. இதுபற்றியெல்லாம் ஹரிஜன நல டிரெக்டரிடமும், ஹரிஜன இலாகா மந்திரியிடமும் எழுதிக் கொடுத்திருக்கிறேன். ஆகவே ஹரிஜனங்கள் அவர்களுக்காக ஒதுக்கப்படும் பணத்தால் பயனடைவதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. வீடு கட்டிக் கொள்வதற்குக் கொடுக்கப்படும் பணத்தால் ஒரு சிலர்தான் பிரயோசனமடைய முடிகிறது. கிணறு வெட்டுவதற்காகக் கொடுக்கப்படும் பணம்தான் பல ஹரிஜனங்களுக்கு பிரயோசனப்படுகிறது. ஆகவே இந்தக் காரியங்களுக்காக எல்லாம் சேர்த்து மொத்தம் ஒரு ஊருக்கு 10,000—15,000 ரூபாய் செலவழிப்பதைவிட, எல்லா ஜில்லாக்களிலும் ஹரிஜனங்களுக்கு குடியிருப்பு மனைகளைக் கொடுத்துவிடுவது மிகவும் நல்லது. அவ்வாறு செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

24th March 1958] [Sri M. P. Periasami]

அடுத்தபடியாக, முதுகுளத்தூர் சம்பந்தமாக ஏதோ சொல்லப்பட்டது. அதைப்பற்றி நான் பேச வேண்டியது அவசியமில்லை. இருந்தாலும் அது பற்றி இங்கே பேசப்பட்டதால் நானும் ஓரிரு வார்த்தைகள் மட்டும் அது பற்றிச் சொல்ல விரும்புகிறேன். அங்கே அவர்கள் எல்லோரும் ஒன்ருக இருந்தது போலவும், அரசாங்கம் அவர்களைப் பிரித்து விட்டது போலவும் ஒரு கனம் அங்கத்தினர் பேசினர். தொன்றுதொட்டு அவர்கள் அவ்வாறு இருந்து வந்திருக்கலாம். எப்போதும் அவர்களுக்கு அடிமைகளாக இருந்து அவர்கள் சொல்கிறபடி நடந்து வந்தால் அப்படி இருக்கலாம். இல்லாவிட்டல் முடியாது. அவர்கள் சொல்கிறபடி நடந்துவந்தால் இன்னும் 5,000 வருஷங்களுக்கு அவர்கள் அடிமைகளாகவே இருப்பார்கள். ஹரிஜனங்களுக்காக நாம் பல சட்டங்களை இயற்றியிருக்கிருேம். எல்லாக் கட்சியினரும் ஹரிஜனங்களுக்கு ஆதரவாக இருக்கிருேம் என்று சொல்லுகிருர்கள். எந்தக் கட்சி பலன் கொடுக்கிறதோ, அந்தக் கட்சிப் பக்கம் ஹரிஜனங்கள் சேருகிருர்களே என்று சிலர் நினைக்கக்கூடும். அதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. யார் அவர்களுக்கு நன்மை செய்கிருர்களோ அவர்கள் பக்கம் போவதுதான் ஹரிஜனங்களுக்கு உசிதமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன். ஹரிஜன நலனில் எல்லாக் கட்சிக்காரர்களும் அக்கறை கொள்ள வேண்டும். காங்கிரஸ் அரசாட்சி வந்தவுடன் ஹரிஜனங்களில் ரொம்பப் பேருக்கு கெஜட் பதவி உத்யோகங்கள் கூடக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனல் அவ்வாறு உத்தியோகம் கொடுக்கப்பட்ட ஹரிஜனங்கள் 10—15 வருஷங்களாக முதலில் கொடுக்கப்பட்ட பதவியிலேயே இருந்துவருகிருர்களே தவிர, மேல் பதவிக்குப் போகவில்லை. காரணம், அவர்களுடைய "கான்பிடென்ஷியல் ரிப்போர்ட்"-ல் ஏதாவது பாதகமாக மேலதிகாரிகள் எழுதி வைத்துவிடுகிருர்கள். அதன் காரணமாக அவர்களுக்கு உத்தியோக உயர்வு அளிக்கப்படுவதில்லை. உத்தியோகம் பார்க்கப்போன ஹரிஜனங்களுக்குத் தான் இந்தக் கஷ்டம் தெரிகிறது. வீட்டில் இருக்கும் என்போன்றவர்களுக்கு இது தெரிவதில்லை. இந்த ஹரிஜனங்களுக்குக் கிழேயுள்ள குறைந்த ஸெர்வீஸையுடைய கீழ் அதிகாரிகளுக்கு இவர்களுக்கு மேல் உத்தியோக உயர்வு கொடுக்கப்படுகிறது. ஹரிஜனங்களை அப்படியே அழுத்தி கிழேயே வைத்திருக்கிருர்கள். அவர்களுக்கு உத்தியோக உயர்வு கொடுக்கப்படாததற்கு காரணம் கேட்டால் "கான்பிடென்ஷியல் ரிப்போர்ட்"-ல் நல்ல அபிப்பிராயம் தெரிவிக்கப்படவில்லை என்று சொல்லப்படுகிறது. கனம் மந்திரி அவர்கள் அந்த பைலை வாங்கிப்பார்த்தாலும் கான்பிடென்ஷியல் ரிப்போர்ட்டில் பாதகமாக எழுதப்பட்டிருக்கிறது என்ற காரணத்தைத் தான் குறிப்பிடுவார்கள். ஆகவே காங்கிரஸ் அரசாங்கம் எவ்வளவோ உத்தியோகங்கள் ஹரிஜனங்களுக்குக் கொடுத்தாலும் பல ஹரிஜன உத்தியோகஸ்தார்கள் உத்தியோக உயர்வின்றி கஷ்டப்படுகிருர்கள். இம்மாதிரி செய்வது சரியா? அவர்களுக்கு அப்போதைக்கப்போது உத்தியோக உயர்வு கொடுக்க வேண்டும். அவர்கள் லஞ்சக் குற்றமோ வேறு எந்தக் குற்றமோ செய்திருந்தால் தண்டிக்கலாம். ஆனல் தகுந்த காரணமின்றி அவர்களை, உத்தியோக உயர்விற்கு லாயக்கில்லை என்று கிழேயே வைத்திருப்பது சரியா? அவர்களை இவ்வாறு உயிரோடு துன்புறுத்தலாமா? டெபுடி சூபரின்டெண்டெண்ட் ஆப் போலீஸாக இருக்கும் ஒரு ஹரிஜனனுக்கு உத்தியோக உயர்வு கொடுக்கப்படாது. அவருக்குக் கிழே இருக்கும் ஸப்-இன்ஸ்பெக்டர் டி.எஸ்.பி.-ஆக உயர்த்தப்படுவார். இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். அரசாங்கம் இதை கவனித்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் மற்ற ஜாதியினர் பார்க்க வேண்டியவர்களைப் பார்த்து, சொல்ல வேண்டியதைச் சொல்லி, உத்தியோக உயர்வு பெற்றுவிடுகிருர்கள்., ஹரிஜனங்கள் யாரைப் பார்த்து என்ன சொல்ல முடிகிறது? ஆகவே அவர்கள் கிழேயே இருக்கிருர்கள். ஹரிஜனங்களுக்கு கெஜட் பதவி உத்தியோகங்களை காங்கிரஸ் அரசாங்கத்தார் கொடுத்தாலும் அவ்வாறு உத்தியோகம் கொடுக்கப்பட்ட ஹரிஜனங்களுக்கு மேலே இருக்கும் ஜாதி இந்துக்கள், அவர்களுக்கு உத்தியோக உயர்வு கொடுப்பதில்லை. ஹரிஜனங்கள் சார்பில் அந்த அதிகாரிகளுக்கும் மிகவும் வணக்கத்துடன் சொல்லிக்கொள்கிறேன். மேலதிகாரிகள் பெரிய மனதுவைத்து, உத்தியோகங்களுக்கு வரும் ஹரிஜனங்களுக்கு நல்லது செய்தால், அவர்களுக்கும் புண்ணியம் கிடைக்கும்.

[Sri M. P. Periasami] [24th March 1958

3–30 p.m. இந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கிறார்கள். அதெல்லாம் சற்று தாமதமாக வருகிறது என்று சொல்லுகிறார்கள். சில பள்ளிக்கூட தலைமை ஆசிரியர்களிடமிருந்தோ, காலேஜ் பிரின்சிபால்களிடமிருந்தோ விண்ணப்பங்கள் நேராக வருவதில்லை, காலதாமதம் ஆகிவிடுகிறது, இவைகளையெல்லாம் அவ்வப்போது கவனித்து, அதைக் கொஞ்சம் ஒரு மாதம், 2 மாதம் தள்ளிவைத்து அதற்கு தகுந்த முறையில் செய்யவேண்டும்.

ஹரிஜன நல இலாகாவைப் பற்றி நான் முதலில் சொன்னது ரொம்ப முக்கியமானது. ஜாதி இந்துக்களையோ, ஐயரையோ, பிராம்மணரையோ ஹரிஜன நல இலாகா டைரக்டராகப் போடும் முறை சிறந்தது. அப்படிப் போட்டால் அவர்கள் நல்லது செய்யும் முடியும் என்ற நம்பிக்கையோடு என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri P. S. ELLAPPAN : கனம் சபாநாயகர் அவர்களே, இன்று காலையிலிருந்து ஹரிஜனங்களுடைய முன்னேற்றத்தைப் பற்றி இங்கு எல்லோரும் ஒரே இராகத்தைத்தான் வருணித்துக்கொண்டு வருகிறார்கள். இதிலே ஏதோ மாற்று இராகம் வருமா என்று பார்த்தால் ஒன்றும் காணோம். அப்படிச் செய்யவில்லை, இப்படிச் செய்யவில்லை என்று சொல்லி எல்லோரும் ஒரே இடத்தில் தான் வந்து சேருகிறார்கள். ஆகவே, நான் சொல்ல என்ன இருக்கிறது? நான் ஏதாவது சொல்லவேண்டுமென்று நினைத்திருக்கும்போது, எல்லோரும் சந்தை அடைத்துவிட்டார்கள். சொல்லவேண்டியது ஏதாவது மிச்சம் இருக்கிறதா என்று பார்த்தால் அதற்கும் வழி இல்லை. ஆகவே, எல்லாம் சரியாப் போச்சு. ஹரிஜன மான்யம் விவாதிக்கப்படும்போது காலரி கூட நிச்சிந்தையாக இருக்கிறது. சபையில் இருக்கும் அங்கத்தினர்களின் எண்ணிக்கையைத்தான் பாருங்கள். ஆகவே, இன்றைய தினத்தில் இந்த விஷயமாக ஒரே ஒரு விஷயம் சொல்லலாம் என்று யோசிக்கிறேன். இதற்கு மேல் சொல்வதற்கு வழி இல்லை. சொல்லவும் தெரியாது. அது என்னவென்றால், சர்க்காரிடத்திலே 30 லட்சம் ஏக்கரா நிலம் சொந்தமாக இருக்கிறது. அந்த நிலங்களை உடனடியாக ஹரிஜனங்களுக்கு எந்தவித சாக்குப்போக்கும் சொல்லாமல், சர்வே, சர்வே, சர்வே என்று சொல்லிக்கொண்டிராமல், ஜாரி செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். இம்மாதிரி யோசனைகளை நாங்கள் சர்க்காருக்கு எடுத்துச் சொல்லலாம சட்டசபையில். ஆனால், சர்க்கார் அதை ஏற்றுக்கொண்டு நிறைவேற்றவேண்டும். அப்படி அவர்கள் நிறைவேற்றுமல் இருந்தால் மக்கள் என்ன நினைக்கிறார்கள்? " என்ன ஐயா! உங்களை சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பினோம், ஒவ்வொரு மாதமும் சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கிறீர்கள், எங்களுக்கு ஏதாவது செய்யக்கூடாதா? எங்களுக்காகப் பேசக்கூடாதா? " என்று கேட்கிறார்கள். அதற்கு நான், " எண்ணபண்ணுகிறது, அப்பா. அம்மி எல்லாம் காற்றில் பரக்கிற பாட்டில், என் சமாசாரத்தைக் கேட்க யார் அப்பா இருக்கிறார்கள்? நான் ஒரு சமயம் பார்த்து ஏதாவது சொல்வேன், அது கூட முடியாத சமாசாரமாக இருக்கிறது " என்று சொல்லுவேன். இந்த 30 லட்சம் ஏக்கர் சம்பந்தமாக நேற்றிரவு என்னிடம் ஒருவர் வந்து சொன்னார். அந்த நிலத்தை ஹரிஜனங்களுக்கு ஜாரி செய்துகொடுக்க வேண்டும். ஏனென்றால், ஹரிஜனங்களுக்கு உதவி செய்ய வேண்டும் என்பதிலே எல்லோரும் ஒரே கருத்து உடையவர்களாக இருக்கிறோம். ஹரிஜனங்கள் இன்றைக்கு மிகுந்த கஷ்டப்படுகிறார்கள்.

1942–லே உணவு உற்பத்தியை அபிவிருத்தி பண்ணவேண்டும் என்பதற்காக, " ஏரிப் புறம்போக்கைப் பயிரிடுங்கள் " என்று சொன்னார்கள். அதையெல்லாம் பார்த்து உழுது, வரப்பு கட்டி, கிணறு எடுத்து பயிரிட்டு வந்தால், ஒரு ஏக்கருக்கு வருஷத்திற்கு 15 ரூபாய் வீதம் தண்டத் தீர்வையா அவர்களுக்கு விதிப்பது? இம்மாதிரி தண்டத் தீர்வை கேட்டால் தரித்திரர்கள் எப்படிக் கொடுக்கமுடியும். வசதியுள்ள விவசாயிகளாக இருந்தால், இப்படிப்பட்ட தீர்வையை செக் மூலமாகவோ, பர்ஸிலிருந்தோ எடுத்துக் கொடுத்துவிடுவார்கள். இந்த தரித்திரன் தன்னுடைய கோவணத்திலிருந்து அவிழ்த்துக்கொடுக்கிறான். ஆகவே, அப்படிப்பட்டவர்களை ரொம்பவும் கவனிக்கவேண்டும்.

24th March 1958] [Sri P. S. Ellappan]

ஏழை விவசாயி என்ன நிலைமையில் இப்பொழுது இருக்கிறான்? எப்படி ஜீவிக்கிறான், அதற்கு என்ன செய்யவேண்டும்? என்று பார்க்க வேண்டும். மில்கள் இருக்கும் பக்கத்தில் திரும்பினால் மில் தொழிலாளர்கள் ஏதோ பரவாயில்லை. ஆனால், விவசாயி பக்கம் திரும்பினால் ஒன்றுமே இல்லை. சமீபத்தில் கிண்டியில் இருக்கும் தோல் பதனிடும் கம்பெனியை நாங்கள் பார்க்கப்போனோம். தோலினால் செய்யப்பட்ட, அழகு அழகான பொருள்கள் வைக்கப்பட்டதைப் பார்த்தோம். இத்தாலி, ரஷ்யா தேசத்துப் பொருள்கள்போல் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. இவ்வளவெல்லாம் இருக்கின்றனவே, விவசாயிக்கு வேண்டிய பொருள் ஏதாவது இருக்கிறதா என்று ஒவ்வொன்றாக, சுற்றிச் சுற்றிப் பார்த்தேன். தண்ணீர் இறைப்பதற்காக ஏதாவது தோல் இருக்குமா என்று பார்த்தேன். பெருத்த ஏமாற்றமாக இருந்தது. விவசாயத்திற்கு வேண்டிய பொருள் ஒன்றுமே அங்கு இருக்கவில்லை. அங்கு கோடி கோடியாக ரூபாய் செலவழிக்கப்படுவதாகக் கேள்விப்பட்டேன். ஆனால், முக்கியமாக விவசாயத் தொழிலை நம்பியிருக்கக் கூடியவர்களுக்குத் தேவையான, கிராம மக்களுக்குத் தேவையான காரியங்கள் என்ன என்ன செய்யவேண்டுமோ அதை நம் சர்க்கார் செய்யவேண்டும் என்று பெரிதும் எதிர்பார்க்கிறேன்.

எங்கள் தாலுக்காவில் நான்கு வருஷத் தீர்வையை ஒரேயடியாகச் செலுத்தவேண்டுமென்று வற்புறுத்துகிறார்கள். வசூல் செய்ய முயற்சிக்கிறார்கள். ஜனூராக இருந்து, 14 லட்சம் ரூபாய் வரை வசூல் செய்தார்களாம். கபிலைத் தோல், மாடு, கன்றுகள், கலப்பைகள், நுகத்தடி இவைகளைக்கூட தீர்வைப் பாக்கிக்காக தாலுகா ஆபீசுக்குக் கொண்டுபோய் ஏலம் போட்டிருக்கிறார்கள். அதைப் பார்த்து ஜனங்கள் என்ன சொல்லுகிறார்கள் ? "அடப் பாவிகளே, இராமராஜ்யம் என்று சொன்னார்களே, காந்தியம் என்று சொன்னார்களே இந்தச் சர்க்காரைப் பார்த்து, இவர்கள் செய்யும் அநியாயத்தைப் பாருங்கள், இப்படி வசூல் செய்கிறார்களே!" என்று பரிதபிக்கிறார்கள். அவர்கள் அப்படிச் சொல்வதைப் பார்க்க எனக்கு உடம்பு எரிகிறது. நம்முடைய இராஜ்ய சர்க்காரைப்பற்றி இப்படிச் சொல்லுகிறார்களே என்று நினைப்பது உண்டு. ஆனால், இவர்கள் பண்ணுகிற அநியாயத்தைப் பார்க்க எனக்குக் கூட சகிக்கவில்லையே, என்ன செய்வது? இம்மாதிரி நிலை இருப்பது பரிதாபத்திற்குரியது.

சேரிகளில் விளக்கு ஏற்பாடுசெய்வதைப் பார்த்தால், அதுவும் திருப்திகரமாக இல்லை. இவர்கள் ஒரு பக்கம் லைட் போட்டுவிட்டுச் சென்றால், கொஞ்ச நாள் சென்று பார்த்தால் லைட் இருக்கிற இடம் தெரியாமல் போய், கம்பம் தான் மிச்சமாக இருக்கிறது. விளக்கு போட்டு 25 நாள் வரை பல்பு எரிகிறது; பிறகு எரிவது இல்லை. காரணம் என்னவென்று கேட்டால், அதற்குறிய பணம் கட்டவில்லை என்று சொல்லப்படுகிறது. இம்மாதிரி கஷ்டம் இருக்கிறது. ஹரிஜனங்களுக்குச் செய்யும் சலுகைகளோடு, முக்கியமாக சேரிகளுக்கு லைட் போடும் விஷயத்தை இனமாகப் போடும்படி தாழ்மையாகக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கம்யூனிடி ஹால் என்பதை எங்கே கட்டுகிறார்கள் ? நன்றாக இருக்கும் கிராமங்களில் கட்டுகிறார்கள். ஏன் இப்படி அழுக்கான துணிக்கு சோப் போடவேண்டுமா ? சுத்தமான துணிக்கு சோப் போடவேண்டுமா ? அதுபோல ஆபாசமாக, அசுத்தமாக, நிலைமை தெரியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற ஜனங்கள் வசிக்கும் தெருக்களுக்கு முக்கியமாக லைட் வசதி செய்து கொடுக்க வேண்டும் ; அந்த இடங்களில் இரவுப் பாடசாலை வைத்து அங்குள்ளவர்களுக்குக் கல்வி வசதி அளிக்கவேண்டும். ஏதோ "இம்ப்ரூவ்மென்ட்" என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே, அவையெல்லாம் கஷ்டப்படுகிற சுத்தத்தைப் பற்றி தெரியாத மக்கள் வசிக்கும் இடங்களிலே செய்து கொடுக்கவேண்டும். இதையெல்லாம் ஒருவிதமாக நிவர்த்தி பண்ணவேண்டும். ஏதோ ஹரிஜன சமூகத்திற்குச் செய்கிறார்கள். ஆகையால் நானும் குறை சொல்வதற்கில்லை. இருந்தாலும், அங்கேயிருக்கும் நிலைமையைப் பார்த்தால், செய்யாறு ஹைஸ்கூல், மதுராந்தகம் ஹைஸ்கூல் அச்சரபாக்கம் ஹைஸ்கூல், கருங்குழி ஹைஸ்கூல் ஆகியவைகளில் படிக்கும் ஹரிஜனப் பிள்ளைகளுக்கு இன்னும் ஸ்காலர்ஷிப் போகவில்லை. இது அங்கே உள்ள நிலைமை. ஆனால், இங்கே என்ன பேசப்படுகிறது? கோடி

[Sri P. S. Ellappan] [24th March 1958

கோடியாக ஒதுக்கிவிட்டதாகப் பேசப்படுகிறது. இங்கே மூன்று லட்சம் அங்கே நான்கு லட்சம் என்று லட்சக்கணக்கிலும் கோடிக்கணக்கிலும் பேசப்படுகிறது. ஆனால், அங்கு ஸ்காலர்ஷிப் போகவில்லை. பிறகு எங்கே தான் இந்தப் பணம் போகிறது? யாரிடம் போகிறது என்பது ஒன்றுமே புரியவில்லை. வாயில்லாத ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். இம்மாதம் 31-ந் தேதிக்குள்ளாக எல்லாவற்றையும் சேர்த்து அனுப்புவதற்கு வழிசெய்துவிட்டு மறுவேலை பார்க்கும்படியாக நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : ஐந்து நிமிஷங்கள் போதுமானால் ஸ்ரீமதி இலட்சுமி காந்தம்மாள் பேசலாம்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : கனம் சட்டசபைத் தலைவர் அவர்களே, இந்த ஹரிஜன முன்னேற்ற மான்யத்தை ஆதரித்து நான் இரண்டொரு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். ஹரிஜன முன்னேற்றம் என்று சொல்லும்போது, இந்த ஹரிஜனங்களுடைய நிலைமையைக் கூர்ந்து கவனித்து அவர்கள் மக்களாக நடத்தப் படவில்லை, மக்களாக நடத்தப்படுகிறார்கள் என்பதை முதன் முதலில் உணர்ந்தவர் நமது அண்ணல் காந்தியடிகளாவார்கள். அவர்கள்தான் இந்தக் காங்கிரஸ் ஸ்தாபனத்தை ஏற்படுத்தினவர்கள். அந்தக் காங்கிரஸ் ஸ்தாபனத்திலே உள்ள 18 நிர்மாணத் திட்டங்களோடு, ஹரிஜன முன்னேற்றம், தீண்டாமை ஒழிப்பு ஆகிய இரண்டு திட்டங்களையும் சேர்த்து ஹரிஜனங்களுக்காகப் பாடுபடவேண்டும் என்ற உணர்ச்சியை மக்களுக்கு ஊட்டியவர் மகாத்மா காந்தியடிகள்தான். இந்தக் காங்கிரஸ் ஸ்தாபனம் தான். அதே காங்கிரஸ் ஸ்தாபனம் அரசாட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகும் ஹரிஜன மக்களுடைய நலனைப்பற்றி அக்கறை எடுத்துக் கொண்டு, எத்தனை துறைகளில் அவர்களுக்கு சேவை செய்ய முடியுமோ அத்தனை துறைகளிலும் சேவை செய்துகொண்டு வருகிறதென்பதை நினைக்கும்போது நாம் பெருமை கொள்ளாமல் இருக்க முடியவே முடியாது.

ஹரிஜனங்களுக்கு மாத்திரம் அவர்கள் சேவை செய்யவில்லை. இதர பிற்போக்குச் சமூகங்களைப் பற்றியும் இந்த அரசாங்கம் நன்றாகத் தான் கவனித்துக்கொண்டு வருகிறது. இருப்பினும் ஒரு விஷயத்தை இங்கே குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை. சௌராஷ்டிரர் சமூகம் என்று ஒன்று இருக்கிறது, என்பதை நான் இங்கு உணர்த்த விரும்புகிறேன். அவர்கள் இம்மாகாணத்திலே இரண்டு லட்சம் ஜனத்தொகை கொண்டவர்களாக இருக்கிறார்கள். ஒரு லட்சம் ஜனத்தொகை மதுரையிலும், மற்றொரு லட்சம் ஜனத்தொகை இதர ஊர்களிலும் பரவிக்கிடக்கின்றனர். அவர்கள் பிற்போக்கு சமூகத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களை 'மிகவும் பின் தங்கியவர்கள்' என்னும் வகுப்பில் சேர்க்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன். காரணம், படிப்பிலும் பொருளாதாரத்திலும் அவர்கள் மிகவும் பின் தங்கியுள்ளனர். இதுவரை அவர்கள் பிற்போக்குச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்று கருதப்பட்டு, அவர்களுக்கு கல்விச் சலுகை அளிக்கப்பட்டு வந்தது. ஆனால், அண்மையில் மிகப் பிற்போக்கான சமூகத்தவர்கள் லிஸ்ட்டிலே அவர்களைச் சேர்க்காமல் இருந்ததினாலே ஏற்கெனவே ஸ்காலர்ஷிப் வாங்கிக் கொண்டிருந்த பிள்ளைகளெல்லாம் இன்று நட்டாற்றில் விடப்பட்டு தவிக்கிறார்கள். ஏற்கெனவே பணத்தைப் பெற்றுக்கொண்டுவந்தவர்கள் இப்பொழுது மத்தியில் படிக்க முடியாமல் தவித்துக்கொண்டிருக்கின்றனர். ஆகையால், இனிமேலும் தாமதம் செய்யாமல் அவர்களுக்கு வேண்டிய பண உதவி கொடுத்து அவர்களைப் படிக்க வைக்கவேண்டுமாய் நான் கேட்டுக் கொள்கின்றேன். நான் இதைப் பற்றி பேசியிருக்க மாட்டேன். ஆனால் மிகவும் பிற்பட்ட சமூகமாக இருக்கிற அவர்கள் படுகிற கஷ்டம் மிகவும் அதிகமாக இருப்பதனால் அதைப் பற்றி பேசினேன். பல ஊர்களில் சென்று பார்த்தால் அவர்களின் கீழான நிலையை நன்றாகத் தெரிந்து கொள்ளலாம். வேண்டுமானால் என்னுடன் வந்தால் நான் அமைச்சர் அவர்களை அழைத்துச் சென்று அந்த பிற்பட்ட சமூகத்தினுடைய கீழான நிலைமையைக் காண்பிக்கத் தயாராய் இருக்கிறேன், கல்வித் துறையிலும், பொருளாதாரத்

துறையிலும் அவர்களுடைய நிலைமையை உடனடியாக உயர்த்துவது நமது அமைச்சர் அவர்களுடைய கடமை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

ஏற்கெனவே இந்த அரசாங்கத்தினல் கொடுக்கப்பட்ட ஸ்காலர்ஷிப்பும், மத்திய அரசாங்கத்தினல் வழங்கப்பட்ட ஸ்காலர்ஷிப்பும் நின்றுவிட்டன. தொழிற் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தவர்களும், வைத்தியக் கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தவர்களும், ப்ரீ யூனிவர்சிடியில் படித்துக் கொண்டிருந்தவர்களும் இதனல் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிருர்கள். எனக்குத் தந்தி மேல் தந்தியாகவும், கடிதங்களாகவும் வந்து கொண்டிருப்பதன் காரணமாக மிகவும் வருத்தத்தோடு இவ்விஷயத்தை இங்கே சொல்லிக்கொள்கிறேன். ஆகையால் அவர்களுடைய ஒரு குறையை இந்தச் சர்க்கார் உடனடியாகப் போக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

SRI T. S. RAMASWAMY PILLAI: கனம் சபா நாயகர் அவர்களே, இந்த மானியத்தைப் பொறுத்த அளவில் ஆளும் கட்சியில் இருப்பவர்களும் சரி, எதிர்கட்சியில் இருப்பவர்களும் சரி எவ்வித வித்தியாசமும் இன்றி எல்லோரும் பலபல தலைமுறைகளாக மிகவும் தாழ்ததப்பட்ட நிலையிலேயே இருந்த ஹரிஜன சமூகம் முன்னேறவேண்டும் என்கிற எண்ணத்தோடு ஒருமுகமாக ஆதரிக்கக் கடமைபட்டிருக்கிருர்கள். தாழ்த்தப்பட்டு ஒடுக்கப்பட்டு இன்றளவும் இருந்து வந்திருக்கிற அந்த ஹரிஜன சமூகம் முன்னேற்றம் அடைந்தால்தான் இந்தியா தேசம் முன்னேற முடியும் என்பதை இங்குள்ள அங்கத்தினர்கள் அத்தனை பேரும் உணர்ந்திருக்கிருர்கள். அது மட்டுமல்ல. சுதந்திர இயக்க காலத்திலிருந்தே ஹரிஜன முன்னேற்றத் திட்டத்தை நமது நிர்மாண திட்டங்களில் ஒன்ருக வைத்துக்கொண்டே செயல்பட்டு வந்திருக்கிறேம். சுதந்திரம் அடைந்து நம்முடைய இலட்சியத்தை நாமே வகுத்துக்கொள்ளும் போதும்கூட அரசியல் சட்டத்தில் 46–வது ஷரத்தில் மிகவும் தெளிவாக ஹரிஜனங்களுடைய கல்வியிலும், பொருளாதாரத்திலும் விசேஷ கவனம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதாக சங்கற்பல் செய்துகொண்டிருக்கிறேம். அந்த வேலைக்காகவே இந்த மான்யத் தொகை ஒதுக்கப்படுகிறது இதைப்பற்றி விவாதிக்கும்போது பலதரப்பட்ட கருத்துக்கு என்ன இடம் இருக்கிறது என்று கேட்கலாம். பலதரப்பட்ட கருத்துக்கு இடந்தரா விட்டாலும்கூட சுதந்திரம் அடைந்து 8 ஆண்டுகள் ஆன போதிலும்கூட இன்னமும் நாம் எதிர்பார்த்தபடி அவர்களுடைய நிலைமை முன்னேற்றம் அடையவில்லையே என்கிற தாபத்தினல்தான் ஆளும் கட்சியில் இருந்தும் சரி, எங்களுடைய கட்சியில் இருந்தும் சரி பலபேர்கள் கொஞ்சம் ஆவேசமாகப் பேசியிருக்கிருர்கள் என்று நான் கருதுகிறேன். ஆனல் ஒன்று. இதர இராஜ்ஜியங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இங்கு இன்னமும் தீண்டாமை கொடுமை இருப்பதற்கு மிகவும் வெட்கப்படவேண்டியவர்களாக இருக்கிறேம். 1955-ம் வருஷம் அகில இந்திய ரீதியில் ஹரிஜன முன்னேற்றம் பற்றி விசாரணை செய்வதற்காகப் போடப்பட்டிருந்த கமிஷன் தன்னுடைய அறிக்கையில் கொடுத்திருக்கக்கூடிய விவரங்கள் நம்மை வெட்கம் அடையச் செய்கின்றன. தீண்டாமை குற்றத்திற்காக தண்டனை பெற்றிருப்பவர்கள் நம்முடைய இராஜ்ஜியத்தில்தான் ஆறு மாதங்களில் 74 பேர்களாம். பம்பாயில் ஒன்று. உத்திரப்பிரதேசத்தில் இரண்டு. இதர பல இராஜ்ஜியங்களில் இல்லவே இல்லை. ஆகவே தீண்டாமை என்பதை அறவே ஒழிப்பதற்கு நம்முடைய அரசாங்கம் தக்கபடி நடவடிக்கை எடுத்துக்கொண்டாலன்றி நம்முடைய மாகாணத்திற்குள்ள களங்கம் நீங்காது. அதுமட்டுமல்ல. பொருளாதாரத்துறையில் ஹரிஜனங்களுடைய நிலைமையை உயர்த்துவதற்கு இந்த அரசாங்கம் என்ன செய்திருக்கிறது என்பதைப் பற்றி வெட்டுப் பிரேரணையைப் பிரேரித்தவர் கடுமையாகப் பேசினர். அரசாங்கம் எத்தனையோ முறைகளைக் கையாண்டாலும் அவர்களுடைய குறைகள் பூர்ணமாக இன்னமும் நிவர்த்திக்கப்படவில்லை. போன சந்தர்ப்பத்தில்கூடக் குறிப்பிட்டேன். குறிப்பாக கன்னியாகுமரி மக்கள் தாயகத்தோடு சேர்ந்தும் தங்களுக்கு எவ்வித நன்மையும் அங்கே இருந்தபோது கிடைத்ததுகூட கிடைக்கவில்லையே என மனம் புழுங்குகிருர்கள். அப்படிச் சொல்லும்போது அங்கு ஏதோ சொர்க்க

லோகமாக இருந்தது என்று சொல்ல வரவில்லை. உதாரணமாக ஆரம்பப் பள்ளியில் இருந்து, உயர்நிலைப் பள்ளி வரையில் அங்கு இருக்கும்போது புத்தகம், ஸ்லேட் இதர செலவுக்கு கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப் பள்ளிக் கூடம் திறந்து ஒரு மாதத்திற்குள்ளாகக் கிடைத்துவிடும். ஆனால் இங்கே சேர்ந்த பிற்பாடு வருஷம் முடியப்போகிறது—நான் பட்ஜெட் கூட்டத்திற்கு வரும் வரையிலும் தரப்படவில்லை என்பதாக எனக்குத் தெரியும். இதை மிகவும் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். கன்னியாகுமரியில் மட்டுமல்ல. அங்கேயுள்ள இதர தாலுக்காகளிலும் இதே நிலைமை தான். நாம் முழுமூச்சுடன் பல திட்டங்களைத் தீட்டுகிறோம். ஆனால் அவர்களுக்கு வேளாவேளைக்குக் கிடைக்க வேண்டிய உதவி கிடைக்கவில்லை என்றால் எப்படி அந்த ஹரிஜன மாணவர்கள் படிப்பார்கள்? புத்தகம் இல்லாமல் படிக்க முடியுமா? இதனால் ஏற்படக்கூடிய தீமை முழுவதும் இந்த அரசாங்கத்தையே சாறும் என்று நான் சொல்ல விரும்புகிறேன். ஹரிஜன இலாகாவைப் பொறுத்தவரையில் இன்று அவ்விலாகாவுக்குத் தலைவராக ஒரு ஹரிஜனரே இருக்கலாம். இது பெருமை படக்கூடிய விஷயம். டைரக்டர் பணத்தை ஹரிஜன மாணவர்களுக்கு ஜில்லாவாரியாக ஒதுக்கி வைக்கிறாரே தவிர இவர் வேறு ஒன்றும் செய்வதில்லை. ஜில்லாவிலுள்ள கலெக்டர்கள் தான் ஸ்காலர்ஷிப் வழங்கவேண்டியிருக்கிறது. ஆகவே இனிமேல் பள்ளிக்கூடம் திறந்து ஒரு மாதத்திற்குள்ளாக ஸ்காலர்ஷிப் வழங்காவிட்டால் ஏன் வழங்கவில்லை என்பதாக விசாரணை செய்து தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். தொகையை ஒதுக்கிவிட்டால் மட்டும் போதாது. ஒதுக்கப்பட்ட தொகை கீழேயுள்ள அதிகாரிகளால் சரியான முறையில் விநியோகிக்கப்படுகிறதா என்று பார்த்து இல்லையானால் அவர்கள் பேரில் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும் என்பதாக எதிர்கட்சிகளின் சார்பில் கேட்டுக் கொள்கிறேன். அதோடு முன்பு கல்லூரிகளில் சேர்ந்துவிட்டால் ஹரிஜன மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வழங்கப்பட்டது. ஆனால் இப்போதோ கல்லூரிகளில் சேர்ந்துவிட்டால் மட்டும் போதாது. ஹாஸ்டலில் இடம் கிடைத்தால் தான் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படும் என்று இருக்கிறது. அதனால் ஹாஸ்டலில் சேருவதற்குப் போட்டி.

அதற்கு ஒருவருக்கொருவர் போட்டி. அதற்கு சிபார்சு. அதிலும் டவுனில் உள்ளவர்களுக்கு கிடையாது. மூன்று மைல்களுக்கு அப்பால் இருந்தால்தான் கிடைக்கும். இப்படிப்பட்ட ஒரு நிலைமை இருப்பதால், பல ஹரிஜன மாணவர்கள், புத்திசாலிகளான மாணவர்கள், தாங்கள் நன்கு கல்வி அறிவு பெற வேண்டுமென்று விரும்பும் மாணவர்கள், அவர்களுக்கு அரசாங்க ஸ்காலர்ஷிப் போகாததால் படிப்பை விட்டு விடுகிறார்கள். போன தடவை இதைப் பற்றி கூறினபோது அமைச்சர் அவர்கள் கூறினார்கள், அவர்கள் பீடி சிகரெட் குடித்து விட்டு பணத்தை வேஸ்ட் செய்து விடுவார்கள், அதற்காக ஹாஸ்டலில் இருக்கவேண்டும் என்று. நான் சொல்கிறேன். அந்த மாணவர்கள் உத்தமமான மாணவர்கள். அவர்கள் ஒழுங்கானவர்கள். படிக்க வேண்டுமென்று ஆர்வம் உடையவர்கள். அவர்கள், ஹாஸ்டலில் இடமில்லை என்று சொல்லி வெளியே போக வேண்டிய துர்பாக்கியமான நிலை இன்றிருக்கிறது. ஆகவே, இதற்காக நிச்சயம் அதிக தொகை ஒதுக்க வேண்டும். இதற்கு யாரும் ஆட்சேபம் சொல்லமாட்டார்கள். முன்னுக்கு வரக்கூடிய மாணவர்கள் இந்த ஸ்காலர்ஷிப் இல்லாததால் படிக்க முடியாமல் அலங்கோலமான நிலையில் போகிறார்கள். அது போலவே, இன்னொரு விஷயம். நம்முடைய விதிகளைப் பொறுத்தளவில் கல்லூரிகளில் படிக்கிறவர்களும் சரி, அல்லது உயர்நிலைப் பள்ளிகளில் ஸ்கூல் பைனலில் படிக்கிறவர்களும் சரி, முதலில் பரிட்சைக்கான பணத்தை அவர்கள் அடைக்க வேண்டும். அப்படி பணம் அடைத்து விட்டு ஹரிஜன மாணவன் என்று சர்டிபிகேட் கொடுத்தால் அந்தப் பணத்தை திரும்பக் கொடுப்பார்கள். அப்படி பணம் அடைக்கும் சக்தி அவர்களுக்கு இருந்தால் எதற்காக அவர்கள் உங்களிடம் ஸ்காலர்ஷிப் கேட்கிறார்கள்? ஆகவே, அந்த விதிகளை மாற்றவேண்டும். ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், ஹரிஜன மாணவர் என்று தெரிந்து விட்டால் அவர்கள் நிச்சயம் பணம் அடைக்கக்கூடாது. அதாவது அவர்கள் பணம் அடைக்க வேண்டாம் என்று இருக்க வேண்டும். இதனால் அரசாங்கத்திற்கும் நஷ்டம் கிடையாது.

24th March 1958] [Sri T. S. Ramaswamy Pillai]

ஆகவே, ஏன் இந்த விதிகளை மாற்றவில்லை என்று நான் கேட்கிறேன்? காங்கிரஸ் கட்சியில் உள்ள அம்மையார் அவர்கள் இதைப்பற்றி வெகு அழகாக எடுத்துக் கூறினார்கள். பல ஜில்லாக்களில் ஹரிஜன மாணவர்கள் படும் அல்லல்களை மாதக்கணக்கில் அவர்கள் ஸ்காலர்ஷிப் கிடைக்காமல் படும் அல்லல்களைப்பற்றி ஆளும் கட்சியில் இருப்பவர்களும், எதிர் கட்சியில் இருப்பவர்களும் எவ்வளவோ தூரம் எடுத்துச் சொன்ன போதிலும் கூட ஏன் நீங்கள் அந்த விதிகளை மாற்றவில்லை என்று நான் மீண்டும் கேட்க ஆசைப்படுகிறேன். அதேபோல், அவர்களின் பொருளாதார நிலையை உயர்த்துவதற்கு அரசாங்கத்தில் இருந்து திட்டங்கள் தீட்டியிருக்கிறார்கள். உதாரணமாக, விவசாயத் தொழிலாளர்களுக்கு சௌகரியம் செய்து கொடுக்க 285 ரூபாய் அவர்களுக்கு கொடுக்கப்படுகிறது, என்பது ஸ்டேமென்ட். அதாவது காளை வாங்குவதற்கு. கன்னியாகுமரி ஜில்லாவை பொறுத்த மட்டில் 130 ஜோடி காளைகள் வாங்கப்பட்டன. திருநெல்வேலியில் 400 ஜோடி காளைகள் ஏன் வாங்கப்பட்டன என்று கேட்கிறேன். அதுவும் அவசர அவசரமாக வாங்குகிறார்கள். ஒரு ஆபிஸர் போய் வாங்குவது என்றால் அவர்கள் 50, 60 ரூபாய் விலையுள்ள மாடுகளுக்கு கூடுதல் பணம் கொடுத்து வாங்குகிறார்கள். அந்த மாட்டை விவசாயிகளுக்குக் கொடுத்தால் அவர்கள் எங்களுக்கு இது அவசியமில்லை என்று சொல்லக்கூடிய நிலைமையில், நிலைமை மிகவும் மோசமாகப் போய்விட்டது. அவர்களுக்கிடையே போட்டி போட்டுக் கொண்டு, எனக்கு இந்த ஜோடி வேண்டும், எனக் இந்த ஜோடி வேண்டும் என்றும் போட்டியிருக்கிறது. ஆகவே, நான் சொல்வது என்னவென்றால், அந்த ரூபாயை அவர்கள் கையில் கொடுத்து விட்டால் அவர்களே போய் நல்ல மாடாகப் பார்த்து வாங்கிக் கொள்வார்கள். அதேபோன்று குடிசைக் கைத்தொழிலுக்கு திட்டங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன. அறிக்கையில் அந்த அட்டவணை வந்திருப்பதைப் பார்க்கும்போது சென்ற ஆண்டு எங்களுக்கு கிடைத்த ஏமாற்றத்தை கூற வேண்டியிருக்கிறது. கன்னியாகுமரி ஜில்லாவில் 60,000 ரூபாய்க்கு குடிசைக் கைத்தொழில்களுக்கு என்று மூன்று திட்டங்கள் அனுப்புங்கள் என்று இன்டஸ்ட்ரீஸ் டிப்பார்ட்மென்டில் இருந்து வந்தது. செங்கல் செய்யும் திட்டம், கார்போர்ட், சோப் செய்வது போன்ற திட்டங்கள் அனுப்பப்பட்டது. இரண்டு மாதங்களுக்குப் பின்னால், இப்பொழுது போதிய பணம் இல்லை, ஆகவே, ஒரு திட்டம் போடுங்கள் என்று சொல்லப்பட்டு செங்கல் (பிரிக்ஸ்) திட்டம் அதையாவது கொடுங்கள் என்று சொன்னோம். அதற்கும் இப்பொழுது பணம் இல்லையென்று சொல்லி விட்டார்கள். ஆகவே, நான் சொல்வது இப்படி திட்டங்கள் போட்டுக் கொண்டே போவதை விட குறைந்தளவு திட்டங்கள் போட்டு அவைகளையாவது சரிவர நிறைவேற்றுங்கள், என்று பணிவுடன் ஆனால் வன்மையுடன் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதே போல் விவசாயிகளுக்காக நிலம் கொடுப்பதாக திட்டத்தில் பார்த்தேன். அது உண்மையானால், அது போற்றத்தக்கதே. அதைப்பற்றி காங்கிரஸ் அங்கத்தினர்களிடமும், இதர அங்கத்தினர்களிடமும் கேட்டேன். இந்த ஆண்டு 48,000 ஏக்கர் கொடுத்திருப்பதாக, அஸைன் செய்து கொடுத்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. சென்ற ஐந்து வருடத்தில் ஏறக்குறைய மூன்று லட்சம் ஏக்கர் நிலம் ஏழை ஹரிஜன மக்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது என்று. அப்படியானால் நிச்சயம் அது போற்றத்தக்கதே. ஒவ்வொரு ஜில்லாவைப்பற்றியும் கேட்கும்போது, ஆயிரம் ஏக்கர் கூட எங்கள் ஜில்லாவில் தரவில்லையே என்றுதான் எல்லோரும் சொல்கிறார்கள். ஆகவே ஜில்லாவாரியாக இந்த வருஷத்தில் எவ்வளவு கொடுக்கப்பட்டது என்று அமைச்சர் அவர்கள் கூறினால் மிகவும் உபகாரமாக இருக்கும். அது மட்டுமல்ல. ஹரிஜனங்களில், 99 சத விகிதம் ஏழை விவசாய மக்களாவர். அவர்கள் இந்த நாட்டில் உணவை உற்பத்தி செய்யும் மக்களாவர். ஆகவே, அவர்களுக்கு வேண்டிய உதவி அளிப்போமேயானால், நாட்டில் உற்பத்தியும் பெருகும். அவர்களின் ஏழ்மையும் நீங்கும், அவர்களுக்கு தொழில் கொடுத்தது மாதிரியுமாகும். ஆகவே, அவர்களுக்கு நிலம் வழங்குவதோடு கூட, இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். அதாவது, விவசாயத் தொழிலாளிகளாக இருக்கும் லட்சோபி லட்சம் ஹரிஜன மக்களை, அதாவது விவசாய தொழிலாளர்களாகிய ஹரிஜன மக்களை, மினிமம் வேஜஸ் ஆக்டின் கீழ் கொண்டுவந்து அவர்களுக்கு குறைந்த பட்ச கூலி கொடுக்க வேண்டுமென்று என்னுடைய நண்பர் ஜகன்னாதன் அவர்கள்

[Sri T. S. Ramaswamy Pillai] [24th March 1958

எடுத்துச் சொன்னார்கள். அதில் ஒன்று எனக்கு வியப்பாக இருக்கிறது. நேற்று அவர்கள் லேபர் கமிஷனர் அவர்களிடம் கேட்டார், இந்த விவசாயத் தொழிலாளர்களுக்கு மினிமம் வேஜ் ஏன் நிச்சயிக்கப்படவில்லை, அது எந்த நிலையில் இருக்கிறது என்று. அதற்கு அவர் சொன்னார், அந்தத் தொழில் வேறு தொழிலைப் போல் அல்ல, விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்ச சம்பளம் நிர்ணயிப்பது மிகவும் கஷ்டமான காரியம். அப்படி நிர்ணயிப்பது கஷ்டமான காரியம் என்பதோடு கூட, அதை அமுல் நடத்துவது அதை விட கஷ்டமான காரியம் என்று சொன்னார்கள். அதோடு, இந்தியாவில் வேறு எந்த தேசத்திலும் இப்படி நடந்ததில்லை என்று ஒரு பொறுப்பு வாய்ந்த அதிகாரி சொன்னார்கள். அதை கேட்டு நான் அதிர்ச்சியடைந்தேன். மினிமம் வேஜ் கமிட்டியில், அந்த ராஜ்யத்தில் உள்ள கமிட்டியில், நானும் ஒரு அங்கத்தினராக இருந்தேன். நான் பெயரைக் குறிப்பிடவில்லை. ஆனால் ஹரிஜன இலாகா அமைச்சர் அவர்களுக்கு கோபம் வராது. ஆனால் வேறு அமைச்சர் ஒருவருக்கு கோபம் வரும். கேரளம் என்றவுடனேயே, "அலெர்ஜிக்" என்று சொல்வார்களே, அதுமாதிரி அவர்களுக்கு வருகிறது. அந்த ராஜ்யத்திலே இது இப்பொழுது அமுல் நடத்தப்படுகிறது. அதில் சிக்கல்கள் இருக்கலாம். கஷ்டங்கள் இருக்கலாம். நல்ல காரியத்திற்கு 400 கஷ்டங்கள் என்று சொல்வது போல் நல்ல காரியம் ஒன்று செய்வதில் கஷ்டங்கள் எவ்வளவு இருந்தபோதிலும் இந்நாட்டில் உணவை உற்பத்தி செய்யக்கூடிய ஒரு சமுதாயத்தின் வாழ்க்கை நிலை உயர நாம் முன் கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, அதே போல் இன்னும் பல துறைகளிலும் ஹரிஜன முன்னேற்றத்திற்காக திட்டங்கள் தீட்டப்படவேண்டும். அவைகளை சரியான முறையில் நடத்துவதற்கு, விதிகள் தடையாக இருந்தால் அவ்விதிகளை மாற்ற வெண்டும். அதிகாரிகள் அவைகளை நிறைவேற்றுவதில் அசிரத்தையாக இருந்தால் அவர்களுக்கும் சரியானபடி பாடம் கற்பிக்க வேண்டும் என்றும் சொல்லிக் கொண்டு இந்த சபையைப் பொறுத்த வரையில், இந்த ஹரிஜன முன்னேற்றம் சம்பந்தப்பட்ட வரையில் எல்லாக் கட்சியினரும் தங்கள் தங்கள் ஒத்துழைப்பை ஆர்வத்தோடு தர முன்வருவார்கள் என்று சொல்லிக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

***Sri C. N. ANNADURAI** : சட்டமன்றத் தலைவர் அவர்களே, ஹரிஜனத் துறைக்காக ஒதுக்கப்பட்டிருக்கின்ற இந்த தொகையை அனுமதிப்பதற்கு முன்னால் அந்த துறை எந்த வகையில் நிர்வகிக்கப்படுகிறது எனபதைப் பற்றி எங்களுக்குள்ள சில கருத்துக்களையும் யோசனைகளையும் எடுத்துச் சொல்வதற்காக வெட்டுத்தீர்மானம் தரப்பட்டிருக்கிறது. அதை ஆதரிக்கின்ற வகையில் நான் சில கருத்துக்களை எடுத்துச்சொல்ல கடமைப்பட்டிருக்கிறேன். இதைப்பற்றி பேசுகின்ற நேரத்தில் காங்கிரஸ் கட்சியை சேர்ந்த அங்கத்தினர்கள் எதிர் தரப்பிலிருந்து பேசுகின்றவர்கள் குறைகளை மாத்திரம் எடுத்துச் சொல்லிக்கொண்டிருப்பதால் கனம் அமைச்சர் அவர்களுக்கு உற்சாகம் குறைந்துவிடும் என்று சொன்னார்கள். அவ்விதம் சொல்லுவதால் உற்சாகம் குறைந்துவிடும் என்று நான் கருதவில்லை. உற்சாகம் குறைந்துவிடும் என்ற நோக்கத்தை வைத்துக்கொண்டு பேசுவது என்றால் உற்சாகத்தை கொடுக்கக்கூடிய வார்த்தைகளை—கக்கன் அவர்கள் வாழ்க—கனம் கக்கன் அவர்கள் வாழ்க—அவர்களுடைய மேற்பார்வையில் ஹரிஜன மக்கள் நீடூழிகாலம் வாழ்க என்று சொல்லலாம். குறைகளை எடுத்துச் சொன்னால் அமைச்சர் அவர்களுக்கு திருப்தி அளிக்காது என்று சொன்னார்கள். செய்கின்ற காரியங்கள் நல்ல நோக்கத்தோடு செய்யப்படுகின்றனவா என்பதை ஆராயும் நோக்கம் மட்டுமல்ல, அந்த நோக்கங்கள் சரியானபடி நிறைவேற்றப்படுகின்றனவா, நிறைவேற்றப்படுவதற்கு செலவழிக்கப்படும் தொகை சரியான அளவுக்கு அதே நோக்கத்திற்காக பயன்பட்டதா என்று பார்ப்பது மிக முக்கியமான ஒரு அம்சமாகும். இதில் எந்த கட்சி ஹரிஜனங்களுக்கு வேண்டிய கட்சி, எந்த கட்சி ஹரிஜனங்களுக்கு நன்மை செய்தது என்பது பற்றியுள்ள அரசியல் கருத்து வேற்றுமைகள் வேகமாக விவாதிக்கப்பட்டது. ஒரு கருத்தை இந்த மாமன்றத்தில் நான் எடுத்துச் சொல்வேன்—ஹரிஜனங்களை புறக்கணித்து விட்டு தமிழகத்தில் எந்த கட்சியும் நிலைநிற்க முடியாது—ஆகையால்

24th March 1958] [Sri C. N. Annadurai]

தான் எந்த அரசியல் கட்சியாய் இருந்தாலும் சரி ஹரிஜனங்களுக்கு தாங்கள் தான் நன்மை செய்தோம் என்று சொல்லி பெருமை படுகின்றன. அந்த அளவுக்கு எல்லா கட்சிகளும் கூர்ந்து கவனிக்கத்தக்க வகையில் வளர்ந்திருக்கின்ற ஹரிஜன மக்களின் நல்லெண்ணம் மேலும் வளரவேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். இந்த மன்றத்தில் இதைப்பற்றி பேசிய நேரத்தில் ஒரு கனம் அங்கத்தினர் அவர்கள் கூறியதிலுள்ள ஆழ்ந்த பொருளை நாங்கள் எல்லாம் கவனிக்கமாட்டோம் என்ற எண்ணத்தில்—நான் அவ்விதம் சமாதானம் தேடிக்கொள்கிறேன்—சர்க்கார் செய்த நன்மைக்காக ஹரிஜன மக்கள் காங்கிரஸ் கட்சிக்கு நன்றி காட்டவேண்டும் என்று எடுத்துச் சொன்னார்கள்—இதில் யார் யாருக்கு நன்றி காட்டுவது என்பது பிரச்னை அல்ல. நீண்ட நாட்களாக ஒரு சமுதாயத்தை பழங்குடி மக்கள் என்று கருதப்படும் ஒரு சமுதாயத்தை, நாட்டின் முதுகெலும்பு என்று சொல்லப்படும் சமுதாயத்தை நாட்டின் உடைமைக்கும், உழைப்புக்கும், உயிரின் பாதுகாப்புக்கும் பொறுப்பு ஏற்றுக்கொண்ட ஒரு சமுதாயத்தை, இன்ன கட்சி என்று அல்ல, எந்த கட்சியிலுமுள்ள உயர்ந்த ஜாதி மனப்பான்மை பெற்றவர்கள் இன்று நேற்றல்ல, தலைமுறை தலைமுறையாக கொடுமைப்படுத்தி வந்திருக்கிறார்கள். அந்த கொடுமைகளை களைந்தெறிவதற்கு நமக்கு கிடைக்கும் ஒவ்வொரு சந்தர்ப்பமும் நாம் முன்னால் செய்த கேடுகளுக்கு கழுவாய் தேடிக்கொள்ள வேண்டும் என்கிற முறையில் செய்யப்படுகிறதே தவிர நன்றி பெறுவதற்காகச் செய்யப்படும் காரியம் என்று அதை யாரும் கருதுவதற்கில்லை. உலகத்திலே எந்த நாட்டிலும் ஜாதிப்பிரிவினால் தாழ்ந்த மக்கள் என்று ஒருசாரார் கருதப்படுவதில்லை. அமெரிக்க நாட்டிலே நீக்ரோக்கள் பிரச்னைபற்றி நண்பர்கள் மனதில் எண்ணிக்கொள்வார்கள். இந்த நாட்டிலுள்ள பழங்குடி மக்களுக்கும் அந்த நாட்டிலுள்ள நீக்ரோக்களுக்கும் அடிப்படையில் பலமான மாறுதல் உண்டு. நூறு ஆண்டு காலத்திற்கு முன்னால் அமெரிக்கா நாட்டில் இன்றைய தினம் உரிமைக்காக போராடும் நீக்ரோக்கள் அடிமைகளாக விலைக்கு வாங்கப்பட்டார்கள். அப்படி அடிமையாக நூறு ஆண்டுகளுக்கு முன்னால் விலைக்கு வாங்கப்பட்ட நீக்ரோக்கள் இன்று அமெரிக்காவில் அரசியல் சுதந்திரத்தை பரிபூரணமாக அனுபவிக்கிறார்கள். இன்று அமெரிக்கா அடைந்திருக்கின்ற தேசீய வளர்ச்சியை, அரசியல் வளர்ச்சியை, பொருளாதார வளர்ச்சியை அவர்கள் பரிபூரணமாக பெற்று இருக்கிறார்கள். இங்கும் அங்குமாக ஏதாவது அநாகரீகமாக நடந்து கொள்ளுகிறார்கள் என்றால் அதை கண்டிப்பதற்கு மற்ற அமெரிக்கர்கள் முன்வருகிறார்கள். நூறு ஆண்டு காலத்திற்கு முன்பு அடிமைகளாக விலைக்கு வாங்கப்பட்ட நீக்ரோக்கள் அமெரிக்கா நாட்டில் அடைந்திருக்கின்ற வளர்ச்சியை இந்த நாட்டில் புராணகாலம் தொட்டு, இதிகாச காலம் தொட்டு, நாயன்மார் ஆழ்வார்கள் காலந்தொட்டு, நிரந்தர அடிமைகளாக கருதப்படுகின்ற ஹரிஜன மக்கள் பெற்றுள்ள நிலைமையுடன் ஒப்பிட்டுப்பார்க்கவேண்டும். 25 ஆண்டுகளுக்கு ஒரு தடவை அவர்களுடைய பெயரில் மாத்திரம் ஒரு மாற்றத்தைப் பார்க்கிறோமே தவிர, அவர்களுடைய நிலையில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் எதுவும் ஏற்படவில்லை. ஆகவே இங்குள்ள ஹரிஜனங்களுடைய பிரச்னைக்கும் அமெரிக்க நாட்டிலுள்ள நீக்ரோ மக்களின் பிரச்னைக்கும் ஒப்புவமை பார்ப்பது திருப்தி தேடிக்கொள்வது இந்த பிரச்னைகளிலிருந்து ஓடி ஒளிந்து கொள்வதற்குத்தான் பயன்படுத்தலாமே தவிர உண்மையை உணர்ந்து கொள்வதற்கு பயன்படாது. இதுவரையில் ஹரிஜன மக்கள் ஜாதியில் அவர்கள் பிற்படுத்தப்பட்டவர்கள் என்று எடுத்துச் சொல்லப்பட்டாலும் மார்க்கத்தைப் பொறுத்தவரையில் அவர்கள் இந்து மார்க்கத்தை சேர்ந்தவர்கள் என்று எடுத்துச் சொல்லப்படுகிறது. இந்து மார்க்கத்தில் ஒரு பகுதியினர் என்று கருதப்பட்டாலும் அந்த இந்து மதத்தில் இருக்கின்ற மற்ற பகுதியினர் அவர்களை நீண்ட நாட்களாக தாழ்ந்த குல மக்கள் என்று ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். ஆகவே இந்த அரசாங்கம் மட்டுமல்ல இதற்கு முன்னால் இருந்த நீதிக் கட்சி அரசாங்கமும் அதற்கு முன்னால் இருந்த பிரிட்டீஷ் ஏகாதிபத்திய அரசாங்கமும் ஆதிதிராவிட மக்களுக்கு ஏதாவது சில பல நன்மைகள் செய்தார்கள் என்றால் அவர்களிடத்திலிருந்து நன்றி பெறுவதற்காக மட்டுமல்ல, அவர்கள் கழுவாய் தேடிக்கொள்ள, செய்த பாவத்தை போக்கிக்கொள்வதற்கு எடுத்துக்கொண்ட பெருமுயற்சி என்று

[Sri C. N. Annadurai] [24th March 1958

கருதி இதை ஒரு திருத்தொண்டு என்ற முறையில் தான் பார்க்கவேண்டும். சென்ற ஆண்டு இந்த துறையில் பேசும் பொழுது நான் குறிப்பிட்டது என் நினைவுக்கு வருகிறது. இந்த பிரச்னை எல்லா கட்சிகளுக்கு அப்பாற்பட்ட ஒரு தேசீயப் பிரச்னையாகும். இதில் கட்சி மாச்சரியங்கள் குறுக்கிடக் கூடாது என்று சொல்லியிருக்கிறேன். மனிதன் குறைகளுக்கு ஆட்பட்டவன். சந்தர்ப்பங்கள் வருகின்ற நேரத்தில் ஒரு கட்சி மற்றொரு கட்சியை உரசிக்கொண்டிருந்தால்தான் உள்ளத்திற்கு தெம்பு வருகிறது. அதே முறையில் ஒரு கட்சியை மற்றொரு கட்சி எதிர்த்துப்பேசிக்கொள்வதை நான் பொருட்படுத்தவில்லை. ஆனால் காங்கிரஸ் கட்சி இன்றைய தினம் செய்கின்ற இந்த காரியங்களை விட திறமையாக இந்தக் காரியங்களை இந்த நாட்டில் செய்வதற்கு வேறு கட்சிகளே இல்லை என்று காங்கிரஸ் காரர்கள் மார் தட்டிக்கொள்ளக் கூடாது. எனவே காங்கிரஸ் கட்சி இன்றைக்கு முழு அதிகாரங்களையும் ஏற்றுக்கொண்டிருக்கும் முதல் அமைச்சரவை, இந்த முதல் அமைச்சரவை கேட்கின்ற வரிப்பணத்தை நாட்டுமக்கள் தட்டாமலும் தயங்காமலும் கொட்டித்தருகிறார்கள். இவ்விதம் நிரம்ப வரிப்பணத்தைப் பெற்றுவருகிற காங்கிரஸ் கட்சி, நல்ல அதிகாரங்களைப் பெற்றிருக்கும் காங்கிரஸ் கட்சி, ஈடு எதிர்ப்பின்றி செல்வாக்கு பெற்றிருக்கும் காங்கிரஸ் கட்சி இந்த ஆதிதிராவிட மக்களுக்கு செய்யவேண்டிய காரியங்களை பரிபூரணமாக செய்திருக்கிறார்களா என்றால் ஆட்சியாளர்களை வாழ்த்த வந்தவர்கள்கூட வாழ்த்த ஆரம்பித்து எதிர்கட்சி குறைகளைத் தான் சொல்லுகிறார்கள் என்று சொல்லி அப்படியெல்லாம் நாங்கள் சொல்லமாட்டோம் என்று சொல்லி கடைசியில் அவர்களும் குறைகளை எடுத்துச் சொல்லத்தான் செய்கிறார்கள். அவர்கள் குறைகள், குறைகள் என்று தயக்கத்தோடு சொல்லுவதைப் பார்த்து பரிதாபப்படுகிறேன் ஒருசமயம் அவர்களுடைய கட்சித் தலைவர்கள், இவர்களைப் பார்த்து எதிர் கட்சிகளும் குறைகள் என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள், நீங்களும் குறைகள் என்று சொல்லிக்கொண்டிருந்தால் கட்சிக் கட்டுப்பாடு என்ன ஆவது என்று சொன்னார்களோ என்னவோ தெரியவில்லை. குறைகளை நாங்கள் குறைகள் என்று சொல்லும்பொழுது காங்கிரஸ் உறுப்பினர்கள் அதே குறைகளை நிலைமைகள் என்று எடுத்துச் சொன்னார்கள். நிலைமைகள் என்ன? கிராமங்களில் சரியானபடி பாதை அமைக்கப்படவில்லை. சரியானபடி கிணறுகள் வெட்டப்படவில்லை. சுடுகாடுகளில் காட்டப்படும் பேதங்கள் நீக்கப்படவில்லை என்றும், பள்ளிக்கூட மாணவர்களுக்கு தரப்படுகிற உபகார சம்பளங்கள் போதுமான அளவுக்கு சரியான காலத்தில் அவர்களிடம் போய்சேரவில்லை என்றும் சொன்னார்கள். இவைகளை குறைகள் என்று சொன்னால் கட்சிக் கட்டுப்பாடு குறுக்கே நிற்கிறது. இவைகள் குறைகள் அல்ல, நிலைமைகள் என்று காங்கிரஸ் கட்சியினர் நாசூக்காகக் கூறுகிறார்கள் என்று சொன்னால், இந்த பக்கத்திலுள்ள கட்சிகள் குறைகள் என்று இவைகளை எடுத்துச் சொல்லும்பொழுது கோபம் வருவதில் பயனில்லை. இந்த நிலைமை இருக்கிறது. இந்த நிலைமைகளை மாற்றுவதற்கு எந்தக் கட்சியும் குறுக்கிடாது. இருநூறு பேர்களுக்கு மேல் இருக்கும் இந்த மாமன்றத்தில் சனாதனத்தை, வைதீகத்தை, ஜாதியை ஆதரிக்கக் கூடியவர்கள் யாருமில்லை. அனைவரும் இன்றைய தினம் ஜாதியற்ற ஒரு சமுதாயத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதில் ஒருவருக்கொருவர் போட்டி போடக்கூடியவர்களாக இருக்கிறார்கள். ஹரிஜன மக்கள் பழங்குடி மக்கள், இந்த நாட்டின் முதுகெலும்பு போன்றவர்கள் என்ற முறையில் அவர்களை ஈடேற்ற செய்ய வேண்டும் என்பதில் ஒருவருக்கும்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு வந்து பலதுறைகளில் இன்றைய தினம் ஈடுபடுகிறார்கள். அப்படி ஈடுபடுகிற நேரத்தில் எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சிகளில் பிற கட்சிகளின் ஒத்துழைப்பை பெற இதுவரை என்ன முயற்சி எடுத்துக் கொள்ளப்பட்டது? இங்கே ஒரு அங்கத்தினர் ஹரிஜன மக்களுக்குச் செய்யப்படுகிற நல்ல காரியங்களுக்கு யார் யாரோ முட்டுக்கட்டை போடுவதாக குறிப்பிட்டு ஒரு கிராமத்திலுள்ள தகவலைப்பற்றி சொன்னார்கள். உண்மையிலேயே நான் அதைக் கேள்விப்பட்டு வருத்தப்படுகிறேன். அப்படி யாராவது முட்டுக்கட்டை போடுவார்களானால் நான் கனம் அங்கத்தினர் அவர்களுக்கு இரண்டு யோசனைகள் சொல்வேன். ஒன்று அவர் தனது சொந்த செல்வாக்கை முட்டுக்கட்டையை நீக்கும் அளவுக்கு வளர்த்து கொள்ள வேண்டும். மற்றொன்று அப்படி ஏதாவது முட்டுக்கட்டை போடு

24th March 1958] [Sri C. N. Annadurai]

வதாக போதிய தகவல் இருந்தால் இந்த மாமன்றத்தில் சொல்லுவதற்கு முன் பொறுப்பாக உள்ளவர்களிடம் அந்த நல்ல தகவல்களை எடுத்துச் சொல்லவேண்டும். ஏனென்றால் இந்த பிரச்னை கட்சிகளுக்கு அப்பாற் பட்டப் பிரச்னையாகும். ஆகவே இவைகளை முட்டுக்கட்டை போட்டு தடுத்து விடுகிறார்கள் என்று சொல்லுவதில் பயனில்லை. அப்படி முட்டுக்கட்டை போடக்கூடிய அளவுக்கு ஜாதி மனப்பான்மை இருக்கின்றது. அந்த ஜாதி மனப்பான்மையை நீக்கவேண்டும் என்பதற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட பல முயற்சிகளில் நம்முடைய அமைச்சரவை அளித்திருக்கின்ற அறிக்கை யில் நான் ஒரு பகுதியை பார்க்கிறேன்.

**"With a view to eradicate untouchability and give publicity, the Government have sanctioned the appointment of three Deputy sevaks aud three Assistants in each district".**

மூன்று சேவகர்கள், அவர்களோடு மூன்று துணை சேவகர்கள் மாவட்டம் ஒன்றுக்கு நியமித்திருக்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இவர்கள் இந்த மாவட்டத்தில் செய்த காரியங்கள் என்ன? ஆதிதிராவிட சமு தாயத்திலுள்ள குறைப்பாடுகளை நீக்குவதற்கு இவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள் என்ன? இதைப்பற்றியுள்ள தகவல்கள் எங்கே தரப்பட்டிருக் கின்றன? இவர்கள் தீண்டாமையை போக்குவதற்கு என்ன பிரசாரம் செய்தார்கள் என்கிற தகவல்கள் இதுவரை அறிவிக்கப்படவில்லை. நான் ஒரு மாவட்டத்தைச் சேர்ந்தவன் மட்டுமல்ல—நான் தவறுமல் நல்ல தற்கோ கெட்டதற்கோ மக்களை சந்திக்கிறேன். இப்படி ஒரு ஆறு பேர் தீண்டாமையை போக்குவதற்கு நல்ல ஊதியம் கொடுத்து நியமிக்கப்பட்டி ருக்கிறார்கள். நான் இவர்களை எங்கும் சந்தித்ததுமில்லை. நான் சந்திக்க வில்லை என்பது பொருள் படுத்தக் கூடியதல்ல என்று கூறிவிடலாம். ஆனால் நானே சந்திக்கவில்லை என்றால் சாதாரண மக்கள் எங்கே சந்திக்கப் போகிறார்கள்.

**"Posters depicting the evils of untouchability are printed and displayed to create an awakening in the hearts of the people at large."**

தீண்டாமை கொடுமை எப்படி எப்படி யிருக்கிறது என்பதை மக்கள் அறிந்து கொள்வதற்காக விளம்பரத் தாள்கள் அச்சடித் திருக்கிறோம் என்று போடப்பட்டிருக்கிறது. நான் பல விளம்பரத் தாள்களைப் பார்த்தது இல்லை. ஆனால் ஒரு விளம்பரத் தாள் எனக்குத் தெரியும். ஏன் அந்த விளம்பரத் தாள் மட்டும் தெரியும் என்றால், அது என் உள்ளத்திலே அப்படியே பதிந்திருக்கிறது. சர்க்கார் அவசரமான சில நடவடிக்கைகளில் ஈடுபட்டு பொது மக்களுடைய பணத்தை விரயப்படுத்தியிருக்கிறார்கள் என்பதை விளக்கும் சம்பவம் அது. அந்த வகையில் அந்த விளம்பரம் என் னுடைய கவனத்திற்கு வந்தது. தீண்டாமைச் சட்டத்தை வலியுறுத்து வதற்காக, "தொட்டால் தீட்டு" என்று சொன்னால் எந்த அளவுக்கு தண் டனை கிடைக்கும் என்ற கருத்தை விளக்குவதற்காக போடப்பட்ட விளம் பரத்தில் ஒரு பார்ப்பன உருவத்தைப் போட்டிருக்கிறார்கள். அப்படிப் போட்டிருந்த காரணத்தால் யாரோ சிலர் அதிருப்தியைக் கிளப்புகிறார் கள் என்ற காரணத்தைக் காட்டி, அந்த போஸ்டர்கள் எல்லாம் விநியோகிக்கப்படாமல் இருக்கின்றன. இதனால் பொது மக்கள் அதிருப்திப்பட் டார்கள், சிலர் மனம் கொதித்தார்கள் என்று சர்க்கார் அறிக்கையில் சமாதானம் சொன்னார்கள். உண்மையிலேயே பொது மக்கள் ஆத்திரப்பட்டார் களா என்பதைப் பரிசோதித்துப் பார்ப்பதற்கு, நாங்கள் சார்ந்திருக்கிற திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் சர்க்கார் அச்சடித்து ஒட்டாமல் விட்டுவிட்ட அதே விளம்பரத் தாள்போன்ற எங்கள் கழகச் செலவிலே 5,000 போஸ்டர்களை அச்சடித்து எல்லா கிராமங்களுக்கும் அனுப்பினோம். சில கிராமங்களில்—நான் சொல்லுவதைக் கேட்டு நீங்கள் ஆச்சரியப்படு வீர்கள்—பார்ப்பனர் வீடுகளில் கூட ஒட்டி வைத்தார்கள். யாரும் வருத்தப் படவில்லை. ஒரு சமூகத்தாருக்குக் கேடுபாடானது என்று இவர்களாகக் கருதிக்கொண்டு அந்தப் பணத்தை விரயம் ஆக்கியிருக்கிறார்கள். இது தவிர, தீண்டாமை ஒழிப்புக்கு இவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள்

[Sri C. N. Annadurai] [24th March 1958

என்ன வகையிலே இருக்கிறது என்று அறிவிக்கப்படவில்லை. என்னுடைய நண்பர்கள் எடுத்துச்சொன்னபடி, எதிர்க்கட்சிகள் எப்பொழுது அழைக்கப் பட்டன ? எப்பொழுது அழைத்தார்கள் ?

சென்ற ஆண்டு இதே துறையில் பேசுகிற காலத்தில் குறிப்பிட்டேன், "ஹரிஜன தினம் கொண்டாடுகிறார்கள். நாலைந்து அதிகாரிகள், பத்துப் பதினைந்து கண்டிராக்டர்கள், இருபது முப்பது வோட்டர்கள், ஐம்பது அறுபது போலீஸ்காரர்கள், இவர்கள் மத்தியிலே ஹரிஜன தினம் நடத்தப்படுகிறது" என்று. அப்படி நடத்துவதினால் மட்டும், ஹரிஜனங்களுக்கு வந்துவிட்ட குறைகளை நீக்குவதற்கு பொதுமக்களுடைய கவனத்தை ஈர்க்க முடியாது. இதைத் தேசீயத் திருவிழாவாக்க வேண்டும், எல்லாக் கட்சிகளும் இதிலே கலந்து கொள்ளவேண்டுமென்று குறிப்பிட்டேன். அதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சிகள் என்ன ? ஏன் முயற்சிகள் எடுத்துக்கொள்ளப் படவில்லை என்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஏன் எனக்கு நன்றாகத் தெரியும் என்று சொன்னால், எவ்வளவு தான் நமக்குள்ளே, கட்சிகளுக் குள்ளே "பேதம் வேண்டாம், பேதம் வேண்டாம்" என்று சொன்னாலும், நாம் அந்த பேதத்திலிருந்து விடுபடவில்லை, விடுபடப்போவதுமில்லை, விடுபடுவது ஜனநாயகத்திற்கு ஏற்றதும் அல்ல. ஆனால் முக்கியமான துறைகளில் கட்சிக்கட்டுப்பாடுகள் தான் முக்கியம் என்று கருதாமல், தேசீயத் திருவிழா வென்று கருதவேண்டும். அப்படிக் கருதுவதற்கு இவர்கள் எந்தெந்த வகையிலே காரியங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து பார்ப்பதற்கு நியமிக்கப்பட்ட ஷெட்யூல்டு வகுப்பினர் கமிஷனர் ரிப்போர்ட்டில்—இந்த ஆண்டு ரிப்போர்ட்டிலும் சரி, இதற்கு முன்னால் வந்த ரிப்போர்ட்டிலும் சரி—எடுத்துக்கொண்ட முயற்சிகள் தக்க விதத்திலே நிறைவேற்றப்படவில்லை என்று குற்றம் சாட்டி அதிலே குறிப் பிட்டிருக்கிறார்கள்.

"The State Governments have not still undertaken the welfare schemes of backward classes under any definite planned programme. Even while submitting schemes for the Second Five-Year Plan, they have attached importance only to the amount of expenditure that may be earmarked for theschemes."

என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதைத்தான் திரும்பத் திரும்ப நாம் பார்க்கிறோம். 17 லட்சம் ரூபாய் செலவழித்த இடத்தில் 18 லட்சம் ரூபாய் செலவழிக்கிறோம், 19 லட்சம் ரூபாய் செலவழித்த இடத்தில் 20 லட்சம் ரூபாய் செலவழிக்கிறோம் என்பதைத்தான் பார்க்கிறோமே தவிர, தெளி வாகத் திட்டமிட்டுத் திறமையாக நிறைவேற்றினோம் என்று சொல்லக் கூடிய விதத்தில் ராஜ்ய சர்க்கார்கள் நடக்கவில்லை என்று—நாங்கள் அல்ல—ஷெட்யூல்டு வகுப்பினர் கமிஷனர் அறிக்கையிலே குறிப்பிட்டிருக் கிறார். மற்றொன்று, எந்த வகையிலே இந்த பிரச்னை தீர்க்கப்படவேண்டு மென்பதைக் குறித்து மிகத் தெளிவான முறையில் அந்த அறிக்கையில் குறிப்புகள் காணப்படுகின்றன. இந்தப் பிரச்னையில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன என்பதை இந்த மன்றத்தில் உள்ள நம்முடைய நண்பர்கள் உணர்ந்து பார்க்க வேண்டுமென்று வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். ஹரிஜன மக்களை வறுமைப் பிடியிலிருந்து நீக்குவது ஒரு பகுதி. ஹரிஜன மக்களை, சமுதாயத்திலே தாழ்த்தப்பட்ட மக்களை, சமூகக் கொடுமை யிலிருந்து விடுவிப்பது மற்றொரு பகுதி. ஒன்றுக்கொன்று ஓரளவுக்குத் தொடர்பு கொண்டது. ஆனால் இரண்டும் வேறு, வேறு என்பதும், ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டிருந்தாலும், இந்த இரண்டுக்கும் இடையில் அதிகமான அளவு மாறுபாடும் உண்டு என்பதையும் நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

நான் இருக்கிற காஞ்சிபுரம் நகராட்சி மன்றத்திற்கு பல்லாண்டுகளுக்கு முன்னால் ஒரு ஆணையாளர் வந்திருந்தார். அவர் பழங்குடி வகுப்பைச் சேர்ந்தவர். அவர் வந்தவுடனே வீடுகளுக்கெல்லாம் வீட்டு வரியை அதிகப் படுத்தினார். அதிகப்படுத்திய உடனே, வீட்டுக்காரர்கள் மனுக்கொடுத்துக் கொண்டதன் பேரில் முன்னாலே போட்ட வரியைக் குறைக்கவேண்டுமா என்று பார்ப்பதற்காக, அந்த ஆணையாளர் வீடுகளைப் பார்வையிடச் சென்றார். அப்பொழுது நான் பத்தாவது வகுப்பை முடித்துவிட்டு, கல்லூரியிலே

24th March 1958] [Sri C. N. Annadurai]

படிக்கிறேன் என்ற நினைவு. அவர்கள் சென்ற நேரத்தில் உயர்ந்த ஜாதிக்காரர்கள் அவர்களை வரவொட்டாமல் தடுத்தார்கள். அவர்களைப் பார்த்து ஆணையாளர் "நான் இந்த நகராட்சி மன்றத்தின் ஆணையாளர்" என்று சொன்னார். அதற்கு அவர்கள் "அது தெரிந்துதான் நாங்கள் உங்களை வரவிடவில்லை" என்று சொன்னார்கள். "நான் நகராட்சி மன்றத்தின் ஆணையாளர் என்று தெரிந்துமா என்னை வரவிடவில்லை" என்று கேட்டார். அதற்கு அவர்கள் "நீங்கள் நகராட்சி மன்றத்தின் ஆணையாளர் என்று தெரிந்துமட்டும் அல்ல, எந்த வகுப்பைச் சேர்ந்தவர் என்று தெரிந்தே நாங்கள் உங்களை வரவிடவில்லை" என்று சொன்னார்கள். பத்து பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நடந்த விஷயத்திற்கு இப்போது என்ன என்று கேட்கலாம். தீண்டாமை பிரச்சனை பணம் படைத்துவிட்டால் மட்டும் நீங்கி விடாது. படித்து விட்டால் மட்டும் போய் விடாது. பதவியில் உட்கார்ந்து விட்டால் மட்டும் போய்விடாது. மக்களுடைய மனதில் மாறுதல் ஏற்பட்டால் ஒழிய இந்தப் பிரச்சனைக்கு நிரந்தரமான பரிகாரம் கிடையாது என்பதை வலியுறுத்துவதற்கே இதனைச் சொல்கிறேன். அப்படி வலியுறுத்துகின்ற நேரத்தில் அறிக்கையில், சாதியை ஒழித்தால் ஒழிய தீண்டாமையை ஒழிப்பதற்கு நல்ல மார்க்கம் இல்லை என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. **"Caste is one of the biggest things in India to-day if not the biggest and this has been recognised during elections"**

தேர்தல் காலத்தில் சாதியம் தலைவிரித்தாடுகிறது என்பது தெரிகிறது. சாதி என்பது மிகவும் முக்கியமான பிரச்சனை.

**"Most of the biggest cities are the strongholds of casteism."** சாதி வெறி நகரங்களில் இருக்கிறது என்று அறிக்கை அறிவித்துவிட்டு சாதியத்தை ஒழிப்பதற்கு வழி என்ன என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படி போட்டிருக்கிற திட்டங்களுக்கு நீங்கள் எங்கள் கட்சியை துணைக்கு அழைக்கலாம். காங்கிரஸ் கட்சிக்காரர்கள், சாதி வேற்றுமை கூடாது என்று பேச ஆரம்பிப்பதற்கு முன்பே, நான் சார்ந்திருக்கும் கட்சி பேசி இருக்கிறது. நீங்கள் எங்கள் அளவுக்கு கிணறு வெட்டினீர்களா என்று கேட்டால், வெட்டினது இல்லை, பள்ளிகூடங்கள் கட்டினீர்களா—என்று கேட்டால்—கட்டினது இல்லை, பொலி காளைகளை வாங்கிக் கொடுத்தீர்களா என்று கேட்டால்—வாங்கிக் கொடுத்தது இல்லை, பொறுக்கு விதைகளை வாங்கி தந்தீர்களா என்று கேட்டால்—பொறுக்கு விதைகளை வாங்கித் தந்தது இல்லை. ஏன் வாங்கித் தரவில்லை என்றால் நாங்கள் கஜானா பக்கத்தில் உட்கார்ந்து இருக்கவில்லை. ஆனால் நீங்கள் கஜானா பக்கத்தில் உட்கார்ந்து இருக்கிறீர்கள்.

எங்கள் கட்சி பூர்வோத்திரத்தைப் பற்றி நிதி அமைச்சர் சுப்ரமண்யம் அவர்கள் அன்றொரு நாள் பேசினார்கள். அவரை நான் மனக்கண்ணால் பார்க்கிறேன். காங்கிரஸ் கட்சி பூர்வோத்திரத்தில் சாதி முறையை ஒழிக்க வேண்டும் என்று பேசக்கூடாது என்று சநாதன காங்கிரஸ்காரர்கள் தடுத்திருந்தார்கள். லோகமான்ய பால கங்காதர திலக் அவர்கள் "இது ஒரு அரசியல் கட்சி ஸ்தாபனம், சமுதாயத்தை திருத்த தேவையில்லை" என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு பிறகு காங்கிர கட்சியில் பல மாறுதல்கள் ஏற்பட்டன. அதன் பூர்வோத்திரம் படிப்படியாக வளர்ந்தது. அதற்கு பிறகு அரிஜனங்களுக்கு மான்யம் ஒதுக்கும் பெருந்தன்மை காங்கிரஸ் கட்சிக்குப் பிறந்தது. காங்கிரஸ் கட்சி காலடி எடுத்து வைப்பதற்கு முன்பே, நீங்கள் கனம் கக்கன் அவர்களை இங்கு அமைச்சராக அமர வைத்து, அழகு பார்த்து, ஆனந்தப்பட்டு, பெருமைப்பட்டு, வாழ்த்தி, வழிபடுவதற்கு முன்பே, இதே துறையில் எம்.சி. ராஜா அவர்கள் அமர்ந்திருக்கிறார்கள். பழங்குடி பெருமக்கள் பெருமைப் படத்தக்க பதவிகளில் அமர்ந்து வேலைப் பார்த்து இருக்கிறார்கள். ஆதிதிராவிட மக்களுக்கு வந்துள்ள குறைபாடுகளை நான் சார்ந்திருக்கிற கட்சியும், அதற்கு பூர்வோத்திரமாக கூறப்பட்ட சுயமரியாதை கட்சி, நீதிக் கட்சி, நீண்ட காலத்திற்கு முன்னேயே கவனித்து வந்து இருக்கிறது.

ஒரு கனம் அங்கத்தினர், ஏதோ ஒரு மகா நாட்டில், ஆதித்திராவிட மக்களை சமமாக நடத்தவில்லை என்று குறிப்பிட்டார்கள். உண்மையிலேயே விளக்கம் சொல்வார்களேயானால், அதற்குப் பொறுப்பாக இருக்கக்கூடியவர் யாராக இருந்தாலும், அவரை கட்சியிலிருந்து விலக்குவதற்கு நான்

தயாராக இருக்கிறேன். அதே நேரத்தில், அப்படிப்பட்ட காரியங்களை—சாதி முறையை ஒழிப்பது, சாதி முறையை ஒழிப்பதன் மூலம் பழங்குடி மக்களின் நீண்ட காலக் குறைபாடுகளை நீக்குவதற்கு—எல்லா கட்சியிலும் இருக்கும் தீவிர வாதிகள் ஒன்றுபட வேண்டும். ஒரு கட்சியிலிருந்து வேறு கட்சிக்குப் போவது சகஜம், லாபமானதும் கூட: அதை இங்கேயே கூட நான் சாட்சிகளாக காண்கிறேன். ஆனால் கட்சி விட்டு கட்சி மாற வேண்டும் என்று நான் சொல்லவில்லை, அழைக்கவில்லை. கட்சிக் கட்டுப்பாட்டுக்குட் பட்டே, குறிப்பிட்ட நல்ல காரியத்தில் நாம் ஈடுபடலாம். அப்படிப்பட்ட ஒரு நல்ல திருத்தொண்டு அரிஜன முன்னேற்றத்திற்கு பாடுபடுவது, பழங்குடி மக்களை விடுவிப்பது. இதில் சர்க்கார் எடுத்துக் கொள்ளும் எல்லா முயற் களிலும் திராவிட முன்னேற்றக் கழகம் துணை நிற்கும். ஆனால் ஓடக்கூடிய குதிரைக்கு அதன் உடலில் தழும்பு ஏறுதபடி சவுக்கு தந்து ஓட்டுவது போல, ஒரு நல்ல காரியத்தை மேலும் நல்ல முறையில் செய்ய வேண்டும் என்று தூண்டக்கூடிய வகையில் நாங்கள் இந்த வெட்டுத் திட்டத்தை வைத்திருக்கிறோம் என்று கூறிக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** கனம் சபாநாயகர் அவர்களே, ஏழை பின்தங்கிய ஹரிஜன மக்களின் மாணியக் கோரிக்கைக்கு இரண்டு மணி நேரம் அதிகமாகவே கொடுத்து அநேக நண்பர்கள் பேசுவதற்கு வாய்ப்பு அளித்ததற்கு முதலில் என்னுடைய நன்றியை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந்தப் பிரச்னை எவ்வளவு முக்கியமானது, இதில் எவ்வளவு கவனம் செலுத்தவேண்டும் என்பது இதிலிருந்தே நன்றாகத் தெரியவரும். ஒரு தாய் தன்னுடைய மெலிந்த குழந்தையை எப்படி பாதுகாத்து வருவாளோ, அந்தக் குழந்தை எப்படி நோயற்று வாழ விரும்புவாளோ, அதைப் பாதுகாப்பதற்கு எவ்வளவு அக்கரை, எடுத்துக்கொள்ளுவாளோ, எவ்வளவு நன்றாக அதை வளர்ப்பாளோ அதைப்போலவே இந்த சபையிலுள்ள அங்கத்தினர்கள் எல்லோரும் ஹரிஜனங்களுடைய பாதுகாப்பு சம்பந்தமாக பல யோசனைகளைக் கூறி, தீண்டாமையைப்போக்க எவ்வளவுதூரம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற ஆலோசனைகளைக்கூறி இருக்கிறார்கள். ஹரிஜன சமுதாயம் நல்ல உயர்ந்த நிலைமைக்கு வருவதற்கு எவ்வளவோ ஆலோசனைகளைக் கூறியதற்காக அவர்களுக்கு நான் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மதிப்பிற்குரிய திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் கடைசியாக பேசும்போது ஹரிஜன முன்னேற்ற விஷயத்தில் எல்லோரும், எந்தவிதமான பாகுபாடும் இன்றி, ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அதை நான் வரவேற்கிறேன். ஆனால் அதை அவர் தன்னு டைய இருதய பூர்வமாக சொன்னாரோ என்னமோ எனக்கு அது சந்தேக மாகத்தான் இருக்கிறது. அவர் தன்னுடைய இருதய பூர்வமாகத்தான் சொல்லி இருப்பார் என்றே நான் நம்புகிறேன். (சிரிப்பு). அவர் எவ்வளவு தூரம் அரசியலில் ஈடுபட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அவர் பேசியதிலிருந்தே நன்றாகத் தெரியவரும். அவர் பேசியதிலிருந்தே உண்மை யாகவே நான் சந்தேகப்பட வேண்டியதாக இருந்தது. அவர் பேசும்போது குறிப்பிட்டார். முன்பு ஒரு போஸ்டர் இருந்தது, அதில் படம் போட்டிருந்தது. அதில் பூணூல் போட்டிருந்ததால் அதை சிலர் ஆட்சேபித்தார்கள் என்று அந்தப் படத்தை நிறுத்தி விட்டார்கள் என்று குறிப்பிட்டார். அப்படி இருந்தும் தாங்கள் தான் பிராமண சகோதரர்கள் இருக்கும் வீடுகளில் ஒட்டுவதற்கு ஏற்பாடு செய் தோம் என்றும் குறிப்பிட்டார். அதிலிருந்தே அவருடைய குட்டு வெளிப் பட்டு விட்டது. பிராமண சகோதரர்களை அவர்கள் எப்படிச் சொல்லி வந்தார்கள் என்பது நமக்கு நன்கு தெரியும். அவர்கள் பிராமணர்களை எவ்வளவு துவேஷ மனப்பான்மையில் சொல்லி வந்தார்கள் என்பது " பார்ப்பனனையும் பாம்பையும் கண்டால் முதலில் பார்ப்பனனைக் கொல்லு" என்று அவர்கள் சொல்லி வந்தது நமக்கு நன்றாகத் தெரியும். ஆகவே ஏதோ இன்றைக்கு ஹரிஜன சேவையில் ஈடுபட்டிருக்கிறோம் என்று அவர்கள் சொல்லிகொள்ளுகிறார்கள். குறிப்பாக இந்து சமுதாயத்தில் ஹரிஜன முன்னேற்றத்தில் பிராமண சகோதரர்கள் தான் அதிகமாகப் பாடு

24th March 1958] [Sri P. Kakkan]

பட்டிருக்கிறார்கள். அவர்கள்தான் முதற்படியாக நின்று வேலை செய்திருக்கிறார்கள். தேசப் பிதா மகாத்மா காந்தி அவர்கள் ஹரிஜனப் பிரச்னைக்கு முக்கியத்துவம் கொடுத்தபோது அதற்கு என்று முதலில் பாடுபட வந்தவர்கள் பிராமணர்கள் தான் என்பதை கனம் சகோதரர் அண்ணாத்துரைக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அகில இந்திய ஹரிஜன சேவாசங்கத்தை ஏற்படுத்தினர். அப்பொழுது தமிழ் நாட்டிலும் ஹரிஜன சேவா சங்கத்தை ஆரம்பித்தார்கள். அதற்கு மதிப்பிற்குரிய ராஜாஜி அவர்கள் தலைவராக இருந்தார். அதற்குப் பிறகு காலஞ்சென்ற மாஜி மந்திரி டி.எஸ்.எஸ். ராஜன் அவர்கள் தலைவராக இருந்தார். அதற்குப்பிறகு காலஞ்சென்ற ஏ. வைத்தியநாத அய்யர் அவர்கள் தலைவராக இருந்தார். இப்படிப்பட்ட தலைவர்கள் பலர் இந்து சமுதாயத்திலிருந்து பணியாற்றி வந்திருக்கிறார்கள். இப்படி பல பிராமணர்கள் பணியாற்றி வந்ததை நாம் மறந்து விடக்கூடாது. கட்சி வளர்ப்புக்காக என்று ஜாதி பாகுபாட்டை சில நாட்களுக்குத்தான் சொல்லிக்கொண்டிருக்கலாம். அப்படிச் சொல்லிக்கொண்டிருந்து ஒன்றையும் சாதித்துவிட முடியாது. இனி மேலாவது அந்த ஜாதி இந்த ஜாதி என்றும் அந்த இனம் இந்த இனம் என்றும் சொல்லிக்கொண்டு வருவதில் பிரயோசனம் இல்லை. இப்படிச் சொல்வதும் நல்லது அல்ல. அப்படிச் சொல்லி வந்தால் உண்மையான முன்னேற்றத்தை நாம் காண முடியாது. குறிப்பாக பிற்பட்ட இனத்தவர்களை, தாழ்த்தப்பட்டவர்களை முன்னேற்றமடையச் செய்து விட முடியாது என்பதை இந்த சபையில் நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மதிப்பிற்குரிய நண்பர் ஆசைத்தம்பி அவர்கள் பேசியபோது சில பெரியவர்களைப்பற்றி குறிப்பிட்டார். அதிலும் குறிப்பாக டாக்டர் அம்பேத்காரைப் பற்றி குறிப்பிட்டார். மகாத்மா காந்தியைப்பற்றி குறிப்பிட்டார். வைக்கம் வீரரைப்பற்றி குறிப்பிட்டார். டாக்டர் அம்பேத்காரரைப்பற்றி குறிப்பிட்டபோது உண்மையிலேயே அதை நான் வரவேற்கிறேன். ஆனால் அவர் தனித் தொகுதி கேட்டார். அதாவது ஹரிஜனங்களுக்கு ஹரிஜனங்களே வோட்டுச் செய்யவேண்டும் என்று கேட்டார். ஆனல் மகாத்மா காந்தி என்ன கேட்டார் என்றால் கூட்டுத்தொகுதிதான்வேண்டும் என்றும் ஆனல் ஹரிஜனங்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கவேண்டும் என்றும் சொன்னார். அதற்காகத்தான் அவர் உண்ணா விரதமும் இருந்தார் என்பதை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். மகாத்மாஜி கேட்டுக்கொண்டதால்தான் நான் இன்றைக்கு மந்திரியாக இருக்கிறேன் என்பதை உங்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இல்லாவிட்டால் இப்படி நான் வந்திருக்கவே முடியாது. அம்பேத்கார் சொல்லியபடி இருந்தால் நான் இப்படி வந்திருக்க முடியாது என்பதை கனம் ஆசைத்தம்பி அவர்கள் உணர வேண்டும். அவர் வடக்கு தேசத்தின் ஹரிஜன் என்றும் தெற்கு தேசத்தின் ஹரிஜன் என்றும் எந்தவிதமான பாகுபாடும் சொல்லவில்லை. அகில இந்திய ரீதியில்தான் கேட்டுக்கொண்டார். அவர் அகில இந்தியாவுக்குத்தான் பாடுபட்டாரே தவிர வடக்கு தெற்கு என்று பேசும் அன்பர்களைப் போல வடக்கு ஹரிஜனங்களுக்குமட்டும் பாடுபடவில்லை. இந்தியா தேசத்திலுள்ள எல்லா ஹரிஜனங்களுக்கும் பாடுபட்டார். இதை நான் கனம் ஆசைத்தம்பி அவர்களுடைய ஞாபகத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். அடுத்தபடியாக அவர் வைக்கம் வீரரைப்பற்றி குறிப்பிட்டார். அவர் காங்கிரசைச் சேர்ந்திருந்தார் என்பது நன்றாகத் தெரியும். அவரைப் பற்றி சொல்லும்போது அவர் எவ்வாறு சீர்திருத்தம் செய்வதற்கு பாடுபட்டார் என்பதைச் சொல்ல மறந்து விட்டார். பெரியார் ராமசாமியினுடைய சில காரியங்களைத்தான் எடுத்துக்கொள்ளுகிறார்களே தவிர எல்லா காரியங்களையும் எடுத்துக்கொள்வதாக இல்லை. பெரியார் ஆதி திராவிடர் என்பதில் ஆதி என்ற பதத்தை எடுத்துவிட வேண்டும் என்று சொன்னார். ஹரிஜன மக்கள் முன்னேற்றமடைய வேண்டும், அவர்கள் மற்ற இந்து சமூகத்துடன் சரிசமமாக வாழ வேண்டும் என்று மகாத்மா காந்தி சொல்லி வந்தார். அதனால் அவருடைய பெயரை எப்பொழுதும் நான் பேசும்போதெல்லாம் சொல்லிக் கொண்டு வருகிறேன். அத்துடன் காங்கிரஸ் கட்சியின் பெயரையும் சொல்லிக் கொண்டு வருகிறேன். காரணம் காங்கிரஸ் இயக்கம் தான் அதற்கு அரும்பாடுபட்டு வந்தது. சட்டத்தினால் ஒருவாறு பிற்பட்ட மக்களுக்கு முன்னேற்றம் காண முடியும் என்றாலும் அதையே கையாண்டு வந்தால் முடியாது என்று சொல்லிவந்தார். ஜாதி இந்துக்களுடைய

[Sri P. Kakkan] [24th March 1958

மனம் மாற வேண்டும் என்றுதான் அவர் சொல்லிக்கொண்டு வந்தார். சட்டத்தின் மூலமாக ஒரளவு அந்தக் குறையை அகற்றினாலும் கூட மக்களுடைய மனதை மாற்றுவதற்கு அவர் ஏற்பாடு செய்தார் என்பதை யாரும் மறக்க முடியாது. மக்களை ஒன்று திரட்டி இந்த சமூகத்திலுள்ள ஒரு பெரிய மாசினை அகற்றுவதற்கு அவர் அரும்பாடு பட்டார். அதற்காகத்தான் ஆலயப் பிரவேசத்தை ஆரம்பித்து வைத்தார். அதில் முதன் முதலில் பாடுபட்டவர் எங்களை கருதிதான் என்று நண்பர் ஆசைத்தம்பி சொன்னார். அது சரியல்ல. ஆலயத்திற்குள் முதன் முதலில் ஹரிஜனங்களை இழுத்துச்சென்றவர் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த வ. வைத்தியநாத அய்யர் என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். கனம் அண்ணாதுரை அவர்கள் பேசும்போது குறிப்பிட்டார் அந்தக் காலத்தில் தங்களிடம் கஜானா இல்லை என்று. ஜஸ்டிஸ் கட்சி காலத்தில் அவர்கள் பக்கத்தில் கஜானா இல்லையா என்று கேட்கிறேன். கஜானா அவர்கள் பக்கத்தில் தான் இருந்தது, அவர்களுக்கு வேண்டியவர்கள் பக்கத்தில் தான் கஜானா இருந்தது. அந்த சமயத்தில் ஹரிஜனங்களுக்கு எந்த இடத்திலாவது இடத்தை ஜாரி செய்து கொடுத்திருக்கிறார்களா என்று கேட்கிறேன். (சிரிப்பு). அல்லது பத்து மாடுகளை வாங்கிக்கொடுத்திருக்கிறார்களா? அந்த ஏழை ஹரிஜனங்களுக்கு ஏதாவது செய்திருக்கிறார்களா என்று கேட்கிறேன்? அவர்கள் நினைத்திருந்தால் ஹரிஜனங்களுக்குக் கொடுத்திருக்கலாம்.

SRI C. N. ANNADURAI : இப்பொழுது அரிஜன மக்களுக்கு என்ன குறைகள் எந்த துறைகளில் இருக்கின்றனவோ அந்த குறைகள் தான் அப்பொழுதும் இருந்தன. இப்பொழுதுள்ள குறைகள் தான் ஜஸ்டிஸ் கட்சி காலத்திலும் ஹரிஜனங்களுக்கு இருந்தது. அப்பொழுது இருந்ததற்கும் இப்பொழுது இருப்பதற்கும் எந்த அளவிலும் வித்தியாசம் இல்லை. அப்படியே தான் இருக்கிறது.

THE HON. SRI P. KAKKAN : என்னென்ன காரியங்கள் செய்திருக்கிறார்கள் என்று பார்த்தால் தெரியும். நடைமுறையில் மக்களுக்கு காரியங்களை செய்து காண்பித்தால்தான் தெரியும். பேச்சால் மட்டும் பிரச்னையை தீர்த்துவிட முடியாது. பேச்சால் மட்டும் மக்களை நம்பச் செய்து விட முடியாது. இதை நான் அவர்களுக்கு பணிவுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். வெள்ளையன் ஆண்ட காலத்தில் ஜஸ்டிஸ் கட்சி ஆண்ட காலத்தில் இவர்களுக்கு அவர்கள் உதவியாக இருந்த காலத்தில் எத்தனை ஹாஸ்டல்களை கட்டியிருக்கிறார்கள் ? ஆனால் இப்பொழுது சென்னை மாகாணத்தில் எங்கேயெல்லாம் ஹைஸ்கூல்கள் இருக்கின்றனவோ அங்கேயெல்லாம் அதிகப்படியான ஹாஸ்டல்கள் கட்டப்பட்டிருக்கின்றன. எங்கேயெல்லாம் பெண்கள் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றனவோ அங்கேயெல்லாம் ஹாஸ்டல்கள் கட்டப்பட்டிருக்கின்றன. எல்லா இடங்களில் இல்லாவிட்டாலும் பெரும்பகுதியான இடங்களில் கட்டப்பட்டிருக்கிறது. அவர்களுடைய காலத்தில் எங்கேயோ ஒரு இடத்தில் தான் கட்டியிருந்தார்கள். வெளியூர்களில் எல்லா இடங்களிலும் ஹாஸ்டல்கள் கட்டாவிட்டாலும் பெரும்பகுதியான இடங்களில் கட்டியிருக்கிறோம். ஹரிஜனங்களுக்கும் பிற்பட்ட இனமாணவர்களுக்கும் எவ்வளவு தூரம் உதவி அளிக்க முடியுமோ அவ்வளவு தூரம் வசதிகளை அளித்துக்கொண்டு வருகிறோம். எங்களிடம் உள்ள நிதிக்குத் தக்கவாறு அவர்களுக்கு வசதிகளைச் செய்து கொண்டு வருகிறோம் என்பதையும் அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வெட்டுப் பிரேரபணையை பிரேரேபித்த கனம் ஜகன்னாதன் அவர்கள் பேசும்பொழுது ஹரிஜனங்கள் பொருளாதாரத் துறையில் முன்னேறுவதற்கு அரசாங்கம் எந்த விதமான வழிவகையும் செய்யவில்லை என்ற தோரணையில் பேசினார்கள். நூற்றுக்கு நூறு செய்துவிட்டோம் என்று நான் மார் அடித்துக்கொள்ளவில்லை. (சிரிப்பு.) (குறுக்கீடு.) மார் தட்டிக் கொள்ளவில்லை.

MR. SPEAKER : Order, Order. தயவு செய்து மந்திரி அவர்களை பேச விடுங்கள்.

24th March 1958]

THE HON. SRI P. KAKKAN : குற்றம் உள்ள நெஞ்சு குறுகுறு என்று அடித்துக் கொள்ளும் என்று சொல்வதுண்டு. அதேபோல அவர்கள் தப்பு அர்த்தத்தில் அதை எடுத்துக்கொள்ளுகிறார்கள். நான் சரியான அர்த்தத்தில் தான் சொன்னேன். பிரமாதமாக எல்லாவற்றையுமே செய்துவிட்டோம் என்று நான் சொல்லவில்லை. ஏதோ ஓரளவுக்கு செய் திருக்கிறோம் என்பதை நான் சொல்லாமலே அங்கத்தினர்கள் ஒத்துக் கொள்ளுவார்கள். தமிழகத்திலே மக்கள் பேசிக் கொள்ளுவதை நாம் பார்க்கிறோம். எதற்கெடுத்தாலும் அரசாங்கம் ஹரிஜனங்களுக்கு அள்ளிக் கொடுக்கிறார்கள். மாடு வாங்குவதற்கு கடன், வீடுகள் கட்டிக்கொள்ளுவ தற்கு இனம், கிணறுகள் வெட்டிக்கொள்ளுவதற்கு மான்யம், நிலங்கள் ஜாரி செய்து கொடுப்பது, ஹாஸ்டல்கள் கட்டிக் கொடுப்பது, ஹரிஜன மாணவனுக்கு மாதம் ஒன்றுக்கு ரூ. 15 கொடுப்பது, ஹரிஜன காலேஜ் மாணவர்களுக்கு சலுகைகள் வழங்குவது இப்படி பல துறைகளில் ஹரி ஜனங்களுக்கு அள்ளிக் கொடுக்கிறார்கள் என்று பேசிக் கொள்ளப்படுகிறது. இதைக் கண்ணாரப் பார்க்கிறோம், காதால் கேட்கிறோம். அப்படியிருந்த போதிலும் கனம் ஜகன்னாதன் அவர்கள் ஹரிஜனங்களுக்காக அரசாங்கம் ஒன்றுமே செய்யவில்லை என்று சொல்லுவது உண்மையிலேயே சிறிது வருத்தத்தை கொடுக்கிறது. செய்த காரியங்களை சொல்லுவோம். செய்த காரியங்களைச் சொல்லி நன்றி தெரிவித்து, மேலும் அதிகமாகச் செய்ய வேண்டுமென்று சண்டைபோட்டு வாங்குவதற்கு அங்கத்தினர்கள் முன் வரவேண்டும். எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் மட்டுமல்ல, ஆளும் கட்சி அங்கத்தினர்களும் சிலர் ஒன்றும் செய்யப்படவில்லை என்று சொன்னார் கள். செய்ததை சொல்லிவிட்டு மேலும் செய்ய வேண்டுமென்று வற் புறுத்தவேண்டும். மேலும் ஹரிஜனங்களுக்கு நன்மைகளை செய்வதற் காகத்தான் நாம் இந்தச் சபையிலே வீற்றிருக்கிறோம். நம்முடைய கடமையைச் செய்து மேலும் உரிமையை பெறுவதற்கு அங்கத்தினர்கள் முன்வருவதை பாராட்டுகிறேன். கனம் ஜகன்னாதன் அவர்கள் பேசும் பொழுது தீண்டாமையை போக்குவதற்கு இந்த அரசாங்கம் மேலும் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று சொன்னார்கள். தீண்டாமையை போக்குவதற்கு அரசாங்கம் இதுவரையில் என்னென்ன நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது என்ற வரலாற்றினை முதலிலே இப்பொ ழுது சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் கனம் அண்ணாத்துரை அவர்கள் டெப்யூடி சேவக்குகள், உதவி சேவக்குகள் நியமித்திருக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறதே, அவர்களை பார்த்ததே கிடையாது என்று சொன்னார்கள். போன வருஷத்திலே இதே பட்ஜெட் விவாதத்தின் போது இது பற்றி சொன்னேன். உண்மையிலே ஹரிஜன் சேவையில் ஆர்வம் இருந்தால் அவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்பதை தெரிந்துக்கொண்டிருக்கலாம். அந்தந்த ஜில்லாவில் ஹரிஜன இலாகா அதிகாரியின் ஆபீஸ் இருக்கிறது. அது ஹரிஜன மக்களுக்கு சேவை செய்துவருகிறது என்பதைத் தெரிந்துக்கொண்டிருக்கலாம். அதற் காக ஒரு தனி அதிகாரி போட்டிருக்கிறோம். அநேக அன்பர்கள் பிரசார கர்களாக வேலை செய்து வருகிறார்கள். அப்படியெல்லாம் இருக்கும்பொழுது ஒன்றும் தெரியாதது போல் இங்கு வந்து அப்பேற்பட்ட அதிகாரிகள் இருக்கிறார்களா என்பதே தெரியவில்லை என்று சொன்னால், அதை நான் ஒத்துக்கொள்ள முடியாது. கனம் அண்ணாத்துரை அவர்கள் செங் கல்பட்டு ஜில்லாவாசி. அந்த ஜில்லா ஹரிஜன இலாகா ஆபீஸ் சென்னையிலே இருக்கிறது. அங்கு சென்று அவர்கள் ஹரிஜன முன்னேற்றத்திற்காக செய்யும் வேலையை கண்ணால் பார்த்து, காதால் கேட்டறிந்து தீண்டாமை ஒழிப்புக்கு பூரணமாக பாடுபடவேண்டுமென்று அவர்களை கேட்டுக்கொள்ளு கிறேன்.

முதலிலே இப்பொழுது தீண்டாமையை போக்குவதற்கு அரசாங்கம் என்னென்ன வழிவகைகள் செய்திருக்கின்றன என்பதை எடுத்துச் சொல் லுகிறேன். தீண்டாமை ஒழிப்புக் கொள்கையை பரப்புவதற்காக அரசாங்கம் டெப்யூடி சேவாக்குகளையும், உதவி சேவாக்குகளையும் நியமித்திருக்கிறது. அவர்கள் ஜில்லா தோறும் சென்று எந்தந்த இடங்களில் ஓட்டலில் ஹரிஜனங்கள் போகக்கூடாது, கோவிலில் போகக்கூடாது, கிணறு ளில் ஜலம் எடுக்கக்கூடாது, ராஸ்தாவில் போகக்கூடாது என்று சொல்லப்படு

[Sri P. Kakkan] [24th March 1958

கிறதோ, அம்மாதிரி சொல்பவர்கள் மீது தக்க நடவடிக்கைகள் எடுப்பதற்கு அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்து வருகிறார்கள். கனம் ராமசுவாமி அவர்கள் இதற்காக பல பேர்கள் மீது 6 மாத தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார்கள். இது எதைக்காட்டுகிறது ? தமிழகத்திலே இப்படிப்பட்ட செயல்களுக்கு இடம் அளிக்க முடியாது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது. அம்மாதிரி சொல்லுபவர்களுக்கு எதிராக சாட்சியம் அளித்தாவது அவர்களை தண்டனை அடையும்படி செய்யவேண்டுமென்ற கருத்து தமிழ் நாட்டு அன்பர்களுக்கு தோன்றியிருக்கிறது. தீண்டாமையை ஒழிப்பதற்கு இம்மாதிரி பல அன்பர்கள் பாடுபடுகிறார்கள். தீண்டாமையை ஒழிப்பதற்கு முதலிலே தமிழகம் தான் பாடுபட்டது. இப்பொழுதும் தமிழகத்திலுள்ள அன்பர்கள்தான் தீண்டாமையை ஒழிப்பதற்கு பூரணமாக ஒத்துழைத்து உதவி செய்கிறார்கள். ஹரிஜன சேவக் சங்கம், சென்னை தாழ்த்தப்பட்ட வகுப்பினர் லீக், சத்குரு சர்வ சமரச சங்கம் முதலியவற்றிற்கு பிரசாரகர்களை நியமித்து தீண்டாமை பிரசாரம் செய்வதற்கு வருஷத்திற்கு ஹரிஜன சேவா சங்கத்தினர்கள் தாழ்த்தப்பட்டவர்களுக்கு 23,000 ரூபாய் வீதம் கொடுக்கிறோம். ஜில்லாவாரியாக பிரசாரகர்களை போட்டு தீண்டாமை ஒழிப்பு வேலை நடந்து வருகிறது. தாழ்த்தப்பட்ட லீக் நாம் கொடுக்கும் 23,000 ரூபாய் மான்யத்தில் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு பிரசாரகரை நியமித்து தீண்டாமை ஒழிப்பு வேலை செய்து வருகிறார்கள். சத்குரு சர்வ சமரச சங்கம் உதக மண்டலத்தில் கூனூரில் இருக்கிறது. அங்கே ஒரு ஜாதி ஹிந்துவைச் சேர்ந்த ஒரு சகோதரர் உடல், பொருள், ஆவி, மூன்றையும் அர்ப்பணித்து தீண்டாமையை ஒழிப்பதற்காக சேவை செய்து வருகிறார். ஆறு மாதங்களுக்கு ஒரு முறை சுற்றறிக்கை தயார் செய்து மக்கள் மத்தியிலே விநியோகிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதற்கு ஆதரவு கொடுத்து தீண்டாமையை போக்குவதற்கு உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது.

1956–57-ல் விளம்பரத்திற்காக ரூ. 48,000 செலவிடப்பட்டிருக்கிறது. 1958–59-ல் விளம்பரத்திற்காக இந்த பட்ஜெட்டில் ரூ. 2,39,000 சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. 1956–57-ம் ஆண்டில் ஹரிஜன மாணவர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட பள்ளிகளில் படிக்கும் இதர ஜாதி இந்துக்களும் அவர்களோடு கலந்து நண்பகல் உணவு சாப்பிடுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. வட ஆற்காடு, கோயமுத்தூர், நீலகிரி, செங்கல்பட்டு, மதுரை, திருசிராப்பள்ளி ஆகிய மாவட்டங்களில் இந்த உத்தரவு அமுல் நடத்தப்பட்டு வருகிறது. ஹரிஜன மாணவர்களோடு மற்ற ஜாதி மாணவர்களும் சேர்ந்து உணவு உண்ணும்போது அவர்கள் ஒன்றுபட்டு பழகுவதால் அதன் மூலம் தீண்டாமையை போக்குவதற்கு அனுகூலமாக இருக்கிறது.

அடுத்தபடியாக, ஹரிஜன மாணவர்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிற ஹாஸ்டல்களில் முன்னேற்ற சமூகத்தைச் சேர்ந்த இதர ஜாதி ஹிந்து மாணவர்களையும் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்திருக்கிறோம். இந்த ஹாஸ்டல்களில் 10 சத விகிதம் முன்னேற்றம் அடைந்த வகுப்பினரையும் 15 சத விகிதம் பின் தங்கிய வகுப்பினரையும் சேர்த்துக்கொள்ள ஏற்பாடு செய்து, இந்த மாணவர்கள் ஹரிஜன மாணவர்களோடு சேர்ந்து தங்குவதற்கு வழிவகைகள் செய்திருக்கிறோம். இது எதைக் காட்டுகிறது என்றால் இந்த ஹாஸ்டலில் தங்குகின்ற மாணவர்கள் ஒன்றுபட்டு வாழும் போது தீண்டாமை என்ற பிசாசுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்ற ஒரு சிறந்த தத்துவத்தை அவர்கள் உணர வேண்டும் என்பதைத்தான். அவர்கள் ஒரே சம அந்தஸ்தில் வாழ வேண்டுமென்ற நோக்கத்தோடு அரசாங்கம் இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறது. அதே மாதிரிதான் சர்க்கார் நடத்துகின்ற ஹாஸ்டல்களிலும் ஹரிஜன மாணவர்களுக்கு 10 சதவிகிதம் இடம் ஒதுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆசிரியர் பயிற்சி பள்ளியுடனோ அல்லது தொழிற் கல்லூரியுடனோ இணைக்கப்பட்ட விடுதியாக இருந்தாலும் சரி இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. புதிதாக கட்டப்படும் ஹரிஜன காலனிகளில் 100-க்கு 10 சத விகிதம் மற்ற வகுப்பினர்களுக்கு வீடுகள் ஒதுக்கித் தரவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மற்ற வகுப்பினர்களோடு ஹரிஜனங்களும் ஒன்று சேர்ந்து ஒரே தாய் வயிற்று பிள்ளைகள் போல் பழகி வாழ்வதற்கு அரசாங்கம் இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறது.

24th March 1958] [Sri P. Kakkan]

அடுத்தபடியாக, மயானங்களிலே பாகுபாடு இருக்கிறது என்பதை நான் ஒத்துக்கொள்கிறேன். இருந்தாலும் சட்டபூர்வமாக மயானங்களில் பாகுபாடு இருக்கக் கூடாது என்பதற்காக சட்டத்தின் மூலம் தடை செய்திருக்கிறோம். அதேபோல் ஹரிஜனங்களுக்காக மயானத்திற்கு இடம் வாங்கிக் கொடுத்திருந்தாலும் அங்கே ஜாதிஹிந்துக்கள் புதைக்கப்படுவதை தடுக்கக் கூடாது என்ற ஏற்பாட்டையும் செய்திருக்கிறோம்.

ஹரிஜன சேவையில் அதிக ஆர்வம் கொண்டு வேலை செய்யும் அன்பர்களுக்கு மெடல்கள் கொடுக்க ஏற்பாடு செய்திருக்கிறோம். முதல் தரமான மெடல் ரூ. 100 மதிப்புள்ளது. இரண்டாவது தரமான மெடல் ரூ. 50 மதிப்புள்ளது. கனம் அன்பழகன் சிரிக்கிறார்கள். அவர்களுக்கு சிரிப்பாகத்தான் இருக்கும். மனிதனுக்கு மானம் பெரிது. சொத்து, சுகம் எல்லாவற்றையும் விட மானம்தான் மதிப்பு வாய்ந்தது. ஹரிஜன சேவையில் ஆர்வம் உள்ளவர்கள் கஷ்டப்பட்டு சேவை செய்து இந்தப் பரிசுகளை பெறுவதற்கு முன்வரவேண்டுமென்ற நோக்கத்தோடு இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறோம். இம்மாதிரி பரிசு பெற்றவர்களை பின்பற்றி பல அன்பர்கள் இந்தப் பணியில் ஈடுபடவேண்டும் என்பதற்காகத்தான் அரசாங்கம் இந்த ஏற்பாட்டை செய்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். மேலும், தீண்டாமை ஒழிப்புப் பிரசாரத்தை அகில இந்திய ரேடியோவின் மூலம் செய்வதற்கும் அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. அகில இந்திய ரேடியோவில் தீண்டாமை ஒழிப்பு சம்பந்தமான பிரசங்கங்கள் நிகழ்த்தப்படுவதற்கும் நாடகங்கள் நடத்தப்படுவதற்கும் அவசியமான கட்டளையை அரசாங்கம் பிறப்பித்திருக்கிறது. இப்படிப்பட்ட சிறந்த காரியங்களை செய்து தீண்டாமை ஒழிப்பில் அரசாங்கம் மிகவும் அக்கறைகாட்டி வருகிறது. ஆகையால், தீண்டாமையைப் போக்குவதற்கு அரசாங்கம் ஒன்றும் செய்யவில்லை என்று ஸ்ரீ. ஜெகன்னாதன் சொல்வதை நான் ஒப்புக்கொள்ளமுடியாது. ஆனால் ஜனங்களின் மனதை மாற்றுவதில் அரசாங்கம் நூற்றுக்கு நூறு வெற்றிபெறவில்லை என்று சொன்னால் அதை நான் ஒப்புக்கொள்கிறேன். மக்களின் மனதை மாற்றுவதிலும் அரசாங்கம் மிகுந்த அக்கறைகாட்டி வருகிறது. தீண்டாமை ஒழிப்பில் மற்ற அன்பர்களும் அரசாங்கத்திற்கு தங்கள் ஒத்துழைப்பைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கனம் சபாநாயகர் அவர்களே, அரசாங்கம் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்து தொகைகளை எடுத்து பிற்பட்ட இனத்தவர்களுக்காக செலவழிப்பதாக சில கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். அவ்வாறு அரசாங்கம் செய்வதில்லை என்று நான் இந்த சபையில் பலதடவைகள் சொல்லியிருக்கிறேன். இப்போதும் அதை வலியுறுத்துகிறேன். ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒதுக்கப்பட்டுள்ள தொகைகளை இந்த சந்தர்ப்பத்தில் நான் குறிப்பிட விரும்புகிறேன். 1954–55-ல் "ஷெட்யூல்ட காஸ்ட்ல்" க்காக 80,77,000 ரூபாயும், ஷெட்யூல்ட் ட்ரைப்ஸுக்காக 20,000 ரூபாயும், மாஜி குற்ற பரம்பரையினருக்காக 10,77,000 ரூபாயும், இதர பிற்பட்ட வகுப்பினருக்காக 11,75,00,000 ரூபாயும் ஒதுக்கப்பட்டன. 1955–56-ல், ஷெட்யூல்ட் காஸ்ட்ஸுக்காக 77,31,000 ரூபாயும், ஷெட்யூல்ட் ட்ரைப்ஸுக்காக 1,69,000 ரூபாயும், மாஜி குற்ற பரம்பரையினருக்காக 12,68,000 ரூபாயும் இதர பிற்பட்ட வகுப்பினருக்காக 15,01,000 ரூபாயும் ஒதுக்கப்பட்டன. 1956–57-ல் ஹரிஜன மக்களுக்காக 1,13,93,000 ரூபாயும், ஷெட்யூல்ட் ட்ரைப்ஸுக்காக 2.60,000 ரூபாயும், மாஜி குற்ற பரம்பரையினருக்காக 22,07,000 ரூபாயும், இதர பிற்பட்ட இனத்தவர்களுக்காக 20,66,000 ரூபாயும் ஒதுக்கப்பட்டன. 1957–58-ல் ஹரிஜனங்களுக்காக 1,61,72,000 ரூபாயும், ஷெட்யூல்ட் ட்ரைப்ஸுக்காக 9,65,000 ரூபாயும், மாஜி குற்ற பரம்பரையினருக்காக 25,89,000 ரூபாயும் இதர பிற்பட்ட இனத்தவருக்காக 24,47,000 ரூபாயும் ஒதுக்கப்பட்டன. 1958–59-ல் ஹரிஜனங்களுக்காக 166,02,000 ரூபாயும், ஷெட்யூல்ட் ட்ரைப்ஸுக்காக 10,12,000 ரூபாயும், மாஜி குற்ற பரம்பரையினருக்காக 32,37,000 ரூபாயும், இதர பிற்பட்ட இனத்தவர்களுக்காக 24,71,000 ரூபாயும் ஒதுக்குகிறோம். ஒரு தலைப்பின் கீழ் ஒதுக்கப்படும் பணம் இன்னொரு தலைப்பின் கீழ் உள்ள காரியங்களுக்காகச் செலவழிக்கப்படுகிறது என்ற தவறான எண்ணம் கனம் அங்கத்தினர்களுக்கு இருக்கக்கூடாது என்று மிகவும் பணிவுடன் சொல்லிக் கொள்கிறேன். அந்த

[Sri P. Kakkan] [24th March 1958

அந்த தலைப்பின் கீழ் குறிப்பிடப்படும் காரியங்களுக்காக ஒதுக்கப்படும் பணம் அந்த அந்த காரியங்களுக்காக இப்போது செலவழிக்கப்பட்டு வருகிறது. இப்போது ஸ்ரீ முத்திருளாண்டி அவர்கள் ஷரிஜன நல டிரெக்டராக வந்த பிறகு, இந்தக் காரியங்கள் மிகவும் நன்றாக நடக்கின்றன. ஏனென்றால், இதற்கு முன்பெல்லாம் ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கப்படுவதைக் குறித்து வைத்துக் கொள்வதற்கான ரெஜிஸ்டர் எதுவும் வைத்துக்கொள்ளப்பட்டதில்லை. முன்பெல்லாம் வரும் விண்ணப்பங்கள் அங்கீகரிக்கப்பட்டவுடன் அதுபற்றி எந்த ரெஜிஸ்டரிலும் குறித்துக்கொள்ளப் படாது. இப்போது அது குறித்துக்கொள்ளப்படுகிறது. கள்ளர்கள், மறவர்கள், செட்டியார்கள், ஜாதிச் செட்டியார்கள் என்று பல பிற்பட்ட வகுப்பினர்கள் இருக்கிறார்கள். அந்த அந்த வகுப்பைச் சேர்ந்த மாணவர்களுக்கு எத்தனை எத்தனை ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கப்படுகின்றன என்று ரெஜிஸ்டரில் குறித்துக்கொள்ளப்படுகிறது. ரெஜிஸ்டர் சமூக வாரியாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அந்த அந்த சமூகத்திற்கு அந்த அந்த தலைப்பு இருக்கிறது. அந்த அந்த சமூக மாணவர்களுக்கு கொடுக்கப்படும் ஸ்காலர்ஷிப்புகள் அந்த அந்தத் தலைப்பின் கீழ் குறித்துக் கொள்ளப்படும். ஆகவே எல்லா வகுப்பினர்களுக்கும் சரிவர ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கப்பட்டு வருகின்றன. கனம் அங்கத்தினர் ஸ்ரீ விநாயகம் அவர்கள், ஹரிஜனங்களுக்கான பணம் பிற்பட்ட இனத்தவர்களுக்குச் செலவழிக்கப்படுகிறது என்ற தவறான எண்ணம் ஹரிஜனங்களுக்கு இருப்பதால், பிற்பட்ட இனத்தவர்களுக்குக்காக ஒரு தனி டிரெக்டரைப் போட்டு தனி டிரெக்டரேட்டை அமைக்க வேண்டுமென்று கூடச் சொன்னார்கள். அவ்வாறு தனி டிரெக்டரேட்டை அமைத்தால், பிற்பட்ட இனத்தவர்களுக்கான பணம் அந்த டிரெக்டரேட்டுக்குத் தான் செலவாகுமே தவிர உண்மையில் பிற்பட்ட இனத்தவர்களுக்காக போதிய செலவு செய்யப்படாமல் போய்விடும். சமூகத்தில் சில பிரிவினர் மிகவும் பின்தங்கியவர்களாக இருக்கிறார்கள். அவர்களை முன்னேற்றமடையச் செய்வதற்காகத் தான் அரசியலமைப்பில் சில விதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அந்த விதிகளின் பிரகாரம்தான் ஹரிஜனங்களுக்காகவும் ஆதிவாசிகளுக்காகவும் மாஜி குற்ற பரம்பரை மக்களுக்காகவும் அரசாங்கம் பணம் செலவழித்து வருகிறது. அதற்கு ஒரு டிரெக்டரே போதும். பிற்பட்ட இனத்தவர்களுக்காக தனி டிரெக்டர் போட வேண்டுமென்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ விநாயகம் கருதக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர் ஸ்ரீ முத்துகுமாரசாமி, ஸ்ரீ விநாயகம் கூறிய சில விஷயங்களைக் குறிப்பிட்டு "எங்களை நன்றிகெட்ட சமூகம் என்று ஸ்ரீ விநாயகம் சொல்லிவிட்டார்" என்று சொன்னார். ஸ்ரீ விநாயகம் கூறியதை ஸ்ரீ முத்துகுமாரசாமி அவ்வாறு எடுத்துக் கொள்ளக்கூடாது. ஸ்ரீ விநாயகம் எந்த ஒரு சமூகத்தையும் இழிவுபடுத்திப் பேசுபவர் அல்ல. பிறர் செய்த நன்மைகளை மறக்கக்கூடாது என்ற கருத்தை அவர் பொதுப் படையாக வெளியிட்டாரே தவிர, எந்த சமூகத்தையும் அவர் இழிவு படுத்திப் பேசவில்லை. "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது அன்றே மறப்பது நன்று" என்ற வள்ளுவர் வாக்கை அவர் எடுத்துச் சொன்னாரே தவிர, எந்த சமூகத்தையும் அவர் இழிவுபடுத்திப் பேசவில்லை என்று கனம் அங்கத்தினர் ஸ்ரீ முத்துகுமாரசாமிக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1958–59-ல் ஹரிஜனங்களுக்கு மனைக்கட்டுகளுக்காக 10,85,000 ரூபாயும், பாதைகளுக்காக 3,50,000 ரூபாயும், குடிதண்ணீர் வசதிக்காக 3,00,000 ரூபாயும், மத்தியான உணவிற்காக 25,35,500 ரூபாயும், பாடசாலைகளுக்காக 41,00,000 ரூபாயும், ஸ்காலர்ஷிப்புகளுக்காக 11,47,000 ரூபாயும், ஹாஸ்டல்களுக்காக 6,28,000 ரூபாயும், விவசாய ஸப்ஸிடிக்காக 6,40,000 ரூபாயும் வீடு கட்டுவதற்காக 15,09,000 ரூபாயும் ஒதுக்கப்படுகின்றன. இந்தக் காரியங்களுக்காக இவ்வளவு தொகைகளைச் செலவழித்து ஹரிஜனங்களை பொருளாதாரத் துறையில் முன்னேற்றமடையச் செய்ய வேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் குறிக்கோள். முதலில் எல்லா மனிதர்களும் மனிதர்களாக வாழவேண்டும். எந்த மனிதனும் எந்த ஒரு பிற மனிதனையும் இழிவுபடுத்தக்கூடாது. ஜாதியில் உயர்வு-தாழ்வு இல்லை. இந்த நாட்டில் தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்பதுதான் காங்கிரசின் கொள்கை. வர்க்க பேதமோ வகுப்பு பேதமோ இல்லாத

24th March 1958] [Sri P. Kakkan]

சமூகத்தை உருவாக்குவது தான் காங்கிரஸ் அரசாங்கத்தின் கொள்கை. அதற்காகத்தான் அரசாங்கம் பாடுபட்டு வருகிறது. ஹரிஜனங்களுக்கு உத்தியோகச் சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. மேலும் ஹரிஜனங்களுக்கு பல கடன் உதவிகளையும் அரசாங்கத்தார் அளித்து வருகிறார்கள். மாடுகள் வாங்குவதற்காக ஹரிஜனங்களுக்கு மத்திய சர்க்கார் நேரிடையாக பணம் கொடுக்கிறார்கள். கிணறுகள் வெட்டுவதற்காகவும் மத்திய சர்க்கார் அவர்களுக்கு நேரிடையாகப் பணம் கொடுக்கிறார்கள். ராஜ்ய சர்க்காரும் ஹரிஜனங்களுக்கு பல கடன்களைக் கொடுக்கிறார்கள். மத்திய சர்க்காரும் ராஜ்ய சர்க்காரும் ஹரிஜனங்களுக்கு மாடுகள் வாங்குவதற்காக கடன் கொடுத்து வருவது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும். மாடுகள் வாங்குவதற்காகக் கொடுக்கப்படும் கடனைப்பற்றி ஒரு கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். அவர் ஸ்ரீ ராமசாமி பிள்ளை என்று நினைக்கிறேன். வாங்கப்படும் மாடுகளைப் பற்றியும் அவைகளின் விலைகளைப்பற்றியும் கொடுக்கப்படும் கடன் தொகைகளைப்பற்றியும் அவர் குறிப்பிட்டார். மாடுகள் வாங்குவதற்காக மட்டுமின்றி, நிலத்தை உழுவதற்குக் கலப்பையும், பயிரிட விதைகளும் வாங்குவதற்காகவும் அரசாங்கம் பணம் கொடுக்கிறது. ஆக மொத்தம் 255 ரூபாய் அரசாங்கம் கடன் கொடுக்கிறது.

போன பட்ஜெட் கூட்டத்திலே பேசும்போதும் நான் சொன்னேன், மாடு கொடுப்பதிலேயுள்ள குறைகள் ஆங்காங்கே வந்தன. சில நாட்டாண்மைக்காரர்கள், கணக்குப் பிள்ளைகள் பாவம், ஏழைகளிடம் போய் மாடு வாங்குவதென்றால் சில ரூபாய்களை அபகரித்துக் கொள்கிறார்கள் என்று குறைகள் தெரிவிக்கப்பட்டன. அந்த நிலைமையைப் போக்குவதற்காகத் தான் இந்த முறையைக் கையாண்டோம். ஒவ்வொரு ஜில்லாவிலும் ஹரிஜனங்களிடையே இதற்கென 'கான்பரென்ஸ்' வைத்து, மாடு கொடுப்பதிலே என்ன முறையைக் கையாளலாம் என்பது பற்றியும், பூரணமாக அந்த மாடுகளெல்லாம் அவர்களுக்கே போய்ச் சேருகிறதா என்பதைப் பற்றியும், அந்தப் பணம் எல்லாம் அவர்களுக்கே போவதற்கு என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றியும் யோசித்தோம். பிற்பாடு ஜில்லா ஹரிஜன நல அதிகாரி அவர்களையும் அந்தப் பகுதி எம்.எல்.ஏ.க்களையும், ஹரிஜன சேவையிலே ஆர்வம் உள்ளவர்களையும் சேர்த்து நல்ல முறையிலே மாடு வாங்கிக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்தோம். கனம் அங்கத்தினர் திரு. ஜெகன்னாதன் அவர்கள் ஊரில் கூட, அவர்கள் முன்னிலையிலே எட்டு ஜோடி மாடுகள் வாங்கிக் கொடுத்தோம் என்று நினைக்கிறேன். அவர்கள் கண்ணுக்கு எதிரிலேயே அந்த மாடுகள் கொடுக்கப்பட்டன. அவைகள் எல்லாம் ரூ. 50 மட்டும் பெறுமான மாடுகளோ, யோசனை மாடுகளோ அல்ல என்பதையும் அவர்கள் நேரிலே கண்டிருக்கக்கூடும். அவைகளெல்லாம் நல்ல மாடுகள்; வண்டியில் பூட்டி ஓட்டக்கூடிய மாடுகளாக இருக்கின்றன, என்ற காட்சியைப் பார்க்கிறோம். (திரு. ஜெகன்னாதன் அவர்கள் உட்கார்ந்தபடியே குறுக்கீடு) கனம் அங்கத்தினர் பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டும். 4-50 p.m.

மாடுகளை நல்ல முறையில் வாங்கிக் கொடுப்பது மட்டும் அல்லாமல் அவைகளுக்கு 'சீல்' போடும்படியும் சொல்லியிருக்கிறோம். அப்படி 'சீல்' போடுவதிலே கூட ஒரு சிலர் ஏதோ rare ஆக தவறு செய்வதாகத் தெரிகிறது. அப்படித் தவறு செய்பவர்கள் மீதும் தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. தக்க நடவடிக்கை எடுக்கப்படுவதோடு மட்டுமல்ல; கொடுத்த பணமும் நிச்சயம் பறிமுதல் செய்யப்படும் என்று உங்கள் மத்தியில் நான் சொல்லிக்கொள்ளுகிறேன்.

ஹரிஜனங்களைப் பொருளாதாரத் துறையில் முன்னேற்றுவதுமட்டுமல்ல; மாடுகளை வாங்கிக் கொடுப்பது மட்டுமல்ல; பொறுக்கு விதைகள் வழங்குவது மட்டுமல்ல; கிணறுகளை ஆழப்படுத்துவது மட்டுமல்ல; இவையெல்லாவற்றையும்விட முக்கியமாக நிலங்களை ஜாரி செய்து கொடுத்து உதவி செய்வதற்கும் அரசாங்கம் முன்வந்திருக்கிறது.

1952-53-ல் 85,635·65 எக்கராக்களும், 1953-54-ல் 48,750·27 எக்கராக்களும், 1954-55-ல் 56,244·70 எக்கராக்களும், 1955-56-ல் 84,732·98 எக்கராக்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. 1956-57-க்கான புள்ளி

[Sri P. Kakkan] [24th March 1958

விவரங்கள் இங்கு இல்லே. பின்பு அங்கத்தினர்களுக்குத் தெரிவிக்கப்படும். 1957–58-ல் 48,141·63 ஏக்கராக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எங்கெல்லாம் தரிசு நிலங்கள் சாதகமாக இருக்கின்றனவோ அதையெல்லாம். கொடுப்பதற்கு அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது. நிலங்கள் ஜாரி செய்யப்படும்போது, ஹரிஜன சமூகத்தைப் போன்று இதர பின்தங்கிய அல்லது இதர ஏழைகள் இருக்கிறார்களோ அவர்கள் அந்த நிலங்களிலே சாகுபடி செய்துகொண்டிருந்தால் அப்பேர்ப்பட்டவர்களேயும் நாம் அப்புறப்படுத்தலாகாது. எங்கெல்லாம் புறம்போக்கு நிலம் சாதகமாக இருக்கிறதோ அதையெல்லாம் கொடுக்க அக்கறை காட்டப்பட்டு வருகிறது. வருடா வருடம் நடைபெறும் கலெக்டர்கள் மகாநாட்டில் கலெக்டர்களிடம் நாம் வற்புறுத்தி இந்தக் காரியங்களேச் சொல்கிறோம். அதிக அக்கறை காட்ட வேண்டுமென்று அவர்களிடம் ஏற்பாடு செய்கிறோம்.

வருடந்தோறும் இத்தகையவர்களுடைய சுகாதாரத்திற்காக 6 லட்சம் ரூபாய் இந்த அரசாங்கம் செலவு செய்து வருகிறது. வீடு கட்டுவதற்காக 18 லட்சம் ரூபாய் ஒதுக்கி வருடமொன்றுக்கு 3,000 வீடுகள் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. "நம்பிக் கெட்டதனால் பாதகம் இல்லே" என்று சொல்வது போல் நம்பித்தான் நல்ல வீடுகள் கட்ட ஏற்பாடு செய்கிறோம். ஒரு சில பேர்கள் தம்முடைய கடமையைச் சரிவர செய்யாததினால் வீடுகள் சரியான முறையில் அமைவதில்லே. இருந்தாலுங்கூட அதையெல்லாம் இப்பொழுது கவனித்து வருகிறோம். எப்பொழுது யார் வீட்டைக் கட்டினது? எந்த என்ஜினீர் மேற்பார்வை செய்தது? அல்லது எந்த என்ஜினீர் சர்டிபை செய்தது? என்பதையெல்லாம் பரிசீலனே செய்து, ஆசை காரணமாக கடமையைச் சரியாகச் செய்யாத ஒரு சிலர் இருந்தால் அவர்களுடைய "ப்ரமோஷன்" கூட நிச்சயம் தடுத்து நிறுத்தப்படும் என்று சொல்லிக்கொள்கிறேன். அரசாங்கம் எவ்வளவு தூரம் ஹரிஜன மக்களுக்கு என்னென்ன உதவி செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்துகொண்டிருக்கிறது என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

MR. SPEAKER: கனம் அமைச்சர் அவர்கள் பதில் கொடுத்து, மான்யத்தின் மீது வோட்டு எடுக்கும் வரைக்கும் கனம் அங்கத்தினர்கள் சபையில் உட்கார்ந்திருக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் திரு. எல்லப்பன் அவர்கள் தம்முடைய தாலூகாவில் இருக்கும் குறைகளேப்பற்றிச் சொன்னார்கள். அவருடைய வெட்டுப் பிரேரணையை வற்புறுத்தாவிட்டாலும், நோட்டீஸ் கொடுத்திருப்பதால் அதைப்பற்றி தெரிவிக்க விரும்புகிறேன். அவர்கள் தாலூகாவிலே மட்டும் ஐந்து ஏக்கரா நிலம் ஜாரி செய்து 500 வீடுகள் கட்டிக்கொள்ள மனேக்கட்டுகள் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்பதை இங்கே தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

ஸ்காலர்ஷிப் கொடுப்பதிலே கால தாமதம் இருக்கிறதென்று பல அன்பர்கள் சொன்னார்கள். ஹரிஜன இலாகா அதிகாரியைப் பற்றியும், ஹரிஜன நல இலாகாவைப்பற்றியும் குறிப்பிடும்போது அங்கே காலதாமதம் இருப்பதாகச் சொல்லப்பட்டது. காலதாமதம் செய்ய வேண்டும் என்ற சிந்தனே அவர்களுக்கு ஏன் இருக்க வேண்டும், இருந்திருக்குமா என்பதை கனம் அங்கத்தினர்களே சிந்தனே செய்து பார்க்க வேண்டும். எவ்வளவு தூரம் உதவி செய்ய வேண்டுமோ அவ்வளவு தூரம் உதவி செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் தனி இலாகா ஏற்படுத்தப்பட்டது. அதோடு திரு. முத்திருளாண்டி அவர்கள் பின் தங்கிய வகுப்பைச் சேர்ந்தவர். முன்பெல்லாம் அவரை ஹரிஜன் என்றுகூட ரொம்பப் பேர் சொல்வதுண்டு. அவர் இந்தப் பணிக்கு வந்த பிற்பாடு கடந்த மூன்று ஆண்டுகளாக மேலும் நல்ல சேவை செய்திருக்கிறார். நான் முன்பு சொன்னபடி இந்த மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கும் விஷயத்திலும் உதவி செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு வேலே செய்து வந்தார்கள். அவர் அப்படி வேலே செய்ததன் காரணமாக ஒரு பெரிய முன்னேற்றத்தை இந்த மாகாணம் கண்டிருக்கிறது என்று நான் இங்கே சொன்னால் அது மிகையாகாது.

24th March 1958] [Sri P. Kakkan]

என்னுடைய மதிப்பிற்குரிய சகோதரி திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் அந்த ஆபீசிலே ஏதோ மாணவனைக் கொண்டுபோய்க் கேட்டதாக சொல்லப்பட்டது. அதை அவ்வளவாகப் பொருட்படுத்தக்கூடாது என்று நினைக்கிறேன். மக்களுக்காக சேவை செய்கிற அன்பர்கள் அதிகாரிகளையும் தங்களைப் போலவே கருதவேண்டுமேயொழிய, அவர்களை வேண்டா வெறுப்பாகப் பார்க்க வேண்டாமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லா கனம் அங்கத்தினர்களும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கே வந்திருக்கிறார்கள். அவர்கள் சொல்வதையெல்லாம் நிச்சயமாகக் காது கொடுத்துக் கேட்க மந்திரிகள் இருக்கிறார்கள் என்று சொல்லும் போது, அதிகாரிகளும் அப்படிக் கேட்கத்தான் இருக்கிறார்கள். ஆகையால், கனம் அங்கத்தினர்களுடைய கோரிக்கைகளெல்லாம் நன்கு கவனிக்கப்படும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

காலதாமதத்திற்குக் காரணம் நான் அன்றைக்கே திருமதி சத்யவாணி முத்து அவர்கள் ஒரு கேள்வி கேட்டபோது சொன்னேன். அந்தந்த காலேஜ் பிரின்சிபால்களும் உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர்களும் உரிய சமயத்தில் ரின்யுவல் ஸ்காலர்ஷிப்புக்கான விண்ணப்பங்கள் அனுப்பாத காரணத்தால் கிராண்டு வழங்குவதிலே தாமதம் ஏற்பட்டது என்று நான் சொன்னேன். உண்மையை நிரூபிப்பதற்கு ரிக்கார்டு இருக்கிறது. கனம் அங்கத்தினர் அவர்கள் நான்கு குழந்தைகளுக்கு ஸ்காலர்ஷிப் வழங்குவதிலே உள்ள தாமதத்தைப்பற்றிச் சொன்னார்கள். அதிலே ஒரு ஹரிஜனக் குழந்தைக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கப்பட்டு மீதியுள்ளவர்களுக்கும் விடப்பட்டதென்றால் அதற்குக் காரணம் மார்க் போதாமல் இருந்திருக்கும்; அல்லது சரியான விதிமுறைக்கு உட்பட்டு இருந்திருக்காது. இப்படி ஏதாவது ஒரு காரணம் இருந்திருக்குமேயொழிய வேண்டுமென்றே கொடுக்காமல் இருந்திருக்கமாட்டார்கள். திரு. முத்திருளாண்டி அவர்கள் பின் தங்கிய மாணவர்களுக்குக் கொடுக்கக்கூடாதென்ற எண்ணத்தோடு இருந்திருக்கவே மாட்டார் என்று உங்கள் மத்தியிலே நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மத்திய சர்க்காரும் பின் தங்கியவர்களுக்கு ஸ்காலர்ஷிப் கொடுக்கிறார்கள். மத்திய சர்க்கார் ஸ்காலர்ஷிப் மாணவர்களுக்கு வந்து சேருவதில் கால தாமதம் ஏற்படும் காலத்தில் எல்லாம், ஹரிஜன நல இலாகா டைரக்டர் அவர்கள் ரூ. 200 வரையில் முதலிலே ஒரு advance money ஆக கொடுத்து, ஹாஸ்டலுக்கு வெளியாவது இந்தப் பணத்தைக் கொண்டு இருங்கள் என்ற ஏற்பாடு செய்ததன் காரணமாக எல்லா மாணவர்களும் இன்று ஹாஸ்டலில் தங்கி படிக்கிறார்கள். இனிமேல் அப்பேர்ப்பட்ட காலதாமதம் கூட இருக்கக்கூடாதென்பதை அரசாங்கம் நன்கு பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது. ஆகையால், ஏதோ ரொம்பக் காலதாமதம் ஆய்விட்டது, அரசாங்கம் நன்றாகக் கவனிக்கவில்லை என்று அன்பர்கள் சொன்னார்கள். அதை நான் பூரணமாக ஒத்துக் கொள்ளமாட்டேன். இருக்கும் கஷ்டங்களையும் கனம் அங்கத்தினர்கள் யோசித்துப் பார்க்க வேண்டும். வேண்டுமென்றே கொடுக்காமல் கால தாமதப்படுத்தியதாக கனம் அங்கத்தினர்கள் எண்ணிவிடக்கூடாது. ஹரிஜன, பின் தங்கிய மக்களுடைய முன்னேற்றத்திற்கு முதல்படியாக இருப்பது படிப்பு. அந்தப் படிப்புக்கான ஸ்காலர்ஷிப்புகள் வழங்கும் விஷயத்தில் அரசாங்கம் அதிக அக்கறை காட்டி வருகிறது. அந்தக் கல்வியைக் கொடுப்பதிலே அரசாங்கம் எந்தவிதமான காலதாமதமும் செய்யாது என்று நான் உங்கள் மத்தியிலே சொல்லிக்கொண்டு இந்த வெட்டுப் பிரேரணையை கனம் அங்கத்தினர் திரு. ஜெகன்னாதன் அவர்கள் வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தையை முடித்துக் கொள்ளுகின்றேன்.

**MR. SPEAKER :** கனம் மந்திரி அவர்கள் கொடுத்த பதிலுக்குப் பிறகு கனம் அங்கத்தினர் தன்னுடைய வெட்டுப் பிரேரணையை வற்புறுத்துகிறார்களா ?

**SRI M. JAGANNATHAN :** வற்புறுத்துகிறேன்.

[24th March 1958

MR. SPEAKER : The question is—

"That the allotment of Rs. 2,33,44,500 under Demand XXII —Harijan Uplift be reduced Rs. 100."

The cut motion was put and lost.

MR. SPEAKER : I shall now put the Demand to the vote of the House. The question is—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,33,44,500 under Demand XXII—Harijan Uplift."

The Demand was put and carried and the Grant was made.

5–00 p.m. MR. SPEAKER : *நான் இந்த சபையை நாளைக் காலை* 8½ *மணி வரை ஒத்திவைக்கிறேன்.*

The House then adjourned.

V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

**A. Statutory rules, orders and notifications.**

82. *Notification issued with G.O. Ms. No.* 300, *Home, dated* 4*th February* 1958 *amending rule* 3 *of the Madras Motor Vehicles Rules*, 1940. [*Laid on the Table of the House under section* 133 (3) *of the Motor Vehicles Act*, 1939 (*Central Act IV of* 1939).]

83. *Notification issued with G.O. Ms. No.* 302, *Home, dated* 4*th February* 1958 *exempting from payment of tax leviable under the Madras Motor Vehicles Taxation Act*, 1931, *the Jeep bearing serial number* 54148–14080 *with Motor No. IT*-70977 *imported for the use of Mr. Erven J. Long, Agricultural Consultant attached to the Government of Mysore under the Technical Co-operation Mission to India.* [*Laid on the Table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act*, 1931.]

**B. Reports and other papers.**

41. *Statement showing the decision taken on the recommendation of Doctor Lokanathan, in his report on the simplification and improvement of Sales Tax System in Madras.*

42. *Short review of the activities and achievements of the Civil Supplies Department of the Madras Government for the first half year of* 1957.